DR. SAMUEL HAHNEMANN'S

# ORGANON
OF
# MEDICINE

(TAMIL)

Dr. V. R. MURTY

ஹானிமெனின்

# ஆர்கனன்



(Dr. Samuel Hahnemann's Organon of Medicine)



தமிழ் ஆக்கியது:
டாக்டர் *V. R.* மூர்த்தி
டைரெக்டர், இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்
கும்பகோணம்
&
டாக்டர் *S. N. K.* மூர்த்தி
பம்பாய்

பிரசுரம்:
**இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்**
**கும்பகோணம் & சென்னை**

விலை ரூ. 3

First Edition — 1955




Dr. Samuel Hahnemann's

# ORGANON OF MEDICINE

(TAMIL TRANSLATION)




Publishers:
INDIAN INSTITUTE OF HOMOEOPATHS
Homeo House, Kumbakonam

# சமர்ப்பணம்

ஹோமியோபதி வைத்திய முறையைத் தமிழ் மொழியிலேயே படித்துத் தேர்ந்து, யாதொரு வைத்திய வசதியுமில்லாத நூற்றுக் கணக்கான தமிழ்நாட்டு கிராமங்களில் நோயுற்று வாடித் தவிக்கும் நம் தமிழ்மக்களுக்கு அரிய சேவை செய்யும் எண்ணற்ற ஹோமியோபதி சகோதரர்களுக்கு இந்த நூல் அன்புடன் சமர்ப்பிக்கப்படுகிறது.

# முகவுரை

இன்று தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளிலும் ஹோமியோபதி வைத்தியமுறை பரவி இருக்கின்றது. இவ் வைத்தியத்தை நல்ல முறையில் கையாள மெட்டீரியா மெடிகாவின் ஞானத்துடன் நல்ல அறிவு, ஆற்றல், அனுபவம் இவை தேவை. இவைகள் எல்லாவற்றையும் விட, ஹோமியோபதியின் தந்தை எழுதிய மூல கிரந்தமாகிய "ஆர்கனன் ஆப் மெடிஸன்" என்னும் நூலிலுள்ள விஷயங்கள் நிச்சயமாகத் தெரிந்தால் தான் ஒருவர் இவ் வைத்தியமுறையைப்பற்றி நன்கு தெரிந்தவராகக் கருதப்படுவர். "ஆர்கனன்" என்னும் ஹோமியோபதி வைத்தியத்தின் மூலக் கிரந்தம் டாக்டர் சாமுவேல் ஹானிமென் அவர்களால் ஜெர்மென் பாஷையில் எழுதப்பட்டு, அவர் ஆயுட் காலத்தில் ஆறு திருத்திய பதிப்புக்கள் வெளிவந்தன. பின்னர், இந்த நூலின் ஆங்கில மொழி பெயர்ப்புகளில் பல வெளிவந்துள்ளன.

சென்ற பதினைந்து வருட காலமாக நாம் ஹோமியோபதி நூல்களில் பலவற்றை நம் தாய் பாஷையாகிய தமிழில் வெளியிட்டு வருகிறோம். இது வரையில் பல சிறு நூல்களைத் தவிர "மெட்டீரியா மெடிகா", "சிகிச்சைக் களஞ்சியம்" போன்ற விரிவான நூல்களையும் தமிழில் எழுதிப் பிரசுரித்திருக்கிறோம். இப்பொழுது ஹோமியோபதி வைத்திய முறையின் மூலக் கிரந்தமாகிய "ஆர்கனன்" என்னும் நூலைத் தமிழில் ஆக்கி நம் வாசகர்களுக்கு அளிக்கிறோம்.

இப் புத்தகத்தில் டாக்டர் ஹானிமென் அவர்களின் மூல சுலோகங்களே தரப்படுகின்றன. இந்த சுலோகங்களில் பலவற்றிற்கு டாக்டர் ஹானிமென் அவர்கள் விரிவான குறிப்புகளும் எழுதியுள்ளார்கள். இவற்றைத் தனியாகத் தொகுத்து வெளியிடும் உத்தேசத்தோடு இப் புத்தகத்தில் இது விடப்பட்டிருக்கின்றது.

பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் எல்லாப் பாடங்களும் பிரதேச மொழிகளிலேயே போதிக்கப்பட வேண்டும் என்பது தற்சமயம் வற்புறுத்தப் படுகின்றது. எல்லா நூல்களையும் இதர பாஷைகளிலிருந்து தமிழில் மொழி பெயர்க்க வேண்டுமென்று கூறப்படுகிறது விஞ்ஞான வார்த்தைகளை எப்படித் தமிழாக்குவது என்பது இன்னமும் சர்ச்சைக்குறிய விஷயமாகவே இருந்து வருகின்றது. எனினும், இந்த சர்ச்சைகள் எழுவதற்கு பல காலம் முன்பே நாம் ஹோமியோபதி நூல்களைத் தமிழில் ஆக்கி வெளியிட ஆரம்பித்தோம். மருந்துகளின் பெயர்கள், மற்றும் பல விஞ்ஞான வார்த்தைகளை சாதாரணமாக ஆங்கிலத்தில் கூறப்படுவது போலவே தமிழில் எழுதி இருக்கிறோம். இவ்வாறு செய்வதுதான்

அனைவருக்கும் எளிதில் புரியும் வண்ணம் இருக்கும் என்பது நமது அபிப்பிராயம். நம்மால் இதற்கு முன் வெளியிடப்பட்ட ஹோமியோபதி நூல்களிலும் இந்த முறையே நம்மால் கையாளப்பட்டது. இது சாதாரணமாக அனேகராலும் வரவேற்கப்படுகிறது.

"ஆர்கனன்" மொழி பெயர்ப்பு சற்று சிரமமானது. எனினும், அனைவருக்கும் புரியும் வண்ணம், சாதாரணமாகப் பேசும் பாஷையில் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. இதில் பிழைகளிருக்கலாம். பிழைகள் எங்களுக்கே தெரிந்தாலும், அன்பர்கள் அறிவித்தாலும் அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்கிறோம்.

எங்களால் இதுவரையில் தமிழில் எழுதி வெளியிடப்பட்ட ஹோமியோபதி நூல்களை வரவேற்று ஆதரித்ததுபோல் நம் தமிழ் மக்கள் இந்த எங்கள் முயற்சிக்கும் ஆதரவு தருவார்கள் என எதிர்பார்க்கிறோம்.

இந்த மொழிபெயர்ப்பு எங்களால் வெளியிடப்படும் "ஹோமியோபதி" என்னும் மாத சஞ்சிகையில் ஏற்கனவே தொடர்ச்சியாக வெளிவந்தது. இம்முயற்சியில் நமக்கு உதவிய பம்பாய் டாக்டர் *S. N. K.* மூர்த்தி அவர்களுக்கும் கடமைப்பட்டிருக்கிறோம்.

கும்பகோணம்,
12—8—'55.

(டாக்டர்) ***V. R.* மூர்த்தி**

# ஹானிமெனின் ஆர்கனுன்

## Dr. Samuel Hahnemann's Organon of Medicine

### ஹோமியோபதியின் சாரம்

---

### முன்னுரை

ஹோமியோபதி வைத்திய முறையை உண்மையாகக் கையாள விரும்பும் ஒவ்வொருவரும் ஹோமியோபதியின் அடிப்படையான மூல கிரந்தங்களின் வழிகளைத் தெரிந்து கொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும். ஏனெனில் இவ்வாறு மூல கிரந்தங்களிலுள்ள விஷயங்களைத் தெளிவாகத் தெரிந்துகொண்டால்தான் ஹோமியோபதி வைத்திய முறையைக் குற்றமற அப்பியசிக்க ஏதுவுண்டாகும். ஹோமி யோபதி வைத்திய முறைக்கு மூலாதாரமானதும் அதனுடைய மூலாதாரமான கிரந்தமானதுமான புத்தகத்திற்கு "**ஆர்கனுன் ஆப் மெடிசன்**" என்று பெயர். இப் புத்தகம் டாக்டர் சாமுவேல் ஹானிமென் அவர்களால் முதன் முதலில் வெளியிடப்பட்டது. அன்னுருடைய வாழ்க்கைக் காலத்திலேயே ஆறு பதிப்புகள் வரையில் இது பிரசுரிக்கப் பட்டது. இப்புத்தகத்தின் மூலம், முதலில் ஜெர்மன் பாஷை யில் இருந்தாலும் அதை ஒன்றிரண்டு பிரபல டாக்டர்கள் ஆங்கில பாஷையில் ஆக்கினர். இவ்வாறு ஆங்கிலத்தில் டாக்டர் சாமுவேல் ஹானிமென் அவர்களின் "ஆர்கனுன் ஆப் மெடிசன்" என்னும் புத்தகத்தை ஆக்கியவர்கள் அதிலிருக்கும் ஒவ்வொரு சுலோகத்திற்கும் பற்பல வியாக்கியானங்களையும் எழுதியிருக்கின்றனர். இதுவரையிலும் இந்த மிகவும் அவசிய மான நூல் தமிழ் பாஷையில் வெளிவரவில்லை. ஆங்கில மொழி பெயர்ப்பில் மிகவும் சுலபமான நடையில் எழுதியும்கூட, அதற்கு வியாக்கியானங்களோ அல்லது விரிவுகளோ பல புத்தகங்கள் எழுதக்கூடும்படி அவ்வளவு அர்த்தபுஷ்டி கூடிய கருத்துகளை, டாக்டர் ஹானிமென் அவர்கள் இந்நூலில் வெளியிட்டிருக்

கின்ருர். நமது தேச பிதா **மகாத்மா காந்தி** அடிகள் அவ்வப்போது வெளியிட்ட அநேக விஷயங்கள், எவ்வளவு தெள்ளிய நடையிலும் அனைவருக்கும் புரியும் வண்ணமும் இருந்தாலும், அவைகள் ஒவ்வொன்றிலும் அநேக அர்த்தபுஷ்டி யுள்ள விஷயங்கள் அடங்கியிருப்பதுபோல, இந்த ஹானிமென் அவர்களின் மூல கிரந்தமும் அநேக அர்த்தபுஷ்டியுள்ள விஷயங்களை உள்ளடக்கிக்கொண்டவைகளாக இருக்கின்றன என்பதில் நாம் பெருமைப்படுகிறேம்.

இந்த மூல கிரந்தத்தில் உள்ள விஷயங்களைப் படித்து மனதில் வாங்கி அவைகளையும் வைத்துக்கொண்டு ஒருவர் ஹோமியோபதி வைத்தியத்தை பழகுவாராஞல் அவருக்கு எவ்விஷயமும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும் என்பதும், ஹோமியோபதி வைத்திய சம்பந்தமாக யாதொரு விதமான சந்தேகமும் அவருக்கு ஒரு போதும் தோன்ருது, என்பதும் உண்மையான விஷயங்கள் ஆகும். டாக்டர் ஹானிமென் அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுத் தான் கண்டு பிடித்த அனுபவங்களின் பலனை அனைவரும் தெரிந்துகொண்டு மேலே செல்லவும் மிகவும் உபயோககரமான வழியில் உபமான உபமேயங்களோடு இப்புத்தகத்தை எழுதியிருக்கின்ருர்.

## "ஆர்கனுன்"

ஆர்கனுன் என்னும் வேதத்திற்கு சமானமான நூலானது ஆங்கிலத்தில் 291 சுலோகங்களால் (Paragraphs) ஆக்கப் பட்டிருக்கின்றது. இவைகளை நாம் ஒவ்வொன்ருக எடுத்துக் கொண்டு விபரமாகவும் தெளிவாகவும் தெரிந்துகொள்ளுவதற்கு முன் பொதுவாக இவ்வளவு சுலோகங்களிலும் முக்கியமான கருத்துக்கள் எவ்வெவ்வாறு அடங்கி இருக்கின்றன என்று தெரிந்துகொள்ளுவது அவசியமாகின்றது. அவை பின்வரு மாறு பிரிக்கக்கூடியவைகளாக இருக்கும்.

சுலோகங்கள் 1 முதல் 71 வரை ஹோமியோபதியின் தத்து வத்தின் உண்மையையும் அவைகளுடைய வழிகள், முறைகள் முதலியவற்றையும் விளக்குகின்றன.

சுலோகங்கள் 72 முதல் 104 வரையில் ஒவ்வொரு வியாதி யினுடைய விபரங்களைத் தெரிந்துகொள்ளுவதற்கு வேண்டிய வழிகளை விரிவாகத் தெரிவிக்கின்றன.

சுலோகங்கள் 105 முதல் 244 வரையில் இந்த சுலோகங் களினால் மருந்துகளின் குணங்களையும் அவைகளை வியாதியை சொஸ்தப்படுத்துவதற்கு உபயோகப்படுத்தும் வழிகளையும் தெளிவாகக் கூறப்பட்டு இருக்கின்றன.

சுலோகங்கள் 245 முதல் 258 வரையில் வியாதியுற்று இருக் கும் ஜனங்களுக்கு மருந்துகளை எந்தெந்த முறைகளால் கொடுக்கவேண்டுமென்று தெரிவிக்கப்பட்டு இருக்கின்றது.

சுலோகங்கள் 259 முதல் 263 வரையில் மருந்துகள் சாப்பிடும்பொழுது உணவு வகைகளின் அளவும், அவை களைப்பற்றிய சட்டதிட்டங்களும் விளக்கமாகக் கூறப்பட்டிருக் கின்றன.

சுலோகங்கள் 264 முதல் 271 வரையில் ஹோமியோபதி முறையில் மருந்துகள் தயார் செய்யும் முறையும், அவைகளைச் சேகரிப்பது, வீரியத்தை அதிகப்படுத்துவது, அவைகளைப் பல வருஷங்களுக்குக் கெடாமல் வைத்திருக்கும் முறைகள் முதலிய வைகளை விபரமாக வெளியிடப்பட்டு இருக்கின்றன.

இதன்பின் சுலோகங்கள் 272 முதல் 285 வரையில் மருந்து களை எந்தெந்த வீரியத்தில் எந்தெந்த வழியாகப் பிரயோகம் செய்வது என்பது போன்ற விஷயங்கள் காணப்படுகின்றன.

கடைசியாக 286 முதல் 292 வரையிலுள்ள சுலோகங்களி னால் எலக்ட்ரிக் பவர், காந்தம், மனோதிடத்தினால் வியாதியை அகற்றல், உடம்பைப் பலவித நீராடுதலினாலும் மற்றும் அநேகவிதமான தேய்ப்புகளினாலும் (Massage) குணப்படுத்தும் வகைகள் முதலியவைகள் விளக்கப்பட்டிருக்கின்றன.

இவைகளெல்லாவற்றிலும் 81 முதல் 104 சுலோகங்கள் வரையில் மிகவும் தெளிவாக ஒவ்வாரு வியாதியஸ்தரையும்

எவ்வாறு பரிசோதிப்பது, எப்படி வியாதிகளின் போக்குகளை ஆராய்ந்து அறிந்துகொள்வது, தோன்றிமறையும் வியாதிகளுக்கு அடிப்படைக்காரணபூதமாக நிற்கும் நிலைகளின் தன்மைகளையும் அறிந்துகொண்டு வியாதியை கவனிப்பதற்கு மிகவும் அபூர்வமான வழிகளை காண்பித்திருப்பதால் இந்த ஆர்கனனில் ஒவ்வொரு சுலோகமும் முக்கியமாயிருந்தால்கூட, இந்த சுலோகங்களை நாம் எவ்வளவுக்கெவ்வளவு கவனமாகப் படிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நன்ருகப் புரிந்துகொள்ளலாம் என்பதும், இவைகளைப் படிப்பதன் மூலம் நாம் உண்மையிலேயே நல்ல முறையில் ஹோமியோபதியை மனதில் வாங்கி அதைக் கையாளலாம் என்பதையும் அறிந்துகொள்ளவேண்டும்.

படிக்கப் படிக்கத் திகட்டாததும், தெளிவில் இதற்கு சமானமானது இல்லாததுமாகிய கிரந்தமாயிருப்பதினுல், இது மிகவும் பெரிய ஹோமியோபதி வைத்திய அதிபர்கள் கூட அடிக்கடியும் படித்து சந்தேகங்கள் இல்லாமல் புரியும்படியாக மனதில் வாங்கி வைத்துக்கொள்ளவேண்டிய விஷயங்கள் ஆகும்.

---

# ஹோமியோபதியின் ஆர்கனன்.

## ஸ்லோகம் 1

"ஒரு வைத்தியனின் உயர்ந்ததும் முக்கியமானதுமான காரியம் வியாதியுற்றவரை வியாதியற்றவராகச் செய்வதே."

[அதாவது ஒரு மனிதனின் சரீரம் தன் சாதாரண நல்ல நிலைமையிலிருந்து மாறுபட்ட தன்மையையும் காரணத்தையும் தெரிந்து கொண்டு அதன் விளைவுகளினால் உண்டான விஷயங்களிலேயே உழலாமல், மூல காரணத்தை மனக்கண்ணால் ஆராய்ந்து அறிந்து, அதை நிவர்த்தித்து, சரீரத்தை மறுபடியும் வியாதியில்லாத பழைய நிலைமைக்குக்கொண்டுவருவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும்.

பழைய நிலைமைக்குக்கொண்டுவரவேண்டுமென்று சொல்லும்போது வியாதியால் தோன்றுகிற குறிகளைச் சிறிது காலத்திற்கு மருந்துகளினால் மாறும்படியாகவோ அல்லது மறையும்படியாகவோ செய்யாமல் அவைகளை அடியோடும், நிரந்தரமாகவும், ஒழியச்செய்து, வியாதியற்ற நிலைமையை அடையச் செய்வதுதான் ஒரு உண்மையான வைத்தியனின் உயர்ந்த லக்ஷியம்.]

## ஸ்லோகம் 2

"வியாதி சொஸ்தம் செய்யப்படுவதற்கு மிகவும் உயர்ந்த நோக்கம், துரிதமாகவும், மிருதுவாகவும், நிரந்தரமாக வியாதி நீங்கும் வழியிலும், அதாவது வியாதியின் சேஷம் தெரிந்தோ தெரியாமலோ சரீரத்தில் பாக்கி இல்லாத வகையிலும், அம்முழு வியாதியும் மிகவும் குறைந்த காலத்திலும், நம்பத்தகுந்தபடியும், (கொடுக்கப்படும் ஔஷதங்களினால்) ஆபத்தில்லாமலும், ஒரு வறையறுக்கப்பட்ட கொள்கையுடனும் இருக்கவேண்டும்."

[இந்த இரண்டாவது ஸ்லோகத்தின் தாத்பர்யம், வியாதியை சொஸ்தம் செய்யப்புகின் அதற்குச் சில வறையறுக்கப்பட்ட கொள்கைகள் இருக்கவேண்டுமென்பதும், தவிர, அப்படிச் சொஸ்தம் செய்யப்படுவது துரிதமாகவும் இருக்கவேண்டுமென்பதும், அடுத்தபடியாக

வியாதிக்குச் செய்யப்படும் சிகிச்சையால் வியாதியஸ்தருக்கு யாதொரு கெடுதலும் ஏற்படாமலிருக்க வேண்டுமென்பதும், அவ்வாறு செய்யப் படும் சிகிச்சையால் வியாதி முழுவதும் வேரறுக்கப்பட்டு அதன் ஒரு சிறிய அம்சம்கூட பாக்கியில்லாமல் வியாதியஸ்தர் முழு சௌகரியம் அடையவேண்டுமென்பதும்; அவ்வாறு ஏற்படும் சௌகரியம் மிகவும் குறைந்த காலத்தில் ஏற்படவேண்டுமென்பதுமாகும். இவைகளையும் தவிர இன்னும் இரண்டு முக்கியமான விஷயங்களையும் இந்த ஸ்லோகத்தின் மூலம் டாக்டர் ஹானிமென் அவர்கள் தெளிவுபடுத்தி யிருக்கின்றார்கள். அவை, நாம் ஔஷதங்கள் என்று கொடுக்கும் வஸ்துக்களால் அவ்வியாதியஸ்தருக்குச் சிறிதளவுகூட அசௌகரி யமோ அல்லது கெடுதலோ ஏற்படக்கூடாது என்பதும், ஒவ்வொரு வியாதியுற்ற நிலைமைக்கும் நிச்சயமாக நிரூபிக்கப்பட்ட வகையில் வரையறுக்கப்பட்ட கொள்கையினால் கண்டுபிடிக்கப்பட்ட ஔஷதத்தைக் கொடுக்கவேண்டுமென்பதும் ஆகும். இம்மாதிரியாக வியாதிக்கு ஔஷதம் கொடுப்பது ஹோமியோபதி வைத்தியமுறை ஒன்றைத் தவிர வேறு முறைகளில் இல்லை என்பது பிரஸித்தம்.]

## ஸ்லோகம் 3

**"வைத்தியன், வியாதிகளில் சொஸ்தம் செய்ய வேண்டியன யாவை என்பதையும், (வியாதிகளின் தன்மைகளை சரிவர அறியவேண்டியது) மருந்துகளில் குணப்படுத்தும் முக்கியமான குணங்கள் என்ன இருக்கிறதென்றும் (மருந்துகளின் குணாதிச யங்கள்) அறிந்துகொள்ள வேண்டும். தவிர வியாதிகளின் போக்கை அறிந்து, தான் கொடுக்க வேண்டிய மருந்துகள் ஒரு சட்ட நிர்ணயமான வழியைப் பின்பற்றியிருப்பதோடு அது வியாதியஸ்தரின் குறிகளுக்கு ஏற்றதா, மருந்துகள் சரியான முறையில் கணக்குப்படி தயாரிக்கப்பட்டதா, கொடுக்கவேண்டிய முறை, அனுமானம் முதலியவைகளையும் மருந்து கொடுத்த பிறகு மறுபடியும் மறுமுறை மருந்தை கொடுக்க வேண்டிய கால நிர்ணயமும், ஒவ்வொரு தனிப்பட்ட கேஸிலும் கொடுக்கப் பட்ட மருந்து சரியாக வேலை செய்கிறதா, அல்லது அவைகள் தன் வேலையைச் செய்வதற்கு (குணத்தை உண்டாக்குவதற்கு) ஏதாவது தடங்கல், தெரிந்தோ, அல்லது தெரியாமலோ, ஏற்படு கிறதா; அப்படி ஏற்பட்டால் அதையும் நிவர்த்தித்து, கொடுத்த**

மருந்து தன்னுடைய வேலையைச் சரிவர செய்து குணத்தை உண்டாக்குகிறதா என்றும் தெரிந்து கொண்டால்தான், அடையவேண்டும் என்று விரும்புகிற வியாதியின் நிவாரண மானது நிலைத்து நீடித்ததாயிருக்கும். இந்த மிகவும் முக்கிய மான குறிப்புகள் தெரிந்தால்தான் உண்மையான முறையிலும் ஒரு ஒழுங்கான முறையிலும் வியாதிகளை குணம் செய்ய ஏதுவாகும். இப்படிக் கையாளுகின்ற வைத்தியர்களையே உண்மை வைத்தியர்கள் என்று சொல்லவேண்டும்."

**(கருத்து)** ஹோமியோபதி வைத்தியத்தை உண்மையாகக் கையாள வேண்டுமானல் கீழ்க்கண்ட விஷயங்களை ஒவ்வொரு வைத்தியனும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்.

(1) வியாதிகளின் பொதுவான ஆரம்ப நடை, முடிவு (இதன் மனக்குறிகள், பொதுக்குறிகள். விசேஷக் குறிகள்)

(2) மருந்துகளை மக்களுக்காகத் தியாகம் செய்து தான் சாப்பிட்டு ஒழுங்கு முறையில் (Proving) நிருபிக்கப்பட்ட மருந்து களின் மன, பொது, விசேஷக் குறிகள்.

(3) மருந்துகளைச் சேகரித்துத் தயாரிக்கும் முறைகள் உபயோ கப்படுதல் வீரியத்தின் அளவு நிர்ணயங்கள்.

(4) உபயோகப்படுத்தப்பட்ட மருந்தின் விளைவுகளினுல் வியாதி குணமடைகின்றதா அல்லது ஏதாவது நோயாளிகளின் பழக்க வழக்கங்களினுல் தடைப்பட்டுத் தன்னுடைய வேலையைச் செய்ய முடியாமல் வியாதி தான் எதிர்பார்த்தபடி குணமடையவில்லையா என்றும்,

(5) அப்படித் தடங்கல்கள் வந்தால் அவைகளை நிவர்த்திக்கும் முறைகள்.

(6) கடைசியில் முக்கியமான ஹோமியோபதியின் * பஞ்ச ரத்தினங்களில் ஒருவரான அமெரிக்கா தேசத்து புகழ்பெற்ற டாக்டர் **காரோல் டன்ஹம்** சொல்லியிருக்கிறபடி ஒவ்வொரு வைத்தியரும் ஒரு வியாதியஸ்தனைக் காணக் கூப்பிடப்பட்டவுடன் ஏதோ ஒரு மருந்து

---

*** பஞ்ச ரத்தினங்கள் என்று கருதப்பட்ட டாக்டர்கள் :**

(1) ஹானிமென் Hahnemann
(2) டன்ஹம் Dunham
(3) கெண்ட் Kent
(4) ஹெரிங் Herring
(5) போனிங்ஹாஸன் Boenninghausan

ஒன்றினுல்தான் அவ்வியாதியைக் குணமாக்கக்கூடும் என்று முன் கூட்டி நிச்சயித்துக்கொள்ளாமல் அவ்வியாதி ஆகார பேதத்தினுலோ, அல்லது அவ்வப்போது உண்டாகும் இடையூறுகளினுலோ ஏற்பட்டதா என்று கவனிக்கவேண்டும். ஒரு குழந்தைக்குச் சட்டையில் முதுகுப் பக்கம் போட்டிருக்கும் ஸேப்டிபின் குத்துவதால் அது அழலாம். பெரியவர்களுக்கோ திடீரென்று பழக்கமாக இருந்துவந்த ஆகாரமோ பானமோ திடீரென்று நிறுத்தப்பட்டதால் ஏற்பட்டிருக்கலாம். அல்லது புது வழக்கத்தினுல் ஏற்பட்டிருக்கலாம். அதாவது உணவு வகைகளை யும், அவர்கள் வசிக்கும் இடத்தையும், செய்யும் தொழிலையும் கவனித்து நீக்கவேண்டியவற்றை நீக்கி, கொள்ளவேண்டியவற்றை அளவு திட்டத்துடன் கொள்ளும்படியாக, நோயாளிகளின் மனதுக்குப் படும்படியாகச் சொல்லி அவர்கள் குணமடைவதற்கு மருந்தும் அவசிய மிருந்தால் மருந்துகளையும் கொடுக்கவேண்டும். ஏனென்ருல் சில வியாதிகளில் இந்த மாறுதல்களினுலேயே நோயாளிகள் குணமடைகின்றனர்.]

## ஸ்லோகம் 4

**“உடம்பினுடைய நல்ல நிலையைக் கெடுத்து வியாதிகளை உண்டாக்கும் பதார்த்தங்களையும், அப்படி உண்டானபோது அவைகளை நல்ல நிலைமையுள்ள உடம்பில் அணுகவிடாமல் பாதுகாப்பதும் ஒரு வைத்தியனுடைய கடமையாகும்.”**

**(கருத்து)** உலகத்தில் மருந்துகள் முதலியனவற்றை மட்டும் படித்துவிட்டு வைத்தியம் செய்வதைவிட சாதாரணமாக அந்த அந்த நாட்டுக்கோ, தேசத்திற்கோ தகுந்தபடி வியாதிகளை உண்டாக்கக்கூடிய பதார்த்தங்களையும், அதுமட்டுமல்லாமல் அவைகளை நீக்குவதற்கு வேண்டுவன என்ன வென்றும், தெரிந்துகொண்டு, தான் செய்ய வேண்டியது என்ன? மருந்து கொடுத்து வியாதியை அகற்றுவதுடன் கூட வியாதியஸ்தர் (தனக்கு கெடுதல் என்று தெரியாமல்) உபயோகிக்கும், அல்லது அனுஷ்டிக்கும், பழக்க வழக்கங்களில் மாற்ற வேண்டியவற்றை மாற்றி அனுசரிக்க வேண்டியவைகளை தெளிவுபடச் சொல்லி, வியாதியஸ்தர்களை வியாதியினின்றும் நீக்குவதும் வியாதி வராமல் பாதுகாப்பதும் உண்மையான நோயகற்றுவதின் சட்டங்களாகும்.

## ஸ்லோகம் 5

வியாதிகளைச் சொஸ்தம் செய்யவேண்டியதற்கு அனுகூல மாக இருக்கக்கூடிய முக்கியமான விஷயங்கள், அவ்வப்போது தோன்றி மறையும் வியாதிகளில் வியாதியை கிளப்பிவிடும் காரணங்களும்; உள் அமுக்கப்பட்டிருக்கும் நாட்பட்ட வியாதி யின் விபரத்திலிருந்து தெரிந்துகொள்ளும் முக்கியமான அம்ச மாகிய வியாதியின் மூலகாரணம் இவைகளைத் தெரிந்து கொள்வதில் வியாதியஸ்தருடைய குணுதிசயங்கள், அவருடைய தொழில், வசிக்கும் நிலைமை, சமுகத்தில் பழகும் தன்மைகள், இவைகளால் உண்டாகக்கூடிய நிலைமைகள், வயது, ஜனனேந் திரியங்களின் நிலைமை, அதன் மாறுபாடுகள், முதலியவைகளை யும் தெரிந்துகொள்வது உபயோககரமாக இருக்கும்.

## ஸ்லோகம் 6

உண்மை நோய் பாதுகாப்பாளர் முன்கூட்டியே மனதில் (கேஸைப் பார்ப்பதற்கு முந்தியே ஒரு தீர்மானத்துக்கு வராதவர்) அப்படியோ அல்லது இப்படியோ என்று தன் மனது போன போக்கின்படி வியாதியஸ்தரைப் பார்க்காமலேயே நிச்சயம் செய்துகொள்ளாமல், தன்னுடைய கூர்மையான புத்திசாலித்தனத்தைப் பல வழிகளிலும் சிதறவிடாமல், தன்னிடம் வந்த வியாதியஸ்தரின் மன, உடல், நிலை மாறுதல்களையும் அவைகளை உண்டாக்கிய விஷயங்களையும் பார்த்துக் கேட்பதினுல் தெரிந்துகொண்டும், வியாதியஸ்தர் சொல்லுவது, உணருவது, தன் நல்ல நிலைமையிலிருந்து மாறி வருந்தும்போது தோன்றும் எண்ணங்கள், அவயவங்களின் தொழில்களின் தடையோ அல்லது மாறுதல்களோ முதலிய வற்றையும், வியாதியஸ்தரின் பந்துக்கள், சிநேகிதர்கள், பக்கத்திலிருப்பவர்கள், முதலியவர் சொல்லும் விஷயங் களிலிருந்தும், வைத்தியர் தன்னுடைய அனுபவ முதிர்ச்சியின் வாயிலாக வியாதியஸ்தரின் நடை உடை பாவனைகள் முதலியனவற்ருலும் தெரிந்துகொள்ள வேண்டுவதே வியாதி யின் உண்மைப்படமே ஒழிய, சொந்த அபிப்பிராயம் வியாதியின் படமல்ல என்பதை நிதர்சனமாக ஒவ்வொரு வைத்தியரும் அறியவேண்டும்.

(ஒரு வியாதியின் மூலகாரணம் நம்மால் பார்க்கமுடியாதது. ஆனால் காரணத்தின் விளைவுகளான **தோற்றங்களினால்தான்** நாம் மனிதன் வியாதியுற்றிருக்கிறான் என்று தெரிந்துகொள்ளுகிறோம். ஆகையினால் தோற்றங்களையே நிவர்த்திப்பது வியாதியைக் களைந்ததாகும். இதை விட்டு உடம்பை எவ்வளவுதான் கண்டதுண்டமாக வெட்டி வெட்டிப் பார்த்தாலும் வியாதியின் காரணம் நமக்கு கொஞ்சங் கூட விளங்காது.)

## ஸ்லோகம் 7

**வியாதி வந்தபிறகு அதனுடைய மாறுதல்களிலிருந்து வியாதியை உண்டாக்கிய அல்லது வியாதியை குணமாக விடாமல் தடுத்துக் கொண்டிருக்கும் காரணங்களை நாம் அறிய முடியாது. 5-வது ஸ்லோகத்தில் சொல்லியபடி அடிப்படை என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டும். தவிரவும் அந்தராத்மா பாதித்தலின் பிரதிபிம்பமான குறிகள் எல்லா வற்றையும் முழுவதையும் தெரிந்துகொண்டு எந்த மருந்தின் குணதிசயங்களுக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறதோ அந்த மருந்துதான் அந்த வியாதியஸ்தரை மறுபடியும் தன் நிலைமைக்கு கொண்டுவரக்கூடிய ஔஷதம் என்று நிச்சயம் செய்யவேண்டும். இப்படிச் செய்தாலொழிய பழைய நிலைமைக்கு மாற்றமுடியாது.**

## ஸ்லோகம் 8

**வியாதியை குணமாக்காமல் தடுத்துக்கொண்டிருக்கும் காரணங்கள். வியாதியஸ்தரின் அறையிலிருக்கும் வியாதிக்கு எதிரிடையான (அதாவது வியாதியை உண்டாக்கும்) காரண மான பூச்செடிகள் முதலியவற்றை அகற்றல் (இவைகள் ஹிஸ்டிரியா போன்ற மயக்கங்களை சிலருக்கு உண்டாக்கு கின்றன.) சரீரத்தில் ஏதாவது உட்புகுந்துகொண்டு கெடுதல், வலி, வீக்கம் முதலியவைகளை உண்டாக்கிக்கொண்டும் இருக் கலாம். அடிபட்ட இடங்களில் கட்டப்பட்ட கட்டு மிகவும் இறுக்கப்பட்டு இருக்கலாம். அதைப் பிரித்துக் கொஞ்சம் தளர்த்திக்கட்டுவது. ஒரு ஆர்டரி கட்டப்பட்டிருக்கும்**

கட்டிறுக்கத்திஞல் மூர்ச்சையாகி இருக்கலாம். அதைத் தளர்த்திக் கட்டுவது, உடம்பின் கண் உள்ள நகத்துவாரங் களில் ஏதாவது வஸ்துக்கள் புகுந்துகொண்டு இடையூறு செய்தால் அதை எடுத்து விடுதல். புதிதாகப் பிறந்த குழந்தை யின் அபானவாய் சிலசமயம் ஒழுங்காகத் திறக்காமல் இருக் கலாம். அதையும் கவனித்து சரிப்படுத்துதல்.

(இதுபோன்ற அநேக காரணங்களால் நாம் பார்க்கும் கேஸ் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கலாம் ஆகையால் அதைக்கவனித்து செய்யவேண்டியவற்றை செய்வது பிணி அகற்றுவாரின் முதற் கடமையாகும்.)

## ஸ்லோகம் 9

வியாதியின் வார்த்தைகளாகிய வெளியே காணப்படும் குறிகள் நம்முறைப்படி படிப்படியாக நீங்கின பின்பு, வியாதி அடியோடு நிரந்தரமாக விலகிவிட்டது என்று சொல்லுவது நியாயமே ஒழிய வியாதி (குறிகள் போனபின்) இன்னும் இருக்கிறது என்று சொல்லுவதற்கு அத்தாட்சியோ அல்லது ஆதாரமோ கிடையாது.

**(கருத்து)** உடம்பின் கெடுதலை நமக்குக் குறிகளால் அறியப் படுத்தி தன் கெடுதலை நிவர்த்தித்துக்கொள்ளுவது இயற்கையின் முறையாகும். நம் ஹோமியோபதி முறைப்படி மருந்துகள் சாப்பிட்ட வுடன் உடம்பின் கெடுதல்கள் (குறிகள்) நீங்கினவுடன் வியாதியும் விலகி நீங்கவேண்டும், இவை நீங்கவும் உடம்பு குணமாகிறது என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறது. எப்படி ஒருவன் தன்னுடைய தேவையான எதுவும் கிடைத்தவுடன் தன் இயற்கையான காரியங்களைச் செய்ய ஆரம்பித்துவிடுகிருனே அதே மாதிரியாக உடம்பும் தடைகள் நீங்கினபிறகு தன் தன் வேலையைத் தன் கடமைப்படி செய்ய ஆரம்பித்து விடுகின்றது. நாமும் நம் கால் கைகள் இருப்பதை மறந்துவிடுகிறேம். ஏனென்ருல் நம் அவயவங்கள் வியாதியுற்ருல் ஒழிய நமது மனது அந்த அவயவத்தைப்பற்றி எண்ணுவதே இல்லை. இது சாதாரணமாக எல்லோரும் அறிந்ததே. நாம் காலில் ஒரு இடத்தில் இடித்துக்கொண்டால் அந்தக் காயம் ஆறும்

வரையிலும் அதனைக் கவனித்து அதனிடத்தில் நாம் மூளையைச் செலுத்துகிறோமே ஒழிய பிறகு நம் மனது காயம்பட்ட இடத்தைப்பற்றி எண்ணுவதே இல்லை. ஆகையால் **குறிகள் நீங்குவது வியாதி யினின்று விலகுதலேயாம்.**

## ஸ்லோகம் 10

**நாம் ஆரோக்கியமாக இருக்கும்போது நம் அவயவங்கள் தன் தன் வேலையைச் சரிவரச் செய்யும்படி ஆட்டுவிக்கும் அந்தராத்மா தான் மனது, இஷ்டம், என்பவைகளின் மூலமாக நம் அவயவங்களை ஒழுங்கான நிலைமையில் ஆட்டுவிக்கிறது.**

(**கருத்து**) இந்த ஆட்டுவித்தலோ, அல்லது இயங்குவித்தலோ எல்லாம் அந்த அந்தராத்மா வியாதியுறாமல் இருக்கும் வரையில்தான். சிறிது அதிர்ச்சியோ அல்லது ஏதாவது தடங்கலோ அதற்கு ஏற்பட்டு விட்டால் உடனே அந்தராத்மா குறிகளால் அதை வெளிப்படுத்தி விடுகிறது.

## ஸ்லோகம் 11

**"ஆரோக்கியம், ஆரோக்கியமற்ற நிலைமை இரண்டிலும் நம்முடைய அவயவங்கள் அந்தராத்மா இல்லாவிடில் ஒரு குறி களையும் தோற்றுவிக்கா"** ஆகையால் நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் மனதால் அறியக்கூடிய இந்த அந்தராத்மா அல்லது அபூர்வமான ஓர் உயர்வான சக்தி இந்த ஒரு மிஷின் போன்ற நம் உடலை, மனது, இஷ்டம், இவைகளின் மூலமாக ஆட்டுவிக்கிறது என்பது நிதரிசனம். மனிதன் இறந்தவுடன் போவது எதுவோ அதுதான் அந்த மாயசக்தி. இருந்தாலும் இறந்தாலும் நம் உடல் சக்தி யில்லாமல் இருந்தால் வெறும் கட்டைக்குச் சமானந்தான்.

## ஸ்லோகம் 12

**ஒரு மனிதன் வியாதியுற்றிருக்கிறான் என்றால், உள் இருக்கும் அந்தராத்மா தான் எவ்வளவுக்கெவ்வளவு பீடிக்கப் படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு தன் மாறுதல்களை**

அவயவங்களின் தன்னிலேமையிலிருந்து மாறித் தொழில்களே செய்யும்படியாகச் செய்து தன் நிலேமையை உணர்த்துகிறது. வேறு உணர்த்துவதற்கு உயர்ந்தவழி ஒன்றுமில்லே.

## ஸ்லோகம் 13

ஆகையினுல் எந்த அந்தராத்மா, தான் வியாதியுற்றவுடன் தன்னுடைய மாறுதல்களே (துன்பங்களே) குறிகள் மூலமாக அறிவிக்கிறதோ அதே அந்தராத்மா தன்னுடைய குறைகள் தீர்ந்தவுடன் (வியாதிகள் தீர்ந்தவுடன்) குறிகளேக் காண்பிக்க இடமே இல்லாமல் போகிறது. அதாவது முழு உடம்பும் (அந்தராத்மா உள்பட) குணமாகிவிடுகிறது.

(**கருத்து**) மேலே சொன்னபடி நம் அந்தராத்மா காட்டும் வழிகளேக்கொண்டு வியாதியை நிவர்த்திப்பதல்லாமல் அது ஏன் அல்லது எப்படிச் செய்கிறது என்ற விசாரணேக்குப் புகுந்தால், அதாவது இயற்கையின் வேலேகளே ஆராயப் புகுந்தால் நடுக் கடலில் கப்பல் உடைந்து திசைதெரியா மாலுமியின் கதி போலத்தான். ஏனென்ருல் இது ஒரு தெய்வீகமான ஏற்பாடு. இயற்கைப்படி சந்திர சூரியர்கள் பிரகாசிப்பது எப்படி ஒரு தெய்வீகத் தன்மையின் செய்கை என்று தோன்றும்படியான ஒரு முறையில், ஒரு கட்டுப்பாட்டில், நடந்துகொண்டே வருகிறதோ, அப்படியேதான் இது. இதை நாம் அறியவோ அல்லது மாற்றவோ முடியாது.

## ஸ்லோகம் 14

ஆயுதப் பிரயோகத்தினுல் அல்லது சஸ்திர சாஸ்திர சிகிச்சை என்ற ஒரு தலேப்பைத் தவிர பாக்கி எல்லாவித உடம்பின் வியாதியும் இந்த அந்தராத்மாவின் மாறுதலே என்று அறியாத பிடிவாதத்தினுல் எவ்வளவோ நூற்றுக் கணக்கான வருஷங்கள் ஆகியும் அல்லோபதி வைத்தியமாவது அல்லது எந்த ஒரு வைத்தியமும் நம் ஹோமியோபதியைப் போல் மாறுதல் ஆகாத கொள்கைகளே உடையதாக இல்லே.

(கருத்து) இப்பொழுது (1955-ல்) நமது டாக்டர் ஹானிமென் வந்து பார்த்தால் ஹோமியோபதியில் முறை தவருமல் வைத்தியம் செய்யமுடியும். ஆனல் ஹானிமென் காலத்து அல்லோபதி வைத்தியர் ஒருவர் இப்பொழுது வைத்தியம் செய்யவேண்டுமானல் தற்போது உள்ள மாறுதல்களைப் பார்த்து பிரமித்துப் போய்விடுவார் என்பது திண்ணம். ஒரு இயற்கையான முறை, கொள்கை எப்பொழுதும் மாறவேண்டிய அவசியமுமில்லை, மாறவும் மாருது, மாற்றவும் முடியாது. சூரியனை மேற்கே உதிக்கும்படிச் செய்தால் இயற்கையையும் மாற்றமுடியும், இரண்டையும் செய்யப் புகுவது முட்டாள்தனமான காரியமே அல்லவா?

## ஸ்லோகம் 15

**உயிர் என்னும் தெய்வீக சக்தியை உண்டாக்கிய கருணைக் கடலாகிய பரம்பொருள், அந்தராத்மா வியாதியுற்றவுடன் அதைத் தெரிவிக்க வேண்டிய ஏற்பாடுகளையும் நம் சாதனத்துக்கு முன்கூட்டியே செய்திருக்கிருர்.**

## ஸ்லோகம் 16

**அந்தராத்மாவையும் அதனுடைய வெளி விளம்பரப்படுத்தும் உடம்பையும் (Vital force and the organism) நாம் வியாதிகளின் போக்கை தெளிவாக அறிந்துகொள்வதற்குப் பிரிவுபடுத்தி கூறுகிருேமே ஒழிய இவை இரண்டும் ஒன்ருய் சேர்ந்தால் அல்லாமல் நமக்குக் குறிகள் தெரிவதில்லை. நம்மால் எப்படி அந்தராத்மாவை (Vital force) கண்ணுல் காண முடியாதோ, அதேபோல அந்தராத்மா தான் பாதிக்கப்பட்டு தன்னுடைய பாதித்தலை தன்னுடைய வீடான உடம்பின் கோளாறுகளினுல் அறியப்படுத்துகிறது. இவை இரண்டும் சேர்ந்தே நமக்கு வியாதிகளின் கூற்றை வெளிப்படுத்துகிறது.**

## ஸ்லோகம் 17

**நம் அந்தராத்மா (கண்ணுக்கு காணமுடியாத ஒரு சக்தி) சாதாரணமாக வெளி உபத்திரவங்களினுல் அல்லது காரணங்களினுல் பாதிக்கக்கூடாதது. அந்தராத்மாவின் சக்தியைப்**

போல ஒரு உயர்ந்த சக்தியுள்ள வஸ்துவினுல் அந்தராத்மா வியாதியுறலாமே ஒழிய சாதாரணமான காரணங்களினுல் அந்தராத்மாவை வியாதியுறச் செய்ய முடியாது. ஆகையினுல் நாம் வியாதிகளை சொஸ்தப்படுத்த வேண்டுமானுல் நம் மருந்துகளும் அதே தன்மையில் அதாவது உயர்ந்த தன்மையில் வியாதிகளை குணமாக்கலாமே ஒழிய (மருந்தின் வீரியம்) மருந்தின் அளவுகளினுல் குணமாக்க முடியாது. வியாதி தோன்றும்போதும், நம் மருந்துகள் வேலை செய்யும்போதும், உடம்பின் கண் உள்ள உணர்ச்சி நரம்புகளின் மூலமாகவே தன் நிலைமையை தோற்றுவித்தும், குணத்தை காண்பித்தும் நாம் மேலே செய்ய வேண்டிய வியாதியகற்றலின் வழியை காண்பிக்கின்றன.

**(கருத்து)** மேல்கூறிய ஸ்லோகம் இன்னும் தெளிவாக விளங்குவதற்கு கீழே எழுதப்பட்டவைகள் மிகவும் அனுகூலமாய் இருக்கும். உலகின் கண் மெடீரியல் ப்ளேன் (Material Plane) ஸ்பிரிச்சுவல் ப்ளேன் (Spiritual Plane) என்று இரண்டு இருக்கின்றன. முதலாவது மனிதனுல் ஒருவாறு அறியக்கூடியது. இரண்டாவது மனதின் அறிவின் கண்ணுல்தான் அறியக்கூடியது. நம் சதை மாமிசங்களினுல் ஆகிய உடம்பு (நம் உடம்பு), இயக்கும் சக்தி என்ற இருதரப்பட்ட தோற்றங்கள். அவைகளில் மெடீரியல் பிளேனுகிய நம் உடம்பிலும் மேலெழுந்தவாரியாக உண்டாக்கப்பட்ட வியாதி தானுகவே மறைந்து விடும். சுருங்கச் சொல்லுமிடத்து தோன்றி மறையும் வியாதிகளில் material plane-தான் பாதிக்கப்படுகிறதே ஒழிய உடம்பின்கண் இருக்கும் அந்தராத்மா பாதிக்கப்படுவதில்லை. (உதாரணம்) ஒரு மலமிளக்கும் மருந்தை சாப்பிடுவதோ அல்லது ஒரு சிறு விஷத்தையோ தவறி விழுங்கிவிட்டால் கூட ஒரு சில குறிகள் உண்டாகி அதனுடைய சக்தி குறையக் குறைய அல்லது விஷங்களுக்கு மாற்றுக் கொடுத்த உடனேயே உடம்பு தன்னிலைமைக்குப் படிப்படியாக வந்துவிடும். ஆனுல் எந்த வியாதி அந்தராத்மாவையே (in Spiritual Plane.) பாதிக்கின்றதோ அது நாளடைவில் படிப்படியாகத் தோன்றி அதே ப்ளேனில் மருந்து கொடுத்தாலொழிய நீங்குகிறதில்லை. ஏனென்ருல் இதில் உடம்பு அல்ல, உடம்பின் கண்ணுள்ள இயக்கும் சக்தியே (ஒரு சிறிய கிராமமல்ல சென்ட்ரல் கவர்ன்மென்டே) பாதிக்கப்படுகிறது.

## ஸ்லோகம் 18

அந்தராத்மா பாதிக்கப்பட்டதின் அடையாளமான மொத்தக் குறிகளின் மூலம் (Totality of symptoms) நாம் வியாதியை அகற்றுவதே நம் கடமையாகும். படிப்படியாக குறிகள் ஒரு ஒழுங்கின் வழியாக மறைவது வியாதியின் மறைவேயாகும். இதே ஒரு பிணியகற்றுவாரின் முதல் கடமையேயொழிய வீண் பேச்சுகள் பிரயோஜனமில்லை.

## ஸ்லோகம் 19

இந்த உண்மையின் நிச்சயத்தால், குறிகளினுல், ஒவ்வொரு தனிப்பட்ட கேசிலும் அதனுடைய விசேஷக் குறிகளாலும் சரியான மருந்தைக் கண்டுபிடிக்க முடிகிறது. ஆகையால் குறிகளே வியாதியின் கதறல்கள். வியாதியினுடைய பேச்சுக்கள் என்று நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

## ஸ்லோகம் 20

வியாதிகளெனப்படுபவை எப்படி உடம்பின்கண் ஏற்படும் இயற்கையின் மாருன தோற்றங்களே போல, மருந்து கொடுத்து வியாதி நீங்குதல் இந்த தோற்றத்தின் மாறுதலே. ஆகையால் மருந்து குணமாக்கவேண்டுமானுல் ஒருவித மாறுதலை ஏற்படுத்தும் சக்தியுடைத்தாயிருக்கவேண்டும் என்பது நிதர்சனமாக விளங்குகின்றது.

## ஸ்லோகம் 21

மருந்துகளில் இருக்கும் சக்தி(உடம்பில் மாறுதல்களை ஏற்படுத்தும் சக்தி) நம் அறிவினுல் மட்டும் தெரிந்துகொள்ளக் கூடியது. அதன் சக்தியை அதனுல் ஏற்படும் குறிகளினுல் தான் நாம் அறியமுடியும். இதை அனுபவத்தினுலும் விடா முயற்சியினுலும் தெரிந்துகொள்ளவேண்டும்.

(கருத்து) நாம் மருந்துகளை திட திரேகிகளுக்கு கொடுத்து ஏற்பட்ட முறையில் மருந்தின் குணங்களை தெரிந்துகொள்ளவேண்டும். (Provings) அந்த டாக்டர் கையாண்டது; இந்த டாக்டர் புகழ்கிறார், அது, இது, என்று நம்பாமல் நம் முன்னோர்களால் சாஸ்திரத்தின் முறைப்படி விளக்கப்பட்ட (Proved drugs) மருந்துகளின் மூலமாகவே நாம் தெரிந்துகொண்டு அதன் வழி நடந்தால் நாம் வேண்டுமென்றாலும் கெடுதல் செய்யமுடியாது. நாம் போவது சரியான பாதை.

## ஸ்லோகம் 22

**மருந்துகளின் குணம் செய்யும் சக்தியை கண்களால் பார்க்க முடியாது. ஆனால் மிகவும் நுண்ணறிவு உள்ளவர் களால் நடத்தப்பட்ட ஔஷத நிர்ணயங்களால் (Provings) மருந்தாகவோ அல்லது ஔஷத நிர்ணயத்திற்காகவோ கொடுக்கப்பட்ட மூலிகையின் சக்தியால் வியாதியஸ்தர்களின் குறிகள் மறைந்ததாலும், திடதேகிகளின் உடம்பில் குறிகள் ஏற்படுவதினாலும் தான் தெரிந்துகொள்ளமுடியும். மருந்து களாக மூலிகைகள் வேலை செய்யும்பொழுது அவை, தான் செய்யக்கூடிய அநுகூல சக்தியை விசேஷக் குறிகளாலும், அதேபோல் விசேஷ குறிகளால் ஒவ்வொரு மருந்தும் தன்னிட மிருக்கும் குணம் செய்யும் சக்தியையும் நமக்கு தெரிவிக்கின்றன.**

(கருத்து) மருந்துகளின் இருவித குணங்களையும் அவைகளின் குறிகளால்தான் அறியமுடியும் அதுதான் நாம் அறிந்துகொள்ள வேண்டியது. இந்த ஆதாரத்தை (நிச்சயமானது; மாறக்கூடாதது) கொண்டுதான் நம்முடைய நிச்சய மருந்துத் தேர்தல் சாத்தியப்படுகிறது.

## ஸ்லோகம் 23

**வியாதிகளில் நிவர்த்திக்க வேண்டியவை வியாதியஸ்தர் களின் மொத்தக் குறிகளே** (Totality of Symptoms) **யன்றி** வேறல்ல. **அதேபோல ஔஷதங்களும் வியாதியற்றவர் களிடையே வியாதிக் குறிகளை நிவர்த்திக்க, அதே போன்ற குறிகளை உண்டாக்கும் மூலிகைகளே ஔஷதமாகின்றன. ஏனெனில் இம்மூலிகைகள் அதேபோல வேறு ஒரு செயற்கை**

(artificial) வியாதியை உண்டாக்கி இயற்கை வியாதியை நீக்கு கின்றது. ஆகவே ஒரு வியாதியை நீக்குவதற்கு, அதாவது ஒரு வியாதியஸ்தனின் மொத்தக் குறிகளையும் நிரந்தரமாகப் போக்குவதற்கு, அதேபோன்ற குறிகளை உண்டாக்கும் ஔஷதம் தேவையா அல்லது எதிரிடையான குறிகளை உண்டாக்கும் ஔஷதங்கள் தேவையா என்பது கவனிக்கவேண்டிய விஷயம்.

## ஸ்லோகம் 24

எல்லாவிதமான உண்மையான அனுபவங்களினுலும், சரியான ஆராய்ச்சி முறைகளினுலும் எதிரிடையான குறிகளுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட மருந்து (அல்லோபதி முறை) வியாதியை வேரோடு களையாமல் தாற்காலீகமாக குணமடைந்ததைப்போல் காண்பிக்கிறது. பிறகு மறுபடியும் முன்னிருந்ததைவிட மிகவும் அதிகமான உபத்திரவங்களுடன் வியாதி திரும்பக் காண்கிறது என்பதை நாம் அனுபவ வாயிலாக அறியலாம்.

## ஸ்லோகம் 25

மேற்கூறியவைகளிலிருந்து நமக்கு நம் ஹோமியோபதி முறையின்படிதான் நிர்ணயம் செய்யப்பட்ட மருந்துகளைக் கொண்டு ஒரு வியாதிக்கு அவ்வியாதியைப்போல (Similar) ஆனுல் கொஞ்சம் மேல்படியான ஒரு செயற்கை (Artificial) வியாதியை உண்டாக்கி இரண்டும் காலக்கிரமத்தில் நீங்கினவுடன் வியாதியஸ்தர் குணமடைவதைக் காண்பதால் இதைவிட மேலான முறை வேறில்லை என்பது திண்ணமாக விளங்குகின்றது.

## ஸ்லோகம் 26

இதனுல் அனுபவத்தில் எந்த மருந்து நல்ல உடம்பில் எம்மாதிரியான குறிகளை உண்டாக்குகிறதோ அதேபோல ஒத்திருக்கும் குறிகளையுடைய எந்த வியாதியையும் இந்தக் குறிகளையுடைய மருந்து அடியோடு நிவர்த்திப்பதை நாம் காண்கிருேம்.

## ஸ்லோகம் 27

நாம் கீழே கொடுப்பது தான் ஒவ்வொரு ஹோமியோபதி யின் சட்டத்தின்படி செய்யப்பட்ட குணமாகும். நாம் இதை இதற்குமுன் முழுவதும் தெரிந்துகொள்ளாவிட்டாலும் சொஸ்தம் ஆன முறை இதுவே. அதாவது

"ஒரு வியாதி தன்னைவிட மேலான பலமுள்ள மற்றொரு வியாதியினுல் முழுவதும் நீங்கச்செய்யப்படுகிறது; நீங்கச் செய்யும் வியாதி (வகையில் மாறுபட்டிருந்தாலும்) குணங் களில் (குறிகளில்) இயற்கை வியாதியின் குறிகளை ஒத்திருப்பதனுலேதான்"

## ஸ்லோகம் 28

ஆகவே மருந்துகளுக்கு வியாதியை வெல்லும் சக்தி, அதே போலுள்ள (Similar) மற்றொரு வியாதியை (ஆனுல் முன் வியா தியைவிட சற்று பலமுள்ள வியாதியை) உண்டாக்குவதால் தான் இருக்கிறது. இம்முறையால் வியாதியானது நிச்சய மாகவும், சீக்கிரமாகவும், வேருடனும், சாஸ்வதமாகவும் நிவர்த் திக்கப்படுகிறது.

## ஸ்லோகம் 29

இந்த இயற்கையான சட்டத்தைத் தழுவிய முறை ஒவ் வொரு ஆராய்ச்சியிலும் ஒவ்வொரு வியாதி குணமாக்குதலி லும் காணப்படுவதால் இதற்கு அத்தாட்சி வேறு வேண்டிய தில்லை. இதற்கு சாஸ்திரியமான முறையில் எப்படி இது சாத்தியமாகிறது என்று கண்டுபிடித்து சொல்வதும் அனுவ சியமாகிறது. ஆனுல் அனுபவத்தினுல் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு நிதரிசனமான அனுமானத்தை நாம் கீழே தருகிறோம்.

## ஸ்லோகம் 30

சஸ்திர சிகிச்சைக்குட்படாத (Surgery) பாக்கி எல்லா விதமான வியாதிகளும் அந்தராத்மா பாதிக்கப்பட்டவுடன்

தங்களுடைய மாறுதல்களை எண்ணங்களினுலேயும், வழக்க மான அவயவங்களின் தொழில்களில் மாறுதல்களினுலேயும் தெரியப்படுத்துகின்றன. ஹோமியோபதியின் சட்டத்தின் படி வியாதி குணம் ஆக வேண்டுமானுல் வியாதியின் குறி களுக்கு ஒத்ததுபோல் இருக்கும் ஒரு மருந்தை பொருக்கி எடுத்து, அதை வியாதியுள்ள உடலில் இருக்கும் வியாதியின் சக்திக்கு சிறிது அதிக சக்தியுள்ள செயற்கை வியாதியை உண்டுபண்ணும் வீரியத்தில் கொடுத்து, குறிகளின் ஒத்துமை யால் பழைய வியாதி தானுகவே அகன்ற பிறகு மருந்தினுல் ஏற்பட்ட வியாதி சரீரத்தின் பாதுகாக்கும் சக்தியை அதிகப் படுத்தி அது மருந்தினுல் ஏற்பட்ட வியாதியை வெகு சீக்கிரம் விலகச்செய்து உடல் தன்னிலமைக்கு வெகு சீக்கிரத்திலும் ஒழுங்காகவும் கொண்டுவரப்படுகிறது. இதன் உன்னதமான மாறுதல்களின் விநோதத்தை நாம் கீழ்வரும் ஸ்லோகங்களி னுல் மிகவும் விரிவாக அறிந்துகொள்ளலாம்.

## ஸ்லோகம் 31

உடலானது நாம் கொடுக்கும் மருந்தின் வீரியத்தின் அள வுக்குத் தக்கவாறு இயற்கையான வியாதிகளைவிட சிறிது அதிகமாகவே பாதிக்கப்படுகின்றது. ஏனென்ருல் நாம் வியாதி உண்டாக்கும் சக்தியை மருந்தின் வீரியத்தினுல் அதிகப்படுத்த லாம். ஆகவே இயற்கையான வியாதிகளை சரியான மருந்து களினுல் நிவர்த்திக்கக்கூடும்.

## ஸ்லோகம் 32

சரீரத்திற்குத் தீங்கிழைக்கும் சக்திகள் அதாவது வியாதி களை உண்டாக்கக்கூடிய சக்திகள், ஒரு அளவுக்கு ஆத்மீக மாகவும் (Psychical) ஒரு அளவுக்கு சகளமாகவும் (Physical) இருக்கிறது. இவைகளினுல் உலகிலுள்ள நாம் அனைவரும் பாதிக்கப்படுகின்ருேம். இந்த சக்திகளுக்கு மானிட உடல்கள் அனைத்தையும் ஒருங்கே பாழ்படுத்தும், அல்லது பற்றும் தன்மை கிடையாது. ஆனுல் எந்தெந்த சரீரங்கள் ஏற்கனவே பலவீனப்பட்டு இருந்து தீங்கிழைக்கும் சக்திகளைக் கிரகித்துக்

கொள்ளும் தன்மையிலிருக்கின்றனவோ அவைகளே முக்கிய மாகப் பாதிக்கப்படும். ஆகவேதான் இந்த சக்திகள் எல்லோ ரையும் பாதிப்பதில்லை.

**கருத்து :** ஒரு இடத்தில் காலரா தோன்றினல் அவ்விடத்திலிருக் கும் அனைவரையும் இவ்வியாதி பீடிப்பதில்லை. இந்த வியாதியை உண்டுபண்ணும் சக்தியைக் கிரகித்துக் கொள்ளும் சிலரைத்தான் இவ்வியாதி பற்றுகிறது. இந்த சக்தியால் பீடிக்கப்படக்கூடிய அள வுக்கு ஏற்கனவே ஒருவாறு பலவீனப்பட்டிருக்கிறவர்களைத்தான் இவ் வியாதி பீடிக்கும்.

## ஸ்லோகம் 33

நம்முடைய வீரியப்படுத்தப்பட்ட மருந்துகளினல் உண் டாக்கப்படும் வியாதியானது ஒவ்வொரு உடம்பிலும் எக்காலத் திலும் யாதொரு தங்கு தடையின்றி பிரவேசித்து வேலை செய்யும் சக்தியுடையதாயிருக்கிறது. அதிலும் மருந்தின் சக்தி சற்று அதிகமாக இருந்தால் அவசரமாகவும் தெளிவாக வும் வியாதியின் குறிகளைத் தோற்றுவிக்கும். ஆனல் இயற்கையாகத் தோன்றும் வியாதிகளோவென்ருல் சில இடத்திலும் சில சந்தர்ப்பங்களிலும் ஒரு சில தனிப்பட்ட (Susceptible) நபர்களைத்தான் அணுகும், பாதிக்கும்.

## ஸ்லோகம் 34

மேற்கூறிய ஸ்லோகங்களினல் இயற்கையான வியாதிகள் காலதேச சீதோஷ்ண ஸ்திதி முதலிய சௌகர்யங்களுக்குத் தக்கபடிதான் ஒரு நபரைப் பாதிக்கமுடியும். ஆனல் மருந்து களினல் உண்டாக்கப்படும் கற்பனை வியாதிகள் (artificial diseases) எந்த சமயத்திலும் எந்த நபரையும் பாதிக்கக்கூடிய சக்தியுள்ளதாயிருப்பதால் இது இயற்கையைவிட சக்தியுடை யதாயிருக்கிறது.

(**கருத்து :** சாமுவேல் ஹானிமென் தான் கண்ட ஒரு கொடிய வியாதியில், ஒரு ஊரில் பெரும்பாலோர் பாதிக்கப்பட்டும் மற்ருெரு

ஊரில் அந்த வியாதிக்குத் தகுந்த (குறிகளில் ஒத்த) மருந்தை சாப் பிட்டவர்களை இந்த கொடிய வியாதியானது சிறிதுகூட பாதிக்கவில்லை என்பதைக்கண்டார். இதனால்மருந்துகளின் பலத்தினால் இயற்கைவியாதி சூரியனைக் கண்டபனி போல் மறைந்துவிடுகிறது என்பது தெளிவு.)

## ஸ்லோகம் 35

இயற்கையான வியாதிகளைக் குணம் செய்வது நம்மால் கொடுக்கப்படும் ஔஷதங்களினால் ஏற்படுத்தப்படும் செயற்கை வியாதி அதிக பலமுள்ளதாக இருக்கிறது என்பது மாத்திரம் காரணமில்லை. வியாதியை சொஸ்தம் செய்வதற்கு மற்ற எல்லா விஷயங்களையும்விட நம்மால் கொடுக்கப்படும் ஔஷதத் தினால் ஏற்படுத்தப்படும் வியாதி இயற்கை வியாதியைப்போல், (எவ்வளவு அதிகமாக முடியுமோ அவ்வளவு அதையேபோல்) இருக்க வேண்டுமென்பது முக்கியம். இந்த ஒற்றுமையும், இதனுடன் சேர்ந்து அதிக பலமும் சேர்ந்துதான் வியாதியை சொஸ்தம் செய்கின்றன. ஏற்கனவே இருக்கும் வியாதியை, பலம் பொருந்தியதானாலும் அதற்கு எதிரிடையாகவுள்ள மற்றொரு வியாதியால் வெல்ல முடியாது என்பது உண்மை. இதுபோலவே இயற்கை வியாதியைப் போலவே வேறு ஒரு வியாதியையும் உண்டுபண்ணாமல் நாம் ஒரு வியாதியையும் சொஸ்தம் செய்ய முடியாது.

## ஸ்லோகம் 36

இந்த நிலைமையை விளக்க நாம் இங்கு மூன்று உதாரணங் களை எடுத்துக்கொண்டு, இரண்டு எதிரிடையான இயற்கை வியாதிகள் ஒரு மனிதனிடம் சந்திக்கும்போது என்ன ஆகிற தென்றும், அத்துடன் சாதாரண வைத்திய சிகிச்சையில், (அதாவது எதிரிடையான சிகிச்சையில்) நிவர்த்திக்க வேண்டிய வியாதியைப்போல மற்றொரு வியாதியை உண்டாக் காமலிருக்கும்போது, வியாதி சொஸ்தமாகாதென்பதையும் இந்த மருந்துகளை எவ்வளவு பலம் பொருந்தியதாக உட் செலுத்தினாலும் பிரயோசனமில்லை என்பதையும் விளக்கு வோம்.

## ஸ்லோகம் 37

இரண்டு ஒற்றுமையில்லாத வியாதிகள் சம பலத்துடன் ஒரு உடலில் தோன்றியவுடன் அல்லது பழைய வியாதி புது வியாதியைவிட பலமுள்ளதாயிருந்தாலும் சரி புது வியாதி உடலை அணுகமுடியாதபடி பழைய வியாதி தன் பலத்தினுல் முறியடித்துவிடுகிறது. ஒரு மிகவும் நீடித்த வியாதியினுல் (Chronic) கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஒரு வியாதியஸ்தரை சாதாரணமான தோன்றி மறையும் வியாதியினுல் பாதிக்க முடியாது என்பது நிச்சயம். க்ஷயரோக வியாதியுள்ளவர்களை சாதாரண ஜுரங்கள் பீடிப்பதில்லை என்ருல் கணைச் சூடுள்ள குழந்தைகளுக்கு அம்மைக் குத்துவது பலிப்பதில்லை என்றும் கண்டிக்கிருர்கள்.

## ஸ்லோகம் 38

அதுபோலவே ஒரு நாள்பட்ட வியாதி ஒத்துமையில்லாத (அல்லோபதி) முறையினுல் வெகு காலம் மிகவும் சாதாரண மருந்துகளினுல் குணப்படுத்த முயன்ருலும் நாள்பட்ட வியாதி களை இந்த மருந்துகள் தொடுவதில்லை. ஏனென்ருல் ஒற்றுமை யில்லாததுதான் காரணம். ஆனுல் ஒற்றுமையில்லாத மருந்து களை மிகவும் அதிகமான சக்தியில் கொடுக்கப்பட்டுவிட்டாலோ இருக்கும் வியாதிகளுக்கு பதிலாக இன்னும் உயிருக்கே ஆபத்தான வியாதிகள் உண்டாகிவிடுகின்றன. இதை ஒவ்வொரு நாளும் நம்முடைய அனுபவத்தில் கண்கூடாக் காண்கிருேம்.

## ஸ்லோகம் 39

அல்லது புதிதாக வந்த ஒற்றுமையில்லாத வியாதி மிகுந்த பலமுள்ளதாயிருந்தால் அப்பொழுது வியாதியஸ்தர் அனுப வித்துக்கொண்டிருந்த வியாதி புது வியாதி வந்து இருந்து போகும் வரையிலும் மறைந்து போனதுபோல் போய்ப் புது வியாதி போனவுடன் தன் தலையைத் தூக்கிக் காண்பிக்கும். இரண்டு குழந்தைகள் ஒருவித வலிப்பு வியாதியினுல் பீடிக்கப்

பட்டிருந்தன. அவைகளுக்குத் தலையில் ஒருவித படைச்சிரங்கு வந்தவுடன் வலிப்பு நின்றுபோய் படைச்சிரங்கு குணமான வுடன் மறுபடியும் இந்த வலிப்பு தோன்றிவிட்டது. ஒரு க்ஷயரோக வியாதியஸ்தனுக்கு பயித்தியம் பிடித்தால் க்ஷய ரோகம் கொஞ்சம் மறைந்துபோய் பயித்தியம் தெளிந்தவுடன் திரும்பிவந்துவிடும். தட்டை அம்மையும் பெரிய அம்மையும் பரவியிருக்கும்பொழுது ஒரு குழந்தை இரண்டாலும் தாக்கப் பட்டால் பெரிய அம்மை தோன்றினவுடன் தட்டை அம்மை மறைந்துபோய் பிறகு பெரிய அம்மை போனவுடன் தட்டை அம்மை தலைதூக்கிக் காண்பிக்கிறது. அம்மை குத்தி 6-நாள் ஆனபிறகு தட்டை அம்மை தோன்றியபொழுது அம்மை குத்தின வீக்கம் எல்லாம் மறைந்திருந்து தட்டை அம்மையின் 7-நாள் ஆனபிறகுதான் அம்மை குத்தினதால் வந்த வீக்கம் முதலியவைகள் மறுபடியும் தோன்றுகின்றன. இதேபோல ஒற்றுமையில்லாத நோய்கள் பலமுள்ளது பலமில்லாததை, தான் இருக்கும் வரையில் மறையச்செய்துவிடுகிறது. ஆனால் அவைகள் ஒன்றை ஒன்று சொஸ்தம் செய்கிறதில்லை.

## ஸ்லோகம் 40

இது வெகு நாளாகவே பழைய முறையில் (Allopathic) கண்ட விஷயங்கள். இயற்கையானது தன்னை தாக்கிய வியாதியை ஒற்றுமையில்லாத வியாதியினால் நிவர்த்தித்துக் கொள்ள கூடியதாயில்லை. அவர்கள் நாட்பட்ட வியாதிகளை ஏதேதோ மருந்துகளை கொடுத்து ஒன்றுக்கொன்று ஒற்றுமை இல்லாத வியாதிகளை உண்டாக்கிக்கொண்டு இருந்தார்களே ஒழிய பழைய வியாதியின் அடியை களையமுடியவில்லை. இயற்கையினுடைய தன்மைகளையும் போக்கையும் கவனிக் காமல் தான் கொடுக்கும் சம்பந்தா சம்பந்தமில்லாத மருந்து களின் செயல்களினால் உண்டான கெடுதல்களைக் கண்டும் தான் போகும் வழி சரியானதல்ல என்று தெரிந்துகொள்ள வில்லை. அவர்கள் தங்கள் வழக்கம்போல் இருக்கும் குணப் படுத்துகிறதென்ற கொடிய மருந்துகளைக் கொடுத்து இருந்த வியாதியை தற்காலீகமாக மறையச்செய்து, நோயாளி பல ஹீனமானவுடன் மறுபடியும் பழைய வியாதி தோன்றிவிடு

கிறது, உதாரணமாக உடம்பில் தோன்றும் சொரி சிரங்குகள் மிகவும் பலமுள்ள மலமிளக்கி கொடுத்தவுடன் மறைந்து உடம்பின் பலம் குறைந்தவுடன் மறுபடியும் சருமத்தில் சொரி சிரங்கு மிகுந்த ஆக்ரோஷத்தோடு தோன்றும். வியாதியஸ்தன் தன்னுடைய வியாதியையும் போக்கிக்கொள்ளாமல் புதிதான வியாதியையும் தேடிக்கொள்ளுகிருன். ஆகையால் ஒற்றுமை யில்லாத முறையில் எவ்வளவு வருஷங்கள் சிகிச்சை செய்து கொண்டாலும்சரி வியாதி குறைவதில்லே.

## ஸ்லோகம் 41

புதிதாக ஏற்படும் வியாதி உடம்பினின்றும் நீக்கப்படா விட்டால் உடம்பில் இருக்கும் பழைய ஒற்றுமையில்லாத வியாதியுடன் சேர்ந்து விடுகிறது. இவைகள் ஒவ்வொன்றும் உடம்பின் கண் ஒவ்வொரு இடத்தைக் கைப்பற்றிக் கொள் கின்றன. பாக்கியை ஒற்றுமையில்லாத இடங்களுக்கு விட்டு விடுகின்றன. ஆகையால் ஒரு ஸிபிலிடிக் வியாதியஸ்தன் ஸோரிக் வியாதியஸ்தனுகவும் ஸோரிக் வியாதியஸ்தன் ஸிபி லிடிக்காகவும் மாறலாம். இவைகளுக்குள் சம்பந்தமில்லே யாதலால் ஒன்றை ஒன்று அகற்றவோ, அல்லது சொஸ்தப் படுத்தவோ முடியவில்லே.

**(கருத்து)** ஒரு வியாதி கண்டவுடன் ஜனனேந்திரிய குறிகள் அமுக்கப்பட்டு ஸோராவின் தன்மையான குறிகள் சரீரத்தில் காணப்படு கின்றன. இவைகள் நாளடைவில் ஸிபிலிஸ் என்னும் பலமான வியாதி யினுல் அமுக்கப்பட்டு இரண்டும் உடம்பில் தனிப்பட்ட பாகங்களேத் தாக்கி நிலேத்து நிற்க ஆரம்பித்து விடுகின்றன. இப்பொழுது வியாதியஸ் தரை குணப்படுத்துவது இன்னும் கஷ்டமான வேலேயாகிவிடுகின்றது. உடம்பில் இரண்டும் ஒற்றுமையில்லாத வியாதிகள் சந்தித்தவுடனே பலமுள்ள ஒன்று பலமில்லாத ஒன்றை அமுக்கிவிடுகிறது. சில சமயங் களில் இரண்டும் ஒரு வியாதியஸ்தரை ஒரே சமயத்திலும் பாதிக் கின்றன. பெரிய அம்மை மிகுந்த வேகத்துடன் பரவும்பொழுது மணல் வாரி அம்மை முதலிய சிறியன அமுக்கப்படுகின்றன அல்லது சில தனிப்பட்ட கேஸுகளில் இரண்டும் தனித்தனியேயும் காணப் படுகின்றன. பின் சொல்லியது மிகவும் அபூர்வமாகத்தான்.

## ஸ்லோகம் 42

உடம்பில் இந்த இரண்டுவித வியாதிகளுடன் வைத்தியனுல் ஒற்றுமையில்லாத மருந்துகளினுல் இன்னும் பலவித உபத்திரவங்கள் ஏற்பட்டு விடுகின்றன. பழைய வியாதி ஒரு பக்கம் நீங்காமல் இருக்கும்பொழுது புது வியாதி (ஒற்றுமையில்லாத) சேர்ந்து வியாதியை குணமாக்குவது இன்னும் கஷ்டமாகிவிடுகிறது.

## ஸ்லோகம் 43

சில கேஸுகளில் இயற்கை ஒரு உடம்பில் இரண்டு மூன்று வியாதிகளை ஒரே சமயத்தில் உண்டாக்குகிறது. இவைகளின் குறிகள் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமலிருப்பதால் உடம்பை பாதித்தாலும், உயிருக்கு ஆபத்தை உண்டாக்கக் கூடிய அவ்வளவு கெடுதலானதாக இல்லை.

## ஸ்லோகம் 44

ஆனுல் உடம்பில் இரண்டு ஒற்றுமையில்லாத வியாதிகள் தோன்றினவுடனே (அதாவது பழைய வியாதியுடன் புது பலமுள்ள ஒற்றுமையில்லாத வியாதி சேர்வது) இயற்கை எந்த வியாதிகளின் குறிகளை முன்னுல் தெரியப்படுத்துகிறது என்று நாம் கவனிக்கவேண்டும். அதேபோல் வைத்தியரும் இயற்கையின் முறையைப் போல் வியாதிகளை குணப்படுத்த முயலவேண்டும்.

## ஸ்லோகம் 45

ஆகையால் உடம்பில் இரண்டு ஒற்றுமையில்லாத வியாதிகள் : (1) ஒன்றை ஒன்று நீக்கமுடியாது. (2) ஒன்றை ஒன்று தள்ளி வைக்கவும் முடியாது, (பழையது போனவுடன் புதிது வருவதினுல்.) (3) அல்லது இரண்டு ஒற்றுமையுள்ள வியாதிகள் ஒரே சமயத்தில் உடம்பில் இருக்கவும் முடியாது. அல்லது இரண்டும் கலந்து சேர்ந்து இருக்கவும் முடியாது.

## ஸ்லோகம் 46

இரண்டு ஒற்றுமையுள்ள வியாதிகள் ஒரு உடம்பில் ஒரே சமயத்தில் தோன்றினுல் பலமுள்ள ஒன்று பலமில்லாததை தாக்கி விடுகின்றது. ஏனென்றுல் பலமில்லாதது தாக்கின இடங்களேயே இதுவும் மிகுந்த பலத்துடன் தாக்குவதால் பல மில்லாதது இருக்க அவசியமில்லாமல் அகன்றுவிடுகிறது. அதாவது அந்தராத்மாவானது கொஞ்சம் சக்தியுள்ள ஒரு வியாதியால் பாதிக்கப்படுகிறது. அப்பொழுது ஒரு மிகுந்த சக்தியுள்ள ஒற்றுமையான வியாதி ஏற்பட்டவுடனே குறைந்த சக்தியுள்ளது சரீரத்தை பாதிக்கமுடியாமல் அகன்று விடுகின்றது.

## ஸ்லோகம் 47

நாம் இயற்கையில் அனேக உதாரணங்கள் மேற்சொன்ன வற்றிற்குக் கொடுக்கலாம். பெரிய அம்மையானது சில சம யங்களில் சகிக்கமுடியாத கண்வலியை உண்டாக்குகின்றது. ஏன், சிலருக்கு கண்களே குருடாகிவிடுகின்றன. பெரியம்மை யின் விஷசத்தை நாட்பட்ட கொடிய கண் வலிக்குக் கொடுத்த போது, கண்வலியை நிரந்தரமாக குணமாக்கி விட்டது தலையில் தோன்றின ஒரு சரும வியாதியினுல் பாதிக்கப்பட்ட ஒரு கண் வியாதியானது பெரிய அம்மை போட்டினவுடன் மறைந்துவிட்டது. செவிட்டுத்தனமும், மூச்சுத் திணரலும் பெரிய அம்மையினுல் சில சமயங்களில் ஏற்படுகின்றன. இதே வியாதிகள் பெரிய அம்மை மிகவும் கடுமையாக போட்டினுல் மறைந்துவிடுகிறது, ஏன்? வியாதியின் ஒற்றுமையின் காரணம் தான். பலமில்லாதது பலமுள்ளதைக் கண்டவுடன் அகன்று விடுகிறது. (நம் முன் இருக்கும் ஒரு விளக்கின் ஜோதி எப்படி நம் கண்ணுக்கு ஒரு சூரியனுடைய ஜோதியான பிரகாசம் தெரிந்தவுடன் மறைவதுபோல்.)

### அம்மை குத்துதல்—பெரிய அம்மை

அம்மை குத்துவது என்பது பெரிய அம்மை வராமல் தடுப்பதற்கே. ஏன், இரண்டின் குறிகளும் கிட்டதட்ட ஒற்

றுமையாயிருப்பதினல் தான். அம்மைக் குத்திக்கொள்ளு வதால் ஒருவாறு பெரிய அம்மையின் வேகம் தணிக்கப்பட்டு மிகவும் அமைதியாகவே தோன்றுகிறது. இதேபோல் அனேக தேசங்களில் அனேக ஆராய்ச்சியாளர்கள் ஒரு பலமுள்ள கொடிய வியாதி ஒரு உடம்பை தாக்கினவுடனே அந்த உடம்பை பாதித்து இருந்த சாதாரண ஒற்றுமையுள்ள வியாதிகள் அகன்று விடுவதைக் கண்டு அவ்வப்போது எழுதியிருக் கிருர்கள்.

## ஸ்லோகம் 48

மருத்துவர் வியாதியை குணப்படுத்துவதற்கு இயற்கையில் எந்தவிதமாக ஒரு வியாதி தோன்றி மறைகிறது என்று தெரிந்துகொள்ள வேண்டும். அதேபோல் இருக்கும் வியா திக்கு ஒற்றுமையான குணங்களுடைய மருந்தை கண்டறிய வேண்டும். இதனுல் வியாதி சீக்கிரமாகவும் நிச்சயமாகவும் நிரந்தரமாகவும் குணமாவதைக் காணலாம். மேலே கூறிய உதாரணங்களைவிட மேலும் தெளிவாக ஒரு மருத்துவருக்கு வழிகாட்டக் கூடியது வேறு ஒன்றுமில்லை என்பதைத் திடமாக கூறலாம்.

## ஸ்லோகம் 49

இயற்கையிலும் சரி (மேல் கூறிய உதாரணங்களினுல்) அல்லது மருத்துவனின் புத்திசாலித் தனத்தினுலும் சரி, ஒரு வியாதி ஒற்றுமையில்லாத எவ்வளவு பலமுள்ள மருந்தினுலும் குணப்படுத்த முடியாது என்பது தெளிவாகிறது. ஆனுல் நாம் பலமுள்ள வியாதிக்கு ஒற்றுமையுள்ள மருந்தினுல் இயற்கை யின் தன்மைப்படி நிச்சயமாக குணப்படுத்த முடியும்.

## ஸ்லோகம் 50

நாம் மற்றும் அநேகவிதமான ஹோமியோபதி முறையில் உண்டான குணங்களைக் காணலாம். ஆனுல் இந்த அருமை யான வழி மருத்துவர்களினுல் கவனமாக ஆராயப்படவுமில்லை. இயற்கையும் மிகவும் அதிகமான உதாரணங்களைக் காண்பிக்க வில்லை.

## ஸ்லோகம் 51

இயற்கையும் ஹோமியோபதி முறையில் குணம் செய்யக் கூடிய அபூர்வ சக்தியுடையதாயில்லை. ஏனென்றால் அவைகள் உண்டாக்கும் வியாதிகள் (சொறி சிரங்கு பலவித அம்மை) உயிருக்கே ஆபத்தையுண்டாக்கும் அவ்வளவு கொடுமையுள்ள தாயிருக்கிறது அல்லது அவைகளையே மறுபடியும் குணப் படுத்த வேண்டியதாகிவிடுகிறது. ஆகையால் இந்த வழிகளை அனுசரிப்பது கஷ்டமாகவும் நிச்சயமில்லாமலும் ஆபத்தாகவும் முடிகிறது. இயற்கையிலும் சொறி சிரங்கு அல்லது அம்மை கள் போல் உள்ள வியாதிகளுக்கு ஒற்றுமையாகவுமில்லை. ஆகையினால் இந்த முறைகளை நாம் உபயோகப்படுத்துவது முடியாத காரியம். ஏனென்றால் மருந்துகளின் வீரியத்தைப் போல் வியாதியின் அளவுக்குத் தகுந்தபடி கூட்டவோ குறைக் கவோ முடியாது. ஆனால் அம்மையைப்போல் நீடித்த நாட் களினால் கஷ்டப்படும் ஒரு வியாதியஸ்தன் மிகவும் கஷ்டப் படுத்தப்பட்ட பிறகு அந்த வியாதியையும் சொஸ்தப் படுத்த வேண்டியதாகிறது. இன்னும் சில அபூர்வ கேசுகளில் ஹோமியோபதி முறையில் வியாதி குணப்படுத்தப்பட்டிருப்ப தால் இயற்கையின் உண்மையை அறியலாம். "அடையாளங் களினால்தான் ஒற்றுமையின் குணம் அறியப்படவேண்டும்".

## ஸ்லோகம் 52

உலகின்கண் இருக்கும் சாதனங்கள் இந்த அருமையான முறையினால் உபயோகப் படுத்தப்பட்டால், எவ்வளவு உண் டான, உண்டாகுகிற, உண்டாக்கப்போகும் வியாதிகளை நிவர்த்தி செய்யலாம் என்று விளங்கும். அவைகள் தம்முடைய சக்தியினால் ஒரு தோன்றி மறையும் வியாதியை உண்டாக்கி, இருக்கும் வியாதியைப் போக்கடித்து, தாமும் மனிதனது அந்த ராத்மா தன் சுயநிலையை அடைந்தவுடன், மறைந்துவிடு கின்றன. இதற்கு அம்மை முதலிய வியாதிகளைப் போன்று மறுபடியும் இதைப் போக்கடிக்க மருந்து கொடுக்கவேண்டிய அவசியமுமில்லை. மேலும் வியாதிக்குத் தகுந்தபடி மருந்தின் அளவு, வீரியம் முதலியவைகளை வரையறுத்து கொடுக்க

முடியும். எவ்வளவு நாட்பட்ட வியாதியாயிருந்தாலும் கொடுமையாக வியாதியை தாக்கவேண்டிய அவசியமுமில்லை. இந்த முறையில் வியாதி சீக்கிரமாகவும் சாதாரணமாகவும், ஏன் தெரியாமலேயேகூட, குணமாகிவிடுகிறது.

## ஸ்லோகம் 53

இவ்வளவு விளக்கிக் கூறிய பிறகு ஒரு புத்தி கூர்மையுள்ள மருத்துவன் பழைய முறையை (allopathy) கைப்பற்றமாட்டான் என்பது திண்ணம். பழைய முறையில் வியாதிகளின் குறிகளுக்கு ஒற்றுமையில்லாத மருந்துகளைக் கொடுத்து வியாதியஸ்தனின் வியாதியை போக்காமல் மேலும் பலவிதமான புது வியாதிகளையும் உண்டுபண்ணி கஷ்டப்படுத்துவதல்லாமல் வேறு ஒன்றையும் கண்டதில்லை. ஏனென்றால் இந்த முறையில் வியாதி குணமாகாதது மட்டுமல்ல வியாதி அதிகமாவதே கண்டபலன். அது எப்படியென்றால் மேலே கூறிய இயற்கை முறைப்படி.

(1) பழைய வியாதி தனக்கு ஒற்றுமையில்லாத புது வியாதியை எதிர்த்து, எதிர்க்க முடியாவிட்டால் அமுங்கிவிடுகிறது.

(2) புதிய பலமுள்ள வியாதி பழைய வியாதியை தன்னுடைய பலத்தினால் அமுக்கி வைக்கிறது. பிறகு மறுபடியும் புதிது போனவுடன் பழைய வியாதி மிகுந்த ஆக்ரோஷத்துடன் வந்துவிடுகிறது.

(3) இரண்டு ஒற்றுமையில்லாத பலமுள்ள வியாதிகள் ஒன்றை ஒன்று போக்கடிக்க முடியாமல் போனால் இரண்டும் தனித்தனியே உடம்பில் ஒவ்வொரு பக்கத்தில் இருந்துகொண்டு வியாதியஸ்தனின் உயிரைக் குடித்து வியாதியை இன்னும் அதிகமாக்கி பிறகு எந்த விதத்திலும் குணம் செய்யக் கூடாமல் செய்துவிடுகிறது.

## ஸ்லோகம் 54

ஒரு வியாதியை எளிதாகவும், உண்மையாகவும் குணப்படுத்த வேண்டுமானால் அது இந்தக் குறி ஒற்றுமை அல்லது ஹோமியோபதி முறையில்தான் சாத்தியமாகின்றது. மற்றும் நாட்பட்ட அனுபவத்தினால் கண்டுபிடித்த முறைகளிலும் குண

மாகின்றன. ஆனுல் வியாதிகளை நிச்சயமாகவும், சீக்கிரமாக வும், நிரந்தரமாகவும், குணம் செய்வது இந்த முறையில்தான். ஏனென்ருல் இந்த முறை இயற்கையை தழுவியிருக்கிறது.

## ஸ்லோகம் 55

மற்ற மூன்று முறைகளைக் காட்டிலும் இந்த ஹோமியோபதி முறைதான் வியாதியை ஒழுங்காக குணப்படுத்தும். மேலும் பலஹீனப்படுத்தாமலும் வேறு ஒருவித கெடுதல் உண்டு பண்ணுமலும் குணப்படுத்தும்.

## ஸ்லோகம் 56

இரண்டாவதான அல்லோபதி அல்லது எதிர்முறை, வியாதியுருத அவயவங்களை கடினமாக வேலை செய்யவைத்து வியாதியுற்ற பாகங்கள் வியாதியுருத பாகங்களின் வழியாக வியாதியை வெளியே தள்ளுகின்றது. இதுதான் பொதுவாக உபயோகப்படுத்தும் முறை.

## ஸ்லோகம் 57—58

மூன்ருவதான ஆண்டிபாதிக் (Anti-pathic) அல்லது தற் கால சாந்திமுறை வியாதியஸ்தருக்கு தற்காலிகமான குணங் களை காண்பிக்கும் முறை. இந்த முறை நாட்பட்ட வியாதியில் எவ்வளவு தூரம் கெடுதலானது என்று விளங்கக் கூறுவோம். இந்த முறையைத்தான் அல்லோபதி வைத்தியர்கள் இயற்கை வியாதிகளில் கையாளுகிருர்கள். ஆனுல் இந்த அனுகூலம் என்று கருதி செய்யப்படும் முறையானது நாட்பட்ட வியாதி யஸ்தரை குணம் செய்வதான தவருன நம்பிக்கையை உண்டாக்குவதனுல் இது ஒழுங்கானதல்ல. ஏனென்ருல் தற்காலிக மருந்தில் நோய் முடிந்தவுடன் வியாதி மறுபடியும் இன்னும் அதிக உக்கிரத்துடனே வந்துவிடுகிறது.

## ஸ்லோகம் 59

இந்த தற்காலிக சாந்தி முறையை அல்லோபதி வைத்தியர்கள் உபயோகிக்கும் முறையை விளக்குவோம்.

வியாதியஸ்தரின் பல குறிகளில் ஏதாவது ஒரு குறியை எடுத்துக் கொண்டு பாக்கிக் குறிகளை கவனிக்காமல் பழைய காலத்தி லிருந்து அனுபவத்தினுல் கண்டுபிடிக்க ஒரு சாந்தி செய்யும் மருந்தை கொடுக்கிருர்கள். இது எந்த வியாதியை குறைக்க வேண்டுமோ அதற்கு நேர் எதிரிடையான குறியை உண்டாக்கு கிறது. உதாரணமாக இது தலைவலியில் வலியை நமக்குத் தெரி விக்கும் நரம்புகளின் சக்தியை தலையில் அடித்து அவைகள் தம் சக்தியை இழப்பதால் நாம் தலைவலி தெரியாமல் இருக்கிரும்.

அபின் வயிற்றுப்போக்குக்கு கொடுக்கப்படுகிறது. இது சிறு குடல், பெருங் குடல்களின் இயற்கையான (உடலுக்கு வேண்டுவன அல்லாததை வெளியில் தள்ளும் தெய்வீக சக்தி) தள்ளும் சக்தியை தடுத்து விடுகின்றது. சிறுகுடல், பெருங்குடல் வரிவரியாக அமைக்கப் பட்டு சேர்க்கப்பட்டிருக்கிறது. உடலுக்கு வேண்டாத மலம் முதலியன முதல் வரியில் வந்தவுடன் அது பெருத்து அடுத்த வரிக்கு தள்ளிவிட்டு தான் சுருங்குகிறது. இதே மாதிரி மேன்மேலும் போகின்றது. இப்படி சுருங்குவதால் மேல் தள்ளப்பட்டது பின் வராமல் தடுக்கப்படுகின்றது.

மேன் மேல் தள்ளும் காரியத்தை (Peristalsis) என்று சொல்லு கிருர்கள். இந்த இயற்கை காரியம் அபினுல் தற்காலிகமாக நிறுத்தப் பட்டு வயிற்றுப் போக்கை நிறுத்திவிடுகிறது. அதே போல் தூக்க மின்மைக்கும் இந்த அபினை கொடுக்கிருர்கள். இது இயற்கையன்னை அளிக்கும் சாந்தியான தூக்கத்தை அளிக்காமல், மயக்கத்தின்பேரில் வியாதிஸ்தருக்கு ஒரு பலவந்தமான தூக்க நிலைமையை கொடுக் கின்றது.

மலச்சிக்கலுக்கு மலமிளக்கும் மருந்தை கொடுக்கின்றுர்கள். எரிந்துபோன கையை குளிர்ந்த ஜலத்தில் வைக்கிருர்கள், இது தற் சமயத்திற்கு எரிச்சலை மாற்றுகிறது.

குளிர் நடுக்கும் வியாதிஸ்தர்களையும் உடம்பின் இயற்கை உஷ்ணம் குறைந்தவர்களையும் உஷ்ணமான தண்ணீரில் குளிக்கச் செய்கிருர்கள். மிகுந்த நாட்பட்ட பலஹீனத்திற்கு சாராயத்தை குடிக்கச் செய்கிருர்கள். இது சிறிது நேரத்திற்கு பலம் உண்டானதை போல் தோற்றுவிக்கிறது.

இன்னும் இதைப்போல அநேக முறையை கையாளுகின்றுர்கள்.

இந்த முறையினல் ஒவ்வொரு நாட்பட்ட வியாதியிலும் முதலில் தற்காலிகமான குணம் தோன்றி பிறகு வியாதி மிகுந்த பலத்துடன் தோன்றுகிறது. இதை அல்லோபதி வைத்தியர்கள் கொடுமையான வியாதியின் விளைவுகள் அல்லது புது வியாதிகள் என்று கூறி சமாதானம் செய்துவிடுகிருர்கள்.

நீடித்த வியாதிகளின் முக்கிய குறிகளுக்கு இந்த தற்காலிக சாந்தி முறை உபயோகப்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு கேஸிலும் சில மணி நேரங்களுக்குப்பிறகு வியாதி தன் பழைய நிலைமையோ அல்லது மேலும் கடினமாகவோ வந்துவிடுகிறது. ஏனென்ருல்–ஒவ்வொரு தூண்டப்பட்ட அவயவமும் வியாதியை நீக்க அதிக வேலை செய்து பிறகு அதன் பலத்தை இழந்துவிடுகிறது. அப்படியே உடம்பின் கண் உள்ள ஒவ்வொரு அவயவமும் இயற்கைக்கு விரோதமாகத் தனக்கு இடப்பட்ட வேலையைவிட அதிகம் செய்து நாளடைவில் தான் செய்யும் வேலையைக்கூட செய்யமுடியாமல் போய்விடுகிறது. பிறகு வியாதியஸ்தரின் முடிவுக்கு காரணம் வேண்டுவதேயில்லை.

## ஸ்லோகம் 60

இந்த எதிர் முறையினல் அல்லோபதி வைத்தியர் ஒவ்வொருதரம் வியாதியின் குறிகள் தலை காட்டும்போதும் மருந்தை இன்னும் அதிகமாகக் கொடுத்து வியாதியை மறைந்துபோகும்படி செய்கிருர்கள். வியாதி மருந்தினல் தடைப்பட்டு சிறிது காலம் அமுங்கியிருந்து மறுபடியும் தலை விரித்தாட ஆரம்பிக்கிறது. இந்த முறையினல் வியாதி முற்றிக் கொண்டே போய் சில சமயங்களில் உயிருக்கே ஆபத்தைக் கொண்டுவந்து விடுகிறது. இவர்கள் எதிர்பார்த்தபடி வியாதி குணமோ, அல்லது நிவர்த்தியோ ஆகிறதில்லை.

## ஸ்லோகம் 61

இந்த எதிர் முறை வைத்திய சிகிச்சையினல் உண்டாகும் கெடுதல்களை நம் சகோதரர்கள் சிறிது ஆராய்ந்து பார்த்தால்

வியாதியை நிவர்த்திக்க இயற்கை முறையை அனுசரிக்க வேண்டுமென்பது புலப்படும். எதிர்முறையில் கெடுதலே ஒழிய நன்மையில்லை என்று தெரிந்துகொண்டிருப்பார்கள். ஏனென்ருல் இந்த எதிர்முறையில் சிறிதுகாலம் மருந்து குணத்தை கொடுப்பதுபோல் காண்பித்து மறுபடியும் தலைகாட்ட ஆரம்பித்து விடுகின்றது. ஒற்றுமை முறைப்படி மருந்துகளை அணுப்பிரமாணங்களில் உபயோகித்தால் வியாதி குணமடையும் என்பது திண்ணம். அப்படி அந்த எதிர்முறை வைத்தியர் களிடத்தில் ஏதாவது ஒரு வியாதி குணமடைந்தது என்ருல் அது அவர்கள் கொடுத்த கலப்பு மருந்தில் ஏதாவது ஒன்று வியாதியின் குறிகளுக்கு நம் முறைப்படி ஒற்றுமையாயிருந் திருக்க வேண்டும் என்பது திண்ணம். ஒற்றுமையான குறிகளினுல் பழைய வியாதி முறியடிக்கப்பட்டு புது வியாதியும் காலக்கிரமத்தில் வியாதியஸ்தரை விட்டு நீங்கிப்போய் குணமடைகிருர் என்பது நாம் அனுபவ வாயிலாகக் கண்ட உண்மை.

## ஸ்லோகம் 62

எதிர் முறையினுல் உண்டான கெடுதல்களும் ஒற்றுமை முறையினுல் உண்டாகும் நன்மைகளும் பலவிதமாக விடா முயற்சியினுல் எனக்கு முன்னுல் ஒருவராலும் ஆராயப்பட வில்லை. பிணி நீக்குவோருக்கு இது மிகவும் அத்தியாவசிய மானதும் எளிதில் புலப்படும்படியாயிருந்தும்கூட இதை உபயோகப்படுத்திக்கொள்ள அவர்கள் முயற்சிக்கவில்லை.

## ஸ்லோகம் 63

உடம்பையோ அந்தராத்மாவையோ பாதிக்கும் ஒவ்வொரு வியாதியும் உடம்பின் பராமரிப்பில் ஒருவிதமான மாறுதலை அதனதன் சக்திக்கு தக்கபடி சில நாட்களுக்கோ அல்லது அதிக நாட்களுக்கோ உண்டாக்குகிறது. இது மருந்துகளின் முதல் வேலை, அல்லது மருந்துகளினுல் உண்டாகும் முதல் மாறுதல்கள் (Primary Action). இந்த மாறுதல்களை நம் அந்தராத்மா எதிர்த்துப் போராடிக் குறிகளை உண்டாக்கி

நமக்கு எச்சரிக்கை செய்து வியாதியை (மருந்தின் சக்தி வியாதியை) ஓடச் செய்து விடுகின்றது. இதுதான் இரண்டாவதான தொழில் (Secondary Action). இந்த இரண்டாவதான தொழிலினுல்தான் நம் உயிர் உடலில் காக்கப்படுகின்றது.

## ஸ்லோகம் 64

அந்தராத்மாவையும் அதன் மூலம் சரீரத்தையும் ஒரு வெளி வியாதியோ, மருந்தோ பாதிக்கும்போது அது பொறுமையுடன் படிந்து போனதுபோல் போய் அந்த விரோதியான வியாதியின் வேகம் (சக்தி) அடங்கும் வரையில் தலையடங்கி இருக்கிறது. அது அடங்கினவுடன் அந்தராத்மாவானது இரண்டாவது வேலை (Secondary Action) என்னும்படியான எதிர்ப்பு முறையினுல் வியாதிக்கு நேர்மாருன குறிகளை உண்டாக்கியோ அல்லது அப்படி செய்யவேண்டிய அவசியமில்லாவிட்டால் (வியாதியின் குறிகளுக்குத் தகுந்த முறை இயற்கையில் இல்லாவிட்டால்) அந்தராத்மா தன்னுடைய உன்னத சக்தியினுல், வியாதியினுல் கெட்டுப்போன பாகங்களைச் சரிசெய்து உடலை பழைய நிலைமைக்கு கொண்டுவந்து விடுகிறது. இதுவும் இரண்டாவது வேலை (Secondary Action) தான்.

## ஸ்லோகம் 65

கீழே கொடுக்கும் உதாரணங்களினுல் ஒவ்வொரு மருந்தும் வியாதியஸ்தரிடத்தில் முதல் மாறுதல்களையும் (பிரைமரி ஆக்ஷனையும் Primary action) அந்த முதல் மாறுதலினுல் அந்தராத்மா பாதிக்கப்பட்டவுடன் தோற்றுவிக்கும் குறிகள் அல்லது மருந்தின் முதல் மாறுதல் முடிந்த பிறகு தோன்றும் இரண்டாவது தோற்றத்தையும் (ஸெகண்டரி ஆக்ஷனையும் Secondary action) கவனிப்போம்.

சூடான தண்ணீரில் நனைக்கப்பட்ட ஒரு கை மற்ருெரு கையைவிடச் சூடாக இருக்கிறது (இது Primary action சூடாயிருப்பது). தண்ணீரிலிருந்து கையை எடுத்த சிறிது நேரத்திற்குப் பிறகு தண்ணீரில் நனைக்காத கையை விட நனைத்த கை குளிர்ச்சியை அடை

கிறது. இதுதான் (Secondary action) அல்லது அந்தராத்மா தன்னை பாதிக்கும் சக்திக்கு எதிர்த்து மாறுதல்களான குறிகளை காண்பிக்கிறது. இதேமாதிரியாக ஒவ்வொரு மருந்துக்கும் ஏன் உடலில் செலுத்தப்படும் ஒவ்வொரு பதார்த்தத்துக்கும் முதலாவது இரண்டாவது என இருவகை மாறுதல்கள் (Primary & Secondary action) என்ற தன்மைகள் உண்டு. இரண்டாவது வேலையினுல் நிலைமை பழைய நிலைமையைவிட அதிகமாகி தோற்றுகிறதே ஒழிய குறைவாக தோற்றுகிறதில்லை.

## ஸ்லோகம் 66

**ஆனுல் அதுமாதிரியான எதிரிடையான நிலைமை நம் ஹோமியோபதி ஔஷதம் கொடுக்கும்போது உண்டாகிற தில்லை. ஏனென்ருல் நாம் கொடுக்கும் மருந்தானது மிகுந்த அணுவளவாய் இருப்பதால் இது கவனித்துப் பார்ப்பவர்களுக்கு மட்டும் தெரியக்கூடிய ஒரு முதல் தன்மை (வேலையை) உண்டு பண்ணுகிறது. ஒற்றுமை முறையாயிருப்பதனுல் உடல் நல்ல நிலைமைக்கு கொண்டுவரவேண்டிய அளவுக்குமட்டும் ஸெகண்டரி ஆக்ஷனையுண்டாக்கி உடலை பழைய நிலைமைக்கு வரச் செய்கின்றது.**

## ஸ்லோகம் 67

**இந்த உண்மைகள் இயற்கை, அனுபவம், இந்த இரண்டின் வாயிலாக நமக்கு ஒற்றுமை வேற்றுமை முறைகளின் வித்தியாசங்களைத் தெரிவித்து ஒற்றுமை முறையினுல் உண்டாகும் நிரந்தரமான குணத்தை தெரிவிக்கின்றது.**

**குறிப்பு:** ஆனுல் அவசரக் கேசுகளிலும், திடீரென்றவிபத்துக்களிலும் உயிர்போகும் தருணத்தில் (ஒற்றுமை அல்லது ஹோமியோபதி முறைப்படி) மருந்துகள் கொடுக்க அவகாசம் போதாதபோது நாம் இந்த வேற்றுமை முறையை தற்காலீகமாக உபயோகப்படுத்தலாம். (மூச்சு நின்றுபோகுதல், ஜலத்தில் மூழ்கி பிரக்கினையற்றுக்கிடத்தல், பனியினுல் விரைத்துப்போகுதல் இன்னும் மற்ற எதிர்பாராமல் உண்டான விபத்துக்கள்) நாம் இந்த அவசரக் கேஸ்களில் எதிர் முறையை (Antipathic and Palliative எதிர்ப்பு, மேலும் தற்காலீக

சாந்தி செய்யக்கூடியது) உபயோகப்படுத்தி அந்தராத்மா வியாதி களினால் அல்லாமல் விபத்துகளினால் பாதிக்கப்பட்டு கட்டுண்டிருக்கும் நிலைமையை நிவர்த்திக்கமட்டும் நாம் இந்த எதிர்முறையை உபயோகிக் கிறோம். வியாதியும் இந்த கேஸ்களில் இல்லை. வியாதியை நிவர்த்திக்க எதிர்முறையை உபயோகப்படுத்த வில்லை. தற்காலீக தடங் கலுக்கு தற்காலீக சாந்தி செய்வது முறையும் நியாயமுமேயாகும். தற் காலீக விபத்துக்களிலிருந்து விடுவிக்கப்பட்ட அந்தராத்மா தன் வேலையை உடனே செய்ய ஆரம்பிப்பதால் மருந்தே அநேக கேஸ்களில் தேவையேயில்லை.

## ஸ்லோகம் 68

**இப்பொழுது ஒற்றுமை முறையினால் வியாதியின்கண் உண்டாகும் குணங்களைப் பார்ப்போம்.**

**(கருத்து)** நாம் உபயோகிக்கும் சிறிய அளவு மருந்து குறிகளின் ஒற்றுமையினால் உடம்பின்கண்ணிருக்கும் வியாதியை ஒற்றுமை நியாயப்படி (ஒரே காலத்தில் ஒரேவிதமான இரண்டு வியாதிகளின் குறிகள் ஒத்து உடம்பில் இருக்காது) விலக்கி விட்டுத்தான் (தற்காலீக வியாதி Artificial disease) அந்த இடத்தில் வியாபித்திருந்து தானும் காலக்கிரமத்தில் உடம்பைவிட்டு நீங்கி விடுகின்றது. நீங்கினவுடன் உடல் பழைய நிலைமைக்கு வந்துவிடுகின்றது. அந்தராத்மாவும் தான் எதிராக பாதிக்கப்படாததினால் உடல் சரியாவதற்கு வேண்டிய அளவு குறிகளை உண்டாக்கி பழைய நிலைமையை அடைந்துவிடுகின்றது.

## ஸ்லோகம் 69

**வேற்றுமை அல்லது தற்காலீக முறையில் மேலே கூறிய தற்கு நேரான முறையில் வியாதி குணமடைவதுபோல் தோன்றுகின்றது. இந்த முறையில் வைத்தியர் கொடுக்கும் மருந்து வியாதியின் குறிகளுக்கு நேர் எதிரிடையாக இருக்கின்றது.**

**(உதாரணம் 1)** அபின் தன்னுடைய முதல் தன்மையினால் வலியைத் தெரியாமல் செய்து ஒரு மயக்கத்தை ஏற்படுத்தி அந்தராத்மா கொஞ்ச நேரத்துக்கு வலியை உணராமல் இருக்கும் நிலைமையை

உண்டாக்கி விடுகின்றது. இந்த வலிக்கு அபினின் முதல் தன்மை விரோதமானது அல்ல. ஏனென்றால் வியாதியின் தற்போதைய நிலைமைக்கு சரியான நிலைமையுடைய முதல் தன்மை இந்த மருந்தினால் உண்டாக்கப்படுகின்றது. இந்த முறையால் வியாதியை யகற்றலாம் என்று நினைப்பது பகல் கனவுதான். ஏனென்றால் இந்த முறையிலும் வியாதியினால் பாதிக்கப்பட்டிருக்கும் பாகங்களை மருந்தின் முதல் தன்மை பாதித்துதான் ஒற்றுமையில்லாத காரணத்தினாலேயே வியாதியை ஒன்றும் செய்ய முடியாமல் தன்னுடைய சக்தி முடிந்தவுடனே வெளியேறி விடுகின்றது. நாம் வியாதியை நிவர்த்திப்பதற்கு ஒவ்வொரு மருந்தினுடைய இரண்டாவது தன்மையைத்தான் கவனித்துக்கொள்ள வேண்டும். இயற்கை வியாதியைப்போல ஆனால் சிறிது அதிக சக்தியுள்ள குறிகளை மருந்து உண்டாக்கினாலொழிய வியாதியிருந்தயிடத்தை கைப்பற்ற முடியாது. வியாதியும் விலகாது. அந்தராத்மா தற்காலீகமாக தலை குனிந்து இருந்து எதிர் முறையினாலும் அடிக்கடி கொடுக்கும் அதிக மருந்துகளினாலும் தாக்கப்பட்டு வியாதியுற்ற பாகங்கள் இன்னும் அதிகமாகவே நோயுறுகின்றன.

**(உதாரணம் 2)** துக்கப்படுகிறவனுடைய துக்கம் ஏதாவது ஒரு சந்தோஷகரமான காரியத்தினால் சிறிது நேரம் தடைப்படுகிறதேயொழிய அது நீங்கினவுடன் மறுபடியும் துக்கத்தை இன்னும் அதிகமாகவே மனதில் அனுபவிக்கிறான். கைதி இருட்டறையில் திடீரென்று வந்த வெளிச்சம் எடுக்கப்பட்டபின் முன் தெரிந்த சாமான்கூட இப்பொழுது தெரியாமல் தவிக்கும் நிலைமையைப்போல்தான்.

## ஸ்லோகம் 70

***நாம் மேலே எடுத்துக்காட்டிய உதாரணங்களிலிருந்து கீழே குறிப்பிட்ட உண்மைகள் விளங்குகின்றன.***

(1) வியாதிகளில் வியாதியுற்றவர் அனுபவிக்கும் கஷ்டங்களும் அவர்கள் திரேக நிலை மாறுபட்ட நிலைமையின் குறிகளும் தான் நீக்கப்படவேண்டும். அதாவது குறிகள் முறையாய் எடுக்கப்பட்டு பிணியை அகற்றவேண்டுவதே பிணியாற்றுவரின் கடமை. அதற்குத் தகுந்த மருந்துகள் கொடுக்கப்படவேண்டுமேயல்லாது இதனாலோ அதனாலோ என்று வியாதியின் காரணங்களை கற்பனை செய்வது அனாவசியமாகும்.

(2) இந்த உடலானது தன் சுகநிலைமையினின்றும் மாறுவதையே நாம் வியாதியுறுதல் என்று கூறுகிறோம். வியாதியுற்ற உடல் மறுபடியும் சுகமடையவேண்டுமென்றால் மருந்துகளும் வியாதியற்ற உடல்களில் பரீக்ஷை பார்த்து அதனுடைய சந்தேகமற்ற குறிகளால் வியாதிகளுக்கு ஒத்த மருந்துகளை கொடுத்து குணப்படுத்தவேண்டும்.

(3) பல அனுபவங்களிலிருந்து நாம் தெரிந்துகொள்வது ஒரு இயற்கை வியாதியானது நல்ல உடம்பில் எதிரான குறிகளை உண்டாக்கும் சக்தியையுடைய மருந்துகளினால் (எதிர் முறை) ஒரு நாளும் குணமாகாது. மேலும் இயற்கை வியாதி இன்னொரு வியாதி எவ்வளவு பலமுள்ள ஒற்றுமையில்லாத (மருந்தின்) வியாதியானாலும் நீக்கப்பட மாட்டாது.

(4) மேலும் பல அனுபவங்களிலிருந்தும் தெரிவதென்னவென்றால் ஒற்றுமையில்லாத மருந்தினால் உடம்பின்கண் உண்டாக்கப்படும் வியாதி உடலில் உள்ள வியாதியை சிறிது நேரம் அமுக்கிவிடுகிறது. பிறகு பழைய வியாதி முன் இருந்த நிலைமையைவிட இன்னும் அதிகமாகவே பாதிக்கப்பட்டு வெளியில் தோன்றுகிறது. இதுமாதிரி நாள்பட்ட வியாதிகளில் வைத்தியம் செய்வது பிரயோஜனம் இல்லை. ஏனென்றால் அந்தராத்மா தன்னை சரிப்படுத்தக்கூடாத நிலைமையை அடைந்துவிடுகின்றது.

(5) கடைசியாக நாம் செய்யக்கூடிய சரியான முறை நம் ஹோமியோபதி முறைதான். ஏனென்றால் இந்த முறையினால்தான் வியாதியை யகற்றுவதற்கு ஒற்றுமையான மருந்துகளை கொடுத்து அந்தராத்மாவை பலப்படுத்துகிறோம். அந்தராத்மாவும் தன்னுடைய பலப்பட்ட நிலைமையால் உடலை பழைய நிலைமைக்கு கொண்டுவந்து விடுகிறது.

## ஸ்லோகம் 71

**இப்பொழுது வியாதிகள் குறிகளால்தான் அறியப்படுகின்றன. இதை நீக்க மருந்துகள் இந்த வியாதிகளின் குறிகளைப்போல நல்ல உடலில் உண்டாக்கும் சக்தியையுடையதாய் இருக்கவேண்டும். (இதுதான் உண்மை குணம் செய்வதின் போக்கு) இது கீழே கூறும் மூன்று அங்கங்களினால் ஆகியிருக்கின்றன.**

(1) ஒரு பிணியகற்றுபவன் வியாதிகளில் வியாதியகலுவதற்கு எதை தெரிந்துகொள்ளவேண்டுமென்று எப்படி தெரிந்துகொள்வது?

(2) இயற்கை வியாதிகளை குணம் செய்வதற்கு ஏற்பட்ட மருந்தின் சக்திகளை (வியாதி உண்டாக்கும் சக்திகள்) எப்படி தெரிந்து கொள்வது? ஏனென்றல் இதுதான் இவன் கையாளும் **ஆயுதங்கள்.**

(3) உபயோகிக்கும் முறை உபயோகப்படுத்தவேண்டிய காலம், அளவு, இடம் முதலியவற்றை சந்தேகமறத் தெரிந்துகொள்ளவேண்டும்.

## ஸ்லோகம் 72

**மேலே கூறிய மூன்று அறிக்கைகளையும் ஒவ்வொன்ருக எடுத்து விளக்குவோம்.**

(1) மனிதனை அணுகும் பிணிகள் இரண்டு வகைப்படுகின்றன. ஒன்று தோன்றி மறையும் வியாதிகள். மற்றென்று தோன்றுவது தெரியாமலேயே உடலைப்பற்றி நாளடைவில் உடலை அழிப்பது. இதை Acute & Chronic diseases என்று கூறுகிறேம். நீடித்த வியாதியில் வியாதி தோன்றும்போதே அந்தராத்மா தன்னுடைய கடமை (உடலைக் காக்கும் கடமை)யை முடிந்தமட்டும் செய்கிறது. அந்தராத்மா தன்னைத் தாக்கும் கொடிய வியாதிகளைத் தாக்கி எதிர்க்க அதன் பலம்மட்டும் போதாமற் போனுல் எதிர்த்து முறியடிக்கப்பட்டு கடைசியில் உடலில் வியாதி பரவ இடம் கொடுத்து விடுகின்றது. வியாதி உடலிற் பரவி நாளடைவில் உடல் அழிந்துவிடுகிறது. இது உடம்பின் கண் ஆழ்ந்து பதுங்கியிருக்கும் ஒரு மியாஸம் (miasm) என்னும் அடிப்படை வியாதியின் விளைவேயாகும்.

## ஸ்லோகம் 73

**தோன்றி மறையும் வியாதிகள் இருவிதப்படும். ஒன்று தனிப்பட்ட மனிதர்களை பாதிக்கலாம். இது அவர்களின் உடல் நிலைமை பலவித விஷக்காற்று முதலியவைகளினுல் பாதிக்கப்பட்டிருப்பதே காரணமாகின்றது. மிதமிஞ்சின ஆகாரமோ அல்லது ஆகாரக் குறைவோ, அளவு கடந்த உழைப்பின் விளைவுகளினுலேயோ, குளிர், அதிக உஷ்ணம், நரம்புத் தளர்ச்சிகள், மன அதிர்ச்சிகள் இன்னும் இதைப்**

போல அநேக காரணங்கள் திடீரென்று தோன்றும் வியாதி களுக்குக் காரணமாகின்றன. உட்புகுந்து நோக்கின் இவை ஆழ்ந்து கிடக்கும் ஸோராவின் கிளர்ச்சிகளேயாம். தோன்றி மறையும் வியாதிகள் அதிக சக்தியுள்ளவையாக இல்லாவிட்டால் இந்த ஸோராவானது தன்னுடைய பழைய நிலைமைக்கு சீக்கிரம் திரும்பிவிடுகிறது. தோன்றி மறையும் வியாதிகள் இரண்டாவதாக பல பேர்களை பல இடங்களில் சீதோஷ்ண மாறுதலினாலேயோ அல்லது சில விஷக்காற்றுகளினாலேயோ பலஹீனப்பட்டு, பாதிக்கக்கூடிய உடல் நிலையை உள்ளவர்களை (persons susceptible) பாதிக்கிறது. இதுபோலவே பெருவாரி யாக அனேக ஜனங்களை பாதிக்கும் வியாதிகளும் உண்டு. இவை தொத்து நோய் வகைகள். இவை பொதுவாக மனிதர்கள் நெருக்கமாக சுகாதாரமின்றி வசித்தலினால் உண்டாகும் விஷ தொத்து நோய்களேயாம். இவைகள் பரவுவதில் முதலிலிருந்து கடைசி வரையில் (அதாவது வியாதி ஆரம்பத்திலிருந்து மனிதன் அதன் விளைவாக இறப்பதோ அல்லது தப்பித்துப் போவதோ) ஒருவித திட்டமான குறி களையே காண்பிப்பதனால் இவைகளை ஒவ்வொரு பெயரிட்டு அழைக்கிறார்கள். இதுபோல் பெருவாரியான வியாதிகள் பெரிய தேசங்களில் சண்டையின் பிறகோ அல்லது ஒரு பஞ்சம் வந்த பிறகோ தோன்றுகின்றன. இவைகளினால் சில விசித்திரமான தோன்றி மறையும் வியாதிகள் மனிதர்களை அவர் ஆயுட் காலத்தில் ஒரு தடவையோ [(உ-ம்) கக்குவாய் இருமல், பெரியஅம்மை முதலியன] அல்லது பல தடவைகளோ ஒரே மாதிரியாக அடிக்கடி தோன்றும் [(உ-ம்) ஏஷ்யாடிக் காலரா, பிளேக், பலவித மஞ்சள் சுரம் (இது சமுத்திரக் கரையில்)] வியாதிகளாகத் தோன்றுகின்றன.

## ஸ்லோகம் 74

நாம் சாதாரணமாகக் காணும் நீடித்த வியாதிகளில் அனேகம் அல்லோபதி வைத்திய முறையில், நாளுக்கு நாள் மேலும் மேலும் அதிகமாகக் கொடுக்கப்பட்ட கொடிய மருந்து களின் விளைவுகளேயாகும். உதாரணமாக, கலோமெல், இரசம், இரச சம்பந்த ஔஷதங்கள், பூச்சுக்கள், சில்வர் நைட்ரேட்,

ஐயோடியம், கொயினு, அபின் பலவித மலமிளக்கிகள், முதலியவைகள் அடிக்கடி அதிகமாக உபயோகிக்கப்படுவதால் இவைகளினுல் பல கோளாறுகள் ஏற்படுகின்றன. இவை உடலேயே அழிக்காவிட்டாலும் உடலின் சில பாகங்களேயாவது அழித்து விடுகின்றன. அதாவது உடலின் சில பாகங்களின் உணர்ச்சியை அழித்தோ அல்லது உணர்ச்சியை அளவுக்குமீறி உண்டாகும்படி செய்தோ, சில பாகங்களே சிறுக்கவோ பெருக்கவோ செய்தோ, அல்லது சில பாகங்களே அழித்தோ, பலவித உபாதைகளே உண்டாக்குகின்றன. இவைகளினுல் உடல் முழுவதும் அழியாமல் அந்தராத்மா காப்பாற்றுகின்றது.

## ஸ்லோகம் 75

உடலுக்கு குணம் செய்யாத எதிர் முறையினுல் உண்டாக்கப்பட்ட வியாதிகள் உடம்பில் நாட்டப்பட்ட வியாதிகளாக வேரூன்றி விடுகின்றன. இவைகளே (முற்ற விட்டால்) குணம் செய்வது மிகவும் கடினம். ஏன்; முடியவே முடியாது.

## ஸ்லோகம் 76

இயற்கையன்னே நம் ஹோமியோபதி முறையில் சாதாரணமாகத் தோன்றும் வியாதிகளே நிவர்த்திக்க முறைகளே காண்பிக்கிருள். ஆனுல் இந்த எதிர் முறையினுல் உண்டாக்கப்பட்ட நாட்பட்ட வியாதிகள் அந்தராத்மா அதிகமாகப்பாதிக்கப்படாமலிருந்தால் அதற்கு வேண்டிய உதவியை செய்து (மியாஸத்தைக் கவனித்து மருந்து கொடுத்து வியாதியை நாளடைவில் ஹோமியோபதி முறையில்) குணம் செய்யலாம். எதிர் முறையினுல் கொடுக்கப்பட்ட அபரிமிதமான நிலேமையிலிருந்து பழைய நிலேமைக்கு உடலேக் கொண்டு வருவதற்கு யாதொரு வைத்திய முறையும் இல்லே. இருக்கவும் முடியாது.

## ஸ்லோகம் 77

ஜனங்கள் தங்களுடைய பழக்க வழக்கங்களினுல் சில உபாதைகளே உண்டாக்கிக்கொள்ளுகின்ருர்கள். இவைகளேயும் நீடித்த வியாதிகள் என்று சொல்லுவது தவறு. மதுபானம்,

புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களை அதிகமாக உபயோகித்தல், உடலுக்குத் தேவையான முக்கிய சில வஸ்துக்களை அகற்றி வைத்தல், சுகாதாரத்திற்கு ஒவ்வாத இடங்களிலும், காற்றோட்டமில்லாத இடங்களிலும் வசித்தல், மூளைக்கோ சரீரத்திற்கோ, அளவுக்கு மீறிய வேலையைக் கொடுத்தல், சதா கவலைப்பட்டுக்கொண்டே இருத்தல் முதலிய பல விஷயங்களில் நீடித்த வியாதிகள் போன்ற ஒரு நிலைமை ஏற்படலாம். இவைகளை நிவர்த்தி செய்ய (யாதொரு மியாஸமும் இல்லாத இடங்களில்) இப்பழக்க வழக்கங்களை மாற்றுவதே போதுமானதாக இருக்கும்.

## ஸ்லோகம் 78

உண்மையான நீடித்த வியாதிகள் ஏதாவதொரு நீடித்த மியாஸம் என்னும் காரணங்களாலேயே உண்டாக்கப்படுகின்றன. இவைகளுக்குச் சரியான சிகிச்சை செய்யப்படாமல் இருந்தால் நாளுக்கு நாள், வருடத்திற்கு வருடம் அதிகமாகிக் கொண்டே போகும். எவ்வளவுதான் ஒழுங்கான முறையில் வியாதியஸ்தர் தன் வாழ்க்கையை நடத்தினாலும், (சரியான ஹோமியோபதி சிகிச்சையளிக்காவிட்டால்) வியாதியஸ்தர் தான் சாகுமளவும் வியாதியில் அவஸ்தைப்பட்டே தீருவார். இவைகளும், நாம் மேலே 74-வது ஸ்லோகத்தில் சொல்லியபடி தவறான வைத்தியத்தினால் ஏற்படுத்தப்பட்டவைகளுமே, இன்று மானிட வர்க்கத்தின் மாபெரும் வைரிகளாகும். இயற்கையான வாழ்க்கையையோ, சரீரத்தின் இயற்கை சக்தியோ இவைகளை வெல்ல முடியாது.

## ஸ்லோகம் 79

இதுவரை சிபிலிஸ் என்னும் மியாஸம் சரியான சிகிச்சையினால் சொஸ்தம் செய்யப்படாவிட்டால், இது உயிருடன்தான் போகும் என்கிற விஷயம் பலருக்குத் தெரிந்திருக்கிறது. ஆனால் சைக்கோஸிஸ் என்னும் மியாஸமும், இவ்வாறேதான், சரியான சிகிச்சை செய்யப்படாவிட்டால் நீங்காது என்பதும் உண்மையான விஷயமாகும். சில குறிகள் மறைந்து

விட்டதினால் வியாதி சொஸ்தமாகிவிட்டது என்று நினைத்தனர். அது பகற்கனவுதான்.

## ஸ்லோகம் 80

மேலே கூறிய இரண்டு மியாஸங்களையும்விட மிகக் குரூரமானது ஸோராவாகும். ஸிபிலிஸ் தன்னுடைய சொரூபத்தை ஷாங்கர் (Chancre) என்னும்படியான புண்களினால் வெளிக்காட்டுகின்றது. அதேபோல சைக்கோஸிஸ் காலீப்ளவர் (Cauli Flower) போன்ற வளர்ச்சிகளினால் வெளிக் காட்டுகின்றது. ஸோராவோ ஒருவிதமான சருமக் கோளாறு களினால் தான் இருப்பதை அறிவிக்கின்றது. சரீரம் முழுவதும் பாதிக்கப்பட்டிருந்தாலும், இந்த சருமக் கோளாறுகள் இதற்கு முக்கியமான ஒரு அங்கம் ஆகும். இது குறைவாக இருந் தாலும் அதிகமாக இருந்தாலும், அதிக அரிப்பும், நமைச்சலும், (ஒரு விசேஷ நாற்றமும்) இதற்கு முக்கியமான குறிகள் ஆகின்றன. இந்த ஸோரா என்னும் இராட்சதன் போன்ற நிலைமையே இன்று தோன்றும் பல்வேறு வியாதிகளுக்கு மூலகாரணமாகின்றது. இவ்வியாதிகளுக்கு பதாலஜீ சாஸ் திரப்படி, நரம்பு பலவீனம், ஹிஸ்டிரியா, பித்தவாயு, பயித்தியம், உன்மத்தம், காக்கை வலிப்பு, பலவித வலிப்புகள், பல எலும்பு வியாதிகள், கல்லீரல் கோளாறுகள், புற்றுநோய், கீல்வாதம், மஞ்சட்காமாலை, பாண்டு, மாதவிடாய்க்கோளாறுகள், சரீரத்தின் பல உறுப்புகளிலிருந்து உதிரப்பெறுக்கு, காசம், செவிடு, பக்ஷவாதம் முதலிய ஆயிரக்கணக்கான பெயர்களிட்டு, அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனி வியாதியாகக் கருதப்படுகிறது. (இது தவறு என்பது ஹானிமென்னின் அபிப்பிராயம்).

## ஸ்லோகம் 81

மேலே கூறிய ஸோரா என்னும் மியாஸம் அநேக தலை முறைகளாக அநேக மனிதர்கள் மூலம் அநேகவிதமாகப் பரவிக் கொண்டே இருக்கின்றது. இந்த மியாஸம் ஒவ்வொரு மனிதனையும் அவன் இருக்கும் நிலைமைக்குத் தகுந்தபடி ஆழ்ந்து பரவியோ அல்லது அந்த மனிதனை அவன் இருக்கும்

ஒழுங்கான நிலைமையினுல் அவனைமட்டும் பாதிக்காமலோ இருந்துகொண்டேயிருக்கிறது. உதாரணமாக மியாஸம் தகப்பனுக்கு இருந்தும் அவன் குழந்தைகள் தெய்வாதீனத்தால் ஒழுங்காக வளர்க்கப்பட்டு நல்ல சீதோஷ்ண ஸ்திதியில் வளர்ந்து தான் செய்யும் தொழில், இருக்கும் இருப்பு முதலியவைகளினுல் இந்த மியாஸம் தலைகாட்டாமலே ஆழ்ந்து கிடக்கின்றது. ஆனுல் இவன் ஒழுங்காக இருக்காவிட்டால் மியாஸம் தற்போது மனிதன் இருக்கும் அசௌகர்யமான நிலையின் காரணத்தினுல் தலை தூக்கி காண்பித்து மறுபடியும் அமுக்கப்பட்டு மறுபடியும் மனிதன் பலஹீனமாய் இருக்கும் போது தலை காண்பிக்கின்றது. ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொருவிதமாக பெயர் பூண்டு தோன்றுகிறது. இதை ஆங்கிலத்தில் (Hydra headed monster) பலதலைகளுடைய ராக்ஷதன் என்று குறிப்பிடுகிருர்கள். சாதாரணமாகச் சொல்லுவபோல நாம் பிறக்கும்தோறும் பின் வரும் பாப மூட்டையானது கரைக்கப்படாவிட்டால் இந்த ஜன்மத்தில் செய்யும் பாபங்களோடு மூட்டை பெரியதாக வளர்ந்து கொண்டே போகின்றதோ அப்படியேதான் இந்த ஸோராவும், இதை இன்னும் விளக்கவேண்டுவது அவசியமாகின்றது. ஸாமுவேல் ஹானிமென் எழுதிய நாட்பட்ட வியாதிகள் (Chronic diseases) என்னும் அரிய நூலில் கூறியிருப்பது போல ஸோராவினுடைய பல ஆயிரம் நிலைமைகள் (ஆதித்த னுக்கு ஆயிரம் பெயர்கள் ஆனுல் எல்லாம் காரணப் பெயர்கள்) பல விதமாக உடம்பில் பல இடங்களில் தோன்றும்போது பல வித பெயர்களையடைகின்றது. இவை எல்லாம் ஸோராவின் கிளைகளே என்று அறியாமல் நாம் வியாதியின் பெயர்களுக்குத் தகுந்தபடி மருந்து கொடுப்பது எவ்வளவு தவருன காரியம் என்று தெரிந்துகொள்ளவேண்டியது.

**(கருத்து)** விஷக்கிருமிகளால் பரவும் தொத்து வியாதிகளும் அநேக தடவை வந்தும் ஒவ்வொரு தடவையும் ஒரேமாதிரியாகத் தோன்றினும் மனிதனை ஒரேமாதிரியாகப் பாதிப்பதில்லை. ஆனுல் பொதுக்குறிகளிலிருந்து வியாதிக்குக் கொடுக்கப்பட்ட பெயருக்கேற்ற மருந்தை கொடுக்கப்பட்டு வருகிறது. உண்மை வைத்தியன்

பெயருக்கு (வியாதியின் பெயருக்கு) வைத்தியம் செய்யாமல் வியாதியை யடைந்த மனிதனுக்குத் தோன்றும், விசேஷக்குறிகளை கவனித்து மருந்துகொடுப்பதே முறையாகும். பெயர் வைப்பதை வியாதி நிர்ணயம் செய்வதற்கு மாத்திரம் உபயோகப்படுத்தவேண்டும். வியாதியை நிவர்த்திப்பதற்கு அல்ல.

[*Diagnosis*—வியாதியின் பெயர் நிர்ணயம்.

*Treatment*—வைத்தியம் வியாதியின் பெயருக்கல்ல வியாதியுற்ற **மனிதனின் விசேஷக் குறிகளே** கைகாட்டியாக இருக்கவேண்டுமே தவிற வியாதியின் பெயரை இங்கு சம்பந்தப்படுத்தக்கூடாது.

இந்த பெயர் கொடுப்பதும் நாம் ஒவ்வொரு வியாதியையும் இது ஒருவிதத் தலைவலி, ஒருவித மலேரியா, ஒருவித நிமோனியா என்று குறிப்பிடவேண்டும்.]

## ஸ்லோகம் 82

**மேலே கூறியவற்றால் நாம் நாட்டப்பட்ட வியாதிகளின் அடிப்படையான காரணத்தை ஒருவாறு தெரிந்துக்கொண்டோம். அதோடு நாட்டப்பட்ட வியாதிகளை நிவர்த்திக்க ஒளஷத நிர்ணயத்தால் (Drug Provings) மருந்துகளின் குணாதிசயங்களையும் தெரிந்து கொண்டோம். உலகின் கண் தோன்றியிருக்கும் ஒவ்வொரு மூலிகையையும், ஏன் பாஷாணத்தைக் கூட, நம்முறையினால் கொடுமையை நீக்கி குணத்தைக் கையாளுகிறோம்.** *

இதில் (Acute and chronic) தோன்றி மறைவது, நாட்டப்பட்டது என்று பிரித்தால் தோன்றி மறையும் வியாதியின் குறிகள் தெளிவாக இருக்கும் ஆனால் நாட் பட்ட வியாதிகளின் குறிகளோ அவ்வளவு தெளிவாகத் தெரியாததால் மிகவும் ஆழ்ந்து கவனிக்கப்பட வேண்டும்.

---

*** இந்த அருமைத் தன்மையை கண்டுபிடித்து உறுதிசெய்து உலகுக்குத் தந்த நம் அருமைத் தந்தை ஹானிமனை எப்படிப் போற்றுவது? ஆயிரம் நாக்குப் படைத்த ஆதிசேஷனன்றோ அவன் புகழைப்பாட வேண்டும்.**

## ஸ்லோகம் 83

இப்படி வியாதிகளைப் பிரித்து அவை அவைக்குத் தகுந்த படி மருந்துகளைக் கண்டுபிடிக்கும் வழியை யறிய கீழேகண்ட ஸ்லோகங்கள் விளக்கும். வியாதி நிவர்த்திப்பவர் தன் கடமை களை ஒழுங்காக அறிந்து கொள்ளவேண்டும். (1) கவனம் (2) வியாதியின் போக்கையறிதல் (3) ஒரு குறிப்பிட்ட சில மருந்துகளின் மேல் விசேஷப்பற்று இல்லாமலிருப்பது.

## ஸ்லோகம் 84

வைத்தியம் செய்கிறவர் நோயுற்றவரைப் பார்த்து, அவரை அவருக்குண்டாகும் வியாதிகளின் போக்குகளை விபரமாகவும், மெதுவாகவும், சாதாரண வார்த்தைகளாலும் சொல்லும்படி சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லும்போது முக்கியமான வைகளை நோயுற்றவர் மெதுவாக சொல்லிக்கொண்டே போவதனுல் வைத்தியர் அவர் சொல்வதை நடுவில் குறுக்கிட்டு அவர் தொடர்ந்த எண்ணங்களை கலைத்து விடாமலும் குறிக்க வேண்டியவைகளை குறித்துக் கொள்ளவேண்டும். இப்படிக் குறித்துக் கொள்வதற்காகத்தான் முதன் முதலில் வியாதியுற்ற வரிடம் வைத்தியர் மிகவும் பரிவுடன் "உனக்கு என்ன பண்ணு கின்றது, அவசரப்படாமல் மெதுவாகச் சொல்" என்று சொல்லி விட வேண்டும். தவிரவும் வியாதியஸ்தர் கூறி முடித்தவுடன் அவர் பக்கத்திலிருக்கும் உறவினர்களையும் சிநேகிதர்களையும் வியாதியுற்றவர் உடம்பைப்பற்றி தெரிந்த வரையில், பார்த்த வரையில், சொல்லும்படி கேட்கவேண்டும். அப்படி அவர்கள் சொல்வதையும் வைத்தியர் அவர்கள் கூறிய சாதாரண வார்த்தைகளிலேயே குறித்துக்கொள்ள வேண்டும். (ப்ருவிங் களில் (Provings) மருந்துகளை பூருவ் செய்தவர் கூறிய சாதாரண பாஷையினுல் நமது மெட்டீரியா மெடிகா ஏற்பட் டிருப்பதினுல் நாமும் வியாதியுற்றவர்களை சாதாரண பாஷையில் கூறச்சொன்னுல்தான், மருந்து கண்டுபிடிக்க ஏதுவாகும்) அப்படி அவர்கள் சொல்லும்போது வியாதியைப் பற்றியாவது வியாதியஸ்தரைப் பற்றியாவது கூறிக்கொண்டு போகும் வரையில், தடுக்காமல் குறுக்கிடாமல் இருக்கவேண்டும்.

அவர்கள் வேண்டாதது ஏதாவது சொல்ல ஆரம்பித்தால் அப்போது அவர்கள் விட்ட இடத்தை தொடரச் சொல்ல வேண்டுமேதவிர நடுவில் குறுக்கிடக் கூடாது.

## ஸ்லோகம் 85

அப்படி எழுதும்போதும் கூட வியாதியஸ்தரோ அல்லது அவரைச் சேர்ந்தவர்களோ சொல்லும் குறிகளை வைத்தியர் தனித்தனி வரியில் நடுவில் இடம் விட்டு குறித்துக்கொள்ள வேண்டும். ஏனென்ருல் ஒரு குறியை முதலில் சுருக்கமாகச் சொல்லிய பிறகோ அல்லது வைத்தியர் திருப்பி விளக்கிக் கூற கேட்கும்போதோ விபரமாகச் சொல்வதை எழுதிக்கொள்ள போதுமான இடம் இருப்பதற்காகத்தான் முதன் முதலிலேயே இடம் விட்டு எழுத வேண்டும்.

## ஸ்லோகம் 86

பந்துக்களும், சிநேகிதர்களும், வியாதியுற்றவரும் சொல்ல வேண்டியதை சொல்லி முடித்தவுடன் வைத்தியர் எழுதிக் கொண்டதில் ஏதாவது தெளிவாகத் தெரியவேண்டுமாஞல் அவைகளைப் பற்றி மறுபடியும் கேட்டுவிட்டு இருக்கும் இடத்தில் குறித்துக்கொள்ள வேண்டும்.

**(கருத்து)** கேள்விகள் கேட்கும்போது எப்படிக் கேட்கவேண்டும் என்பது ஒரு தனி ஆற்றலேயாகும். இவைகள் மிகவும் பொதுப்பட்ட கேள்விகளாகவே இருக்கவேண்டும். உதாரணம் ஒரு வலி என்று எடுத்துக்கொள்வோம். வைத்தியர் கேட்கும் முறையானது தோன்றும் நேரம், தற்காலம் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் மருந்தின் முன்ஞ அல்லது பின்ஞ, சாப்பிடும்போதா அல்ல மருந்து சாப்பிடுவதை நிறுத்தி கொஞ்சம் நாளான பிறகா, வலியின் தன்மை, வலியுடண்டான போது மனதில் தோன்றும் எண்ணங்கள், உடம்பின் மற்ற பாகங்களில் தோன்றும் உபாதிகள், வலிதோன்றிய இடத்திலேயே மறுபடியும் தோன்றுகிறதா, இடம் மாறுகிறதா, எவ்வளவு நேரம் வலி இருக்கிறது, அதில் மிகவும் வலி கொடுமையா யிருக்கும் நேரம் எப்பொழுது, பகலிலா, இரவிலா, காலையிலா, மாலையிலா, வலி உடம்பை எப்படிப்

பட்ட அசைவினுல் (நடத்தல், நின்றல், உட்காரல் இடது அல்லது வலது பக்கம் படுத்தல்) சமனப்படுகின்றது அல்லது அதிகப் படுகின்றது அல்லது வலி உடம்பின்கண் ஒன்றுக்கும் சம்பந்தப்படாமலிருந்து கொண்டேயிருக்கிறதா, வலி ஏற்படுவதற்குகாரணம் ஏதாவது தெரிகின்றதா என்ற இவ்வளவையும் சிறுகச்சிறுக வியாதியஸ்தரின் போக்கின்படியே போய் தெரிந்து குறித்துக்கொள்ளவேண்டியது அவசியம். முதலிலிருந்து கடைசிவரையிலும் வைத்தியர் காது, வாய் இவைகளாலெல்லாம் கேட்டு குறித்துக்கொண்டிருக்கும் போதே கண்களால் வியாதியஸ்தர் வசிக்கும் அறையின் நிலைமை, அவர் பேசும்விதம் (படபட என்று. அதிகப் படுத்தியா, அசிரத்தையாகவா, கோபத்தோடா) என்ற மனேபாவங்களையும் நன்ருக கவனித்துக் கொள்ளவேண்டும். கண்களால் கண்டதையும் கேஸ் பேப்பரில் கடைசியில் குறித்துக்கொள்ளவும். வைத்தியர் பார்தத (observation of mental symptoms) மனக்குறிகள் மருந்து கண்டுபிடிப்பதற்கு மிகவும் ஒத்தாசையாயிருக்கும்.

## ஸ்லோகம் 87

கேள்விகள் கேட்கும்போது வியாதியஸ்தர் பதில் சுலபமாக ஆம், அல்லது இல்லை (Yes or No) என்று சொல்லும்படியாக வைத்தியர் கேள்விகளைக் கேட்கக்கூடாது. ஆம் அல்லது இல்லை என்று சொல்வதிலிருந்து வியாதியினுடைய உண்மையான நிலைமையை நாம் தெரிந்துகொள்ளவும் முடியாது. வியாதியஸ்தரும் சோம்பலினுலும், அவதியினுலும் நேரடியாக கேள்விகள் கேட்கப்பட்டமையினுலும் ஆம் அல்லது இல்லை என்று சொல்லி பேசாமல் இருந்து விடுகிருர்கள். அவர்களாகச் சொன்னல்தான் அவர்களுடைய வார்த்தைகளிலிருந்து வைத்தியர் அவர் படும் கஷ்டம், வார்த்தைகளின் உச்சரிப்பு, கவலை அல்லது அலக்ஷியத்தோடு சொல்லுதல் அதிகப்படுத்தி அல்லது குறைத்து சொல்லுதல் முதலியவைகளை கவனிக்க முடியும். ஆகையால் கேள்விகள் மிகவும் பொதுவாகவும் சாதாரணமாகவும் இருக்கவேண்டும்.

## ஸ்லோகம் 88

இப்படி வியாதியஸ்தர்களாகவே சொல்லுகிற விபரங்களிலிருந்து உடல் நிலை அல்லது மனேநிலைகளைப் பற்றிய பூரா விபரங்களும் அறிய முடியாவிட்டால் அதைப் பற்றி மறுபடியும்

பொதுவான கேள்விகளினுல் அதாவது மலம், மூத்திரம் முதலியன எப்படி இருக்கின்றன, காலே, இரவு நேரங்களில் தூக்கம் எப்படி இருக்கிறது, தாகம், ஞாபகசக்தி முதலியன எப்படி இருக்கின்றன, எந்தவிதமான ஆகாரங்களிலும், குடி வகைகளிலும் அவருக்கு விருப்பம் வெறுப்பு, அவையவைகள் அதனுடைய ஸ்வய ருசியில் இருக்கின்றனவா அல்லது ருசி வேறு படுகிறதா, சாப்பிட்ட பிறகு வயிறு முதலிய பாகங்கள் எப்படி இருக்கின்றன, என்பவை போன்றவைகளேக் கேட்டுப் பதிலே வைத்தியர் குறித்துக்கொள்ள வேண்டும்.

## ஸ்லோகம் 89

வியாதியஸ்தர்கள் அவரவர்கள் அனுபவிக்கும் வியாதி களின் குறிகளே விபரமாகச் சொல்வதிலிருந்தும் வைத்தியர் கேட்கும் கேள்விகளிலிருந்தும் ஒருவாறு வியாதியின் தன்மை யையும் போக்கையும் வைத்தியர் அறிந்து கொள்கிருர்கள்.

**(கருத்து)** வியாதியுற்றுக் கஷ்டப்படுபவர்களேப்போல் நடிக்கும் சில கேஸ்களேத் தவிர பாக்கி கேஸ்களில் வைத்தியர் முக்கியமாக வியாதியஸ்தர்கள் கூறும் விபரங்களினுல்தான் வியாதியின் தன்மையை அறிந்து கொள்ளவேண்டும். வியாதியஸ்தர் கூறி முடித்த பிறகு வைத்தியர் இன்னும் ஏதாவது குறிகளே தெளிவாக தெரிந்துகொள்ள வேண்டுமானுல் மறுபடியும் குறிப்பிட்ட கேள்விகளால் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும்.

## ஸ்லோகம் 90

இப்படித் தெரிந்துகொண்ட பிறகு வைத்தியர் தான் கண் களாலும் மனதாலும் பார்த்ததையும் அறிந்ததையும் சேர்த்துக் குறித்துக் கொண்டவுடன் வியாதியஸ்தர் வியாதிக்கு முன் இருந்த நிலேயில் இப்போது இருக்கும் குறிகளில் எவை நல்ல உடம்பின் நிலேமைக்கு விரோதமாக இருப்பவை என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

## ஸ்லோகம் 91

வியாதியஸ்தர் அவரவர்கள் முன்னுல் சாப்பிட்ட மருந்தின் போது தோன்றின குறிகளோ அல்லது எண்ணங்களோ

உண்மை வியாதியின் தன்மையை குறிப்பவைகளல்ல என்பதை வைத்தியர் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனுல் முக்கியமாக தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்ருல் அந்த மருந்து சாப்பிடுவதற்கு முன்னும் மருந்தை நிறுத்திய பின்னும் இருந்த குறிகளே வியாதியின் உண்மைத் தோற்றங்களாகும். இவைகளேத்தான் வைத்தியர் கவனிக்கவேண்டும். இவைகளில் நாட்பட்ட வியாதிகளானுல், வரும் வியாதியஸ்தர்கள் வெகு காலமாக கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தும் வைத்தியரிடம் வரும் வரையில் மருந்தும் சாப்பிட்டுக் கொண்டிருந்தாரானுல் வைத்தியர் கொஞ்ச காலத்திற்கு அதாவது ஒரு நான்கு அல்லது எட்டு நாட்கள் மருந்தில்லா மாத்திரைகளேக் கொடுத்து மறுபடியும் வரும்போது உள்ள குறிகளிலிருந்து வியாதியின் உண்மை உருவத்தை அறியவேண்டும்.

## ஸ்லோகம் 92

ஆனுல் வந்த வியாதிஸ்தர்கள் அனுபவிக்கும் வியாதியானது வெகு சீக்கிரம் கெடுதலே செய்யக்கூடியதாயிருந்தாலும் அல்லது கடுமையான நிலேமையிலிருந்தாலும் அதை மருந்து கொடுத்து நிவர்த்திப்பது வைத்தியரின் அவசியமான கடமையாகும். அதற்கு வைத்தியர் மிகவும் அவசர நிலேமையில் முக்கியமாக கவனிக்க வேண்டியவைகள் வியாதியஸ்தரின் தற்கால நிலேமை, வியாதிக்கு முன் இருந்த் நிலேமை, நடுவில் சாப்பிட்டுக் கொண்டிருந்த மருந்தின் குணங்கள், வியாதியும் மருந்துகளும் கலந்ததால் இப்பொழுது மாறுபாடுடன் தோன்றும் வியாதியின் தோற்றம் முதலியவைகளே வெகு சீக்கிரம் ஆராய்ந்து பார்த்து தற்போது உள்ள அவசர நிலேமைக்குள்ள மருந்தைக் கொடுக்கவேண்டும். அப்படிக் கொடுப்பதனுல் வியாதி அதிகமாகிக்கொண்டே போவதைத் தடுக்க ஏதுவாகும்.

## ஸ்லோகம் 93

வியாதியஸ்தர் கூறப்பட்ட வியாதி திடீரென்று தோன்றினதாயிருந்தாலும் அல்லது ஏதோ ஒரு காரணத்தினுல் இடைவிடாமல் தொடர்ந்து போய்க்கொண்டிருந்தாலும் வியாதியஸ்

தர்களேயோ அல்லது அவர்களது சிநேகிதர்களேயோ தனிமையில் கேட்கும் கேள்விகளினுல் எளிதில் தெரிந்துகொண்டு விடலாம்.

## ஸ்லோகம் 94

நாட்பட்ட வியாதிகளேப் பற்றி விசாரிக்கும்போது வைத்தியர் வியாதியஸ்தரின் தொழில், வசிக்கும் நிலேமை, ஆகாரங்கள், வீட்டில் அவர் இருக்கும் நிலேமை முதலியவைகளே விபரமாகக் கேட்டு கவனிப்பதனுல் இவைகளில் ஏதாவது ஒன்று வியாதியை இடைவிடாமல் தோன்றச் செய்கின்றதா என்று அறிந்து கொள்ளலாம்.

## ஸ்லோகம் 95

நாட்பட்ட வியாதிகளே மேலே கூறியபடி மிகவும் கவனமாகவும், சிறிய விஷயங்களேயும்கூட விடாமல் விசாரித்தறிய வேண்டும். ஏனென்ருல் இந்த சிறு அல்பமான விஷயங்களே மிகவும் முக்கியமானவை. இவைகளே நாம் வியாதியஸ்தர் அவதிப்படும்பொழுது சாதாரணமாய் கவனிக்க முடியாது; அவர்களும் சொல்லமாட்டார்கள். காரணம் யாதெனில் பல நாள், மாதம், வருஷமாக கஷ்டப்பட்டு உடம்போடு ஒட்டினுற்போல் வரும் சில குறிகளே அவர்கள் சர்வ சாதாரணமாக இயற்கையாகவே கருதிவிடுவார்கள். (இவைகள்தான் நம் வைத்திய முறைக்கு மிகவும் முக்கியமான குறிகள்.) இவைகளேத்தான் நாம் மற்ற விஷயங்களோடு கவனிக்கவேண்டும். வியாதியஸ்தர்களுக்கு வியாதிக்கும் இந்தக் குறிகளுக்கும் உள்ள சம்பந்தா சம்பந்தத்தை அறியும் சக்தி இருக்க முடியாது.

## ஸ்லோகம் 96

இதையும் தவிர வியாதியஸ்தர்கள் குணுதிசயங்களில் ஒவ்வொருவரும் வேறுபட்டு இருப்பதனுல் சிலர் வியாதியைக் கூட்டியோ குறைத்தோ கூறுவார்கள். மிகவும் நலிந்தவர்கள் வியாதியைத் தாங்கமுடியாததினுலோ அல்லது சீக்கிரம் குணமாக வேண்டும் என்பதாலேயோ வியாதியை அதிகப்படுத்தியும் கூறலாம். நாம் (வைத்தியர்) கவனிக்கவேண்டியது வியாதியஸ்தர் சொல்லுவதில் எது எது அவசியமானவை என்பது

தான். இது நாளடைவில் ஒவ்வொரு வைத்தியருக்கும் அனுப வத்தினுல் வரும்.

### ஸ்லோகம் 97

இன்னும் சில கேஸ்களில் வியாதியஸ்தர்கள் நாணம், பயந்த சுபாவம், சங்கோசம், சோம்பல் முதலியவைகளினுல் குறிகளை கூருமலோ அல்லது கூறுவதை பொதுவாகச் சொல் வதினுலேயோ நமக்கு வியாதியின் உண்மையான தோற்றம் தெரியாமலே போய்விடவும்கூடும்.

### ஸ்லோகம் 98

நாட்டப்பட்ட வியாதிகளில் வியாதியஸ்தரின் சிநேகிதர்களை விட வியாதியஸ்தர்கள் அவரவர்களின் வாயினுலேயே கூறுவது மிகவும் அவசியமானதால் அவர்களை மிகவும் ஜாக்கிரதையாக வும் வியாதியினுடைய குறிகளை கூறும்போது குறிகளின் விசேஷங்களையும் கவனமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். சிநேகிதர்கள் குறிகளை வியாதியஸ்தர் அனுபவிப்பதுபோல கூற முடியாதுதான். பொதுவாக இவைகளைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கு உலக அனுபவம், மனிதர்களுடைய குணுதிசயங் கள் முதலியவைகளில் முதிர்ந்த அனுபவம் மிகவும் அவசியம்.

### ஸ்லோகம் 99

பொதுவாக சமீபத்தில் வந்த வியாதிகளை (Acute Diseases) அறிந்துகொள்வதுதான் சுலபம். ஏனென்ருல் இவைகளை வியாதியஸ்தர் மாறுபாடில்லாமல் அனுபவித்துக் கொண்டிருப் பதனுல் சரியாகவே சொல்லக்கூடும். அவர்களின் சிநேகிதர் களும் சமீபத்தில் நடந்த விஷயங்களாகையினுல் மறந்து போகாமல் கூறலாம். இம்மாதிரி கேஸ்களிலும் வைத்தியர் எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டியதுதான். ஆனுல், வைத்தியர், அதிக சிரமப்படாமலே தோன்றி மறையும் (acute) வியாதிகளில் விஷயங்களைத் தெரிந்துகொள்ள முடியும்.

### ஸ்லோகம் 100

அவ்வப்போது ஒவ்வொரு இடங்களில் கொள்ளை நோய் கள் பரவி வரலாம். (Epidemic diseases). தவிர சில இடங்

களில் சில விசேஷ வியாதிகள் நிரந்தரமாகவே இருந்துவரலாம் (Endemic diseases). இம்மாதிரியான வியாதிகளில் வைத்தியர் கவனிக்கவேண்டியவை பின்வருமாறு. இதே மாதியாக இதற்கு முன் எப்பொழுதாவது தோன்றியிருக்கிறதா. அதன் விபரம் காரணம், அது எப்படி தடுக்கப்பட்டது, பரவாமல் செய்யப்பட்டது. இப்போது தோன்றியதற்கும் அதற்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா என்பதை கவனிக்கவேண்டும். ஆனுல் வைத்தியம் செய்யும்பொழுது ஒழுங்கான முறையில் வைத்தியம் செய்ய வேண்டுமானுல் ஒவ்வொரு கேஸையும் அதனதன் குறிகளுக்குத் தகுந்தபடி இது ஒரு புதியது இதற்குமுன் தோன்றியதில்லே என்று நினைத்து வெகு ஜாக்கிரதையாக குறிகளே எடுத்து வைத்தியம் செய்யவேண்டும். இப்படி செய்வதினுல் அம்மை முதலிய வியாதிகளேத் தவிர பாக்கி எல்லாம் ஒன்றைப்போல் தோன்றினுலும் ஒவ்வொரு கேசுக்கும் மிகுந்த வித்தியாசங்கள் இருப்பதை அறியலாம்.

## ஸ்லோகம் 101

பெருவாரி வியாதிகளில் அவைகள் தோன்றினவுடன் வைத்தியருக்கு ஒன்றிரண்டு கேஸ்களிலிருந்து அவைகளுடைய உண்மையான தோற்றம் தெரிய வராது. பல கேஸ்களே கவனமாகக் கவனித்து ஒருவாறு பொதுக் குறிகளேக் கண்டுபிடித்து அவற்றிற்குத் தகுந்தாற்போலுள்ள ஹோமியோபதி மருந்தைக் கண்டுபிடிப்பதே முறையாகும். சில நுண்ணறிவுள்ள வைத்தியர்களுக்கு முதல் ஒன்றிரண்டு கேஸ்களின் போக்குகளிலிருந்தே சரியான மருந்து இன்னது தான் என்று தெரிந்தும் விடும்.

## ஸ்லோகம் 102

ஒவ்வொரு கேசையும் கேட்டுக் கேட்டு எழுதுவதிலிருந்து வியாதியினுடைய (தோன்றின பெருவாரி வியாதி epidemic disease) குணுதிசயங்கள் முழுமையும் தெரியவரும். சாதாரணக் குறிகள் ஒரு பக்கம், விசேஷக் குறிகள் ஒரு பக்கம் இரண்டும் சேர்ந்து வியாதியினுடைய பொதுவான தேர்ந்தெடுக்கப்பட்ட

மருந்தை ஊர்ஜிதப்படுத்தவோ அல்லது வேறு ஒரு மருந்தை எடுக்கவோ அனுகூலமாக்க உதவும். பல வியாதியஸ்தர்களுக்கு ஏற்பட்ட பெருவாரி வியாதியிலிருந்து முன் கண்டுபிடித்த மருந்து பொதுக் குறிகளுக்கு ஒத்திருக்கிறதா என்பதை அறியலாம்.

## ஸ்லோகம் 103

இதே போலவே நாட்பட்ட வியாதிகளிலும், அதிலும் முக்கியமாக ஸோரா, அதனுடைய உண்மையான உருவத்தில் ஒன்றேயானுலும் நமக்கு ஒவ்வொரு சமயங்களில் வியாதியஸ்தர் அனுபவிப்பதை பல்வேறு பெயர்கள் இட்டு அழைப்பதால் ஸோரா என்ற நாட்பட்ட அடிப்படையான வியாதி எளிதில் தெரிய வராது. இதற்காகப் பல இதே மாதிரியான கேஸ்களை எடுத்து அதற்குத் தகுந்த ஹோமியோபதி மருந்துகளை கண்டு பிடித்து (Anti psoric ஆண்டி ஸோரிக்) அவைகளை வைத்துக் கொண்டு ஒவ்வொரு கேஸிலும் உள்ள விசேஷ குறிகளி லிருந்து அதற்கு தகுந்த மருந்தை கொடுக்கவேண்டும்.

[குறிப்பு: நம் வைத்தியத்தில் இவ்வளவும் எழுதி மருந்து மிகவும் கவனமாக கண்டுபிடிக்க வேண்டும். ஆனுல் மற்ற முறையிலோ குறிகள் பிணியாளர் சொல்லும்போது அதைப்பற்றி குறிப்புக்கூட எழுதிக் கொள்ளுவது கிடையாது. வியாதியஸ்தர்களை பார்த்தவுடன் வியாதிக்கு ஒரு பொதுப் பெயரைக் கொடுத்துப் பல கலப்பு மருந்தை கொடுத்து விட்டுப் போய்விட்டு மறுபடியும் அதே கேசை வந்து பார்க் கும் பொழுது அவசரத்தில் ஏதோ நான்கு ஐந்து கேள்விகளை கேட்டு பழைய மருந்துச் சீட்டில் சில மாறுபாடுகள் செய்து கொடுத்துவிட்டுப் போய்வருகின்ருர்கள். இதுதான் சாஸ்திரிய வைத்தியமாம்! ஜனங் களும் அவர்கள் செய்யும் ஆடம்பரத்தினுல் மயங்கி அவர்களிடமே விளக்கின்மேல் விட்டிற் பூச்சி மயங்கி விழுவது போல் விழுந்து உடலை நாசம் செய்து கொள்ளுகிருர்கள். சாஸ்திரியமாகப் படித்தவர்கள் மட்டும் இந்த ஆர்கனுன் காட்டிய வழியைப் பின்பற்றி மருந்தைக் கொடுத்து நிஜமாகவே பிணியகற்றினுரானுல் அவர்களுக்கும் பெருமை, ஏழை பிணியாளர்களுக்கும் நன்மை. கடவுள் அவர்கள் கண்களை சீக்கிரம் திறப்பாராக! நம்முடன் ஒத்துழைத்தால் நாட்டுக்கும் நலம்,

மக்களுக்கும் நன்மை, அதிகப் பணச்செலவில்லாமல் பரந்த இந்தியத் தாய்நாட்டின் ஒவ்வொரு சிறிய குடிசைக்கும் பிணியகற்றுபவர் கிடைப்பர். கடவுள் கருணை புரிவாராக! ]

## ஸ்லோகம் 104

முதன் முதலில் ஒரு தடவை கஷ்டப்பட்டு வியாதியை சரிவரக் கவனித்து குறிகளை எடுத்து விட்டோமானல் நம் வேலையினுடைய கஷ்டமான பாகம் முடிந்தது போலவேயாகும். (Well begun is half done. The correctly chosen remedy not only cures the case but guides one further.) வைத்தியனுக்கும் ஒவ்வொரு கேஸிலும் மருந்து கொடுத்துக் கொண்டு வரும் போதே குறிகள் மறைந்து போவதைக் கவனித்து பாக்கிக் குறிகளுக்கு அவசியமான மருந்தைக் கொடுக்கலாம்.

## ஸலோகம் 105

இரண்டாவதாக பிணியகற்றுபவர் அறியவேண்டுவது இயற்கை வியாதிகளை நிவர்த்திக்கவேண்டிய ஆயுதங்களின் (மருந்துகளின்) தன்மைகளே. இவைகளின் வியாதி உண்டாக்கும் சக்தி நமக்கு தெரிந்திருந்தால் அதை மனதில் வைத்துக்கொண்டு இயற்கையான ஒரு வியாதியை நிவர்த்திக்கும் பொழுது எந்த மருந்து மிகவும் பொருத்தமாக இருக்கிறதோ அதை கொடுக்க ஏதுவாகும்.

## ஸ்லோகம் 106

வியாதிகளை சொஸ்தம் செய்வதற்கு மருந்துகள் வேண்டும். மருந்துகள் ஒவ்வொன்றும் நல்ல திரேகத்தில் என்ன என்ன குறிகளை உண்டாக்கும் என்றும் தெரிந்திருந்தாலன்றி நாம் வியாதிக் குறிகளை கண்டவுடன் சரியான மருந்து நம் கவனத்துக்கு வராது.

## ஸ்லோகம் 107

நாம் அப்படி பல மருந்துகளின் குணதிசயங்களைத் தெரிந்து கொள்வதற்கு வியாதியஸ்தர்களுக்கு தனித்தனியாகக் கொடுத்

தாலும் கூட மருந்துகளின் குணாதிசயங்களை அறிய முடியாது. ஏனென்றால் வியாதியின் குறிகளோடு மருந்தின் குறிகளும் சேர்ந்து விடுகின்றன. ஆகையால் ஒவ்வொரு மருந்தின் சக்தியை (குறிகள் உண்டாக்கும் தன்மை) அதை வியாதி யில்லாத தேக நிலையில் உள்ளவர்களுக்கு கொடுத்து அவர் களின் தேக நிலை மாறுபாட்டால் மருந்தின் சக்தியை அறிவதே சரியான முறையாகும்.

## ஸ்லோகம் 108

ஆகையால் மருந்தின் உண்மையான வியாதி உண்டாக்கும் தன்மையைத் தெரிந்து கொள்வதற்கு (மனம் உடல் முதலிய வைகளின் தன்மை மாறுபடுதல்) வியாதியில்லாதவர்களுக்கு கொடுப்பதுதான் சரி. இது இயற்கைக்கும் ஒத்து இருக்கிறது. ஆகையால் பல மருந்துகளை திரேக திடமுள்ளவர்களுக்குச் சிறிய அளவில் கொடுத்து (6. 12. 30.) அவைகளால் உண் டாக்கப்படும் மன உடல் மாறுதல்களையும், மாறுதல்களினால் நமக்கு நாளடைவில் தெரிந்த அல்லது கேள்விப்பட்ட எந்த வியாதிகளின் குறிகளுக்கு ஒத்திருக்கிறது என்று கவனித்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் மருந்துகள் வியாதியை குணம் செய்யவேண்டுமானால் அவைகள் வியாதியைப்போல குறிகளை உண்டாக்கும் தன்மையினால்தான். இதைத்தான் நாம் ஔஷத நிர்ணயங்களிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

## ஸ்லோகம் 109

மக்களுக்கு நிச்சயமாக வியாதிகளை குணம் செய்வதற்கு இதுதான் சரியான வழி. மருந்துகளை ஹோமியோபதி முறை யில் தான் உபயோகப்படுத்தி குணம் செய்யவேண்டும் என்ற உண்மையில் நான்(ஹானிமென்)(உண்மையைக் கண்டதினால்) நம்பி, விடாமுயற்சியாக இந்த வழியில் நான் தான் முதன் முதலில் இறங்கினேன். இது வரையிலும் இந்த முறையை இவ்வளவு நம்பிக்கையுடனும் விடாமுயற்சியுடனும் எவரும் செய்ததில்லை.

**குறிப்பு:–** ஹானிமென் காலத்திற்கு முன் பல தேசங்களில் ஆங்காங்கே குறிப்பாக இந்த முறையைப்பற்றி எழுதியிருக்கிறார்களே தவிற ஹானிமென் தான் இதை கவனித்தவுடன் உண்மை விளங்கி இதை 6 வருஷகாலம் ஆராய்ச்சி செய்து தன் உடம்பிலேயே மருந்துகளை பரீக்ஷை செய்தும் தன்னை நம்பினவர்கள், உறவினர் முதலியவர்களின் மீது பரீக்ஷை செய்தும் குறிகளை மிகவும் சிரமப்பட்டுச் சேர்த்து வைத்து அதை தலை முதல் கால் மனது முடிய ஒழுங்காக கொடுத்து இந்த முறைக்கு ஹோமியோ அல்லது ஒற்றுமை முறை என்ற பெயரையும் கொடுத்து ஆறு வருஷம் சிரமப்பட்டு பிறகுதான் வெளியிட்டார். இப்பொழுதும் இக்காலத்திலும் ஹானிமென் புரூவ் செய்த மருந்துகளின் தெளிவு, விளக்கம், மற்றவர்கள் பிற்காலத்தில் செய்த மருந்துகளில் காணப்படவில்லை. இன்னும் சிலபேர்கள் (Austrian Provings Vienna Provings) இப்பொழுது புரூவ் பண்ணினால் வேறுபாடாயிருக்குமோ என்று சந்தேகித்து புரூவ் செய்த பிறகு ஹானிமென் காலத்தில் அவர் செய்த **குறிகளை முழுவதும்** ஒத்திருந்ததோடுகூட அவர் எடுத்த சிரத்தை, விளக்கம், பின் காலத்தியவர்களுக்கு முடியவில்லை என்று விளங்கிவிட்டது. ஆகையினால்தான் எவ்வளவு வருஷங்கள் ஆனாலும் நம்முறை மாறுபடுவதில்லை. கவலையின்றி உபயோகப்படுத்தலாம்.

## ஸ்லோகம் 110

ஸ்லோகம் 108-க்கு பிறகு மேலே ஹானிமென் கூறுவதாவது. நான் எனக்கு முன் உள்ள மிகுந்த திறமைசாலியான அல்லோபதி மருந்து எழுத்தாளர்கள் புஸ்தகங்களில் மருந்துகள் நல்ல உடம்புக்காரர்களுக்கு தவருகக் கொடுக்கப்பட்டோ அல்லது அவர்களாலேயோ, அல்லது அவர்களின் விரோதிகளால் அதிக (கொலை செய்யக்கூடிய) அளவில் கொடுக்கப்பட்டபோது உண்டான குறிகளை தெளிவாக எழுதியிருக்கிறார்கள். நான் அதே மருந்துகளை குறைந்த அளவில் என் உடம்பிலும் நல்ல உடம்புக்காரர்கள் உடம்பிலும் பரிக்ஷார்த்தமாக கொடுத்தபோது நான் அனுபவித்த குறிகளையே ஒத்திருக்கும் உண்மையைக் கண்டேன். ஆனால் நான் பரிக்ஷார்த்தமாக கொடுப்பது குறிகளை உண்டாக்குமே தவிற மரணத்தை உண்டுபண்ணாது. குறிகளும் தானாகவே

காலக்கிரமத்தில் மறைந்துவிடும். இந்த எழுத்தாளர்கள் மருந்துகளின் கொடூர சக்திகளை விவரித்து எழுதினதால் அவர்கள் அடைந்த பயன் இதுதான். (1) பிறர்களை உபயோகப்படுத்தாமல் தடுப்பதற்கு (ஆனால் ஒருவருக்காவது அதிகமாய் மருந்து கொடுத்தால் கெடுதல்; ஆகையால் குறைவாக கொடுக்கவேண்டும் என்று சொல்லத் தோன்றவில்லை.) (2) தன்னுடைய அபார சக்தியை காண்பிப்பதற்கு (ஏனென்றால் இவர்கள் மருந்துகளை கண்ணை மூடிக்கொண்டு அதிக அளவில் கொடுப்பதை நிறுத்தினவுடன் உடம்பு தானாகவே சௌக்கியமானதை) இவர்களே தானே ஏதோ செய்துவிட்டதாக பிதற்றினார்கள். (3) அப்படி ஏதாவது வியாதியஸ்தர்கள் இறந்துவிட்டார்களானால் தான் தப்பித்துக் கொள்வதற்கு மருந்துகளின் கெடுதலான சக்திகளை விளம்பரப் படுத்தி இவர்கள் கொடுத்த அதிக அளவுதான் காரணம் என்று தோன்றாமல் மறைப்பதற்கு ஏதுவாயிருந்தன. ஒருவருக்காவது உண்மை புலப்படவில்லை. உண்டான குறிகள் மருந்துகளின் தன்மை என்று அறியாமல் தவறான வழியில் அந்த மருந்துகளை கட்டுப்படுத்துவதற்கு பல மருந்துகளுடன் கலந்து அதை அலசிப்பார்த்தவர்களே தவிற சரியான வழியில் அவர்கள் புத்தி செல்லவேயில்லை. அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு வியாதிகளையும் விஷமுண்ட கேஸ்களையும் விவரித்து எழுதினார்களோ, அவைகளே ஹோமியோபதி முறை தோன்றுவதற்கு சாதனமாயிற்று.

## ஸ்லோகம் 111

என்னுடைய (ஹானிமென்) மருந்துகளின் உண்மையான குணப் பரிசோதனைகள் யாதொரு (வியாதிகளைக் குணம் செய்யும்) உத்தேசத்தைக் கொண்டும் பகுத்தறியப் பட்டனவேயாயினும் அவைகள் பிரபல எழுத்தாளர்கள் (அலோபதி வைத்தியர்கள்) கூறிய குறிகளை ஒத்திருப்பதால் நாம் அறியவேண்டியது. (1) மருந்துகள் உடலின்கண் குறிகளை உண்டாக்குவது ஒரு திட்டமான வழியால்தான். (2) அது இயற்கையின் முறைப்படியே. (3) அவைகள். (ஒவ்வொரு மருந்தும்) தனக்கென்று உள்ள பொதுக்குறிகளுடன் தன்னுடைய விசேஷக்

குறிகளையும் தோற்றுவிக்கின்றது. ஒரு இரண்டு மருந்துகளுக்கு அநேக பொதுக்குறிகள் ஒத்திருந்தும்கூட ஆழ்ந்து பார்ப்போமானுல் அதனதன் விசேஷக்குறிகள் (Peculiar Characteristic) காணப்படுகின்றது. இதை அறிவது தான் நம் ஹோமியோபதி வைத்தியர்களின் கடமை. முக்கியமும்கூட. இதே சிறப்பான தன்மைதான் மற்ற போலி வைத்தியங்களை புறங்காட்டும்படி செய்கின்றது. இந்த உண்மையை அறிந்து ஒவ்வொரு ஜாதி மருந்துகளிலும் பல குறிகள் ஒன்றே போல் தோன்றினுலும் கடைசியில் அதனதன் விசேஷக்குறிகளினுல் மறுபடியும் பிரிந்துவிடுகின்றன. [கடவுள் சிருஷ்டியில் இரண்டு முகம் ஒன்றேபோலல்ல (No two faces are alike)]

## ஸ்லோகம் 112

அலோபதி எழுத்தாளர்கள் எழுதியிருக்கும் மருந்துகளின் கொடுந்தன்மைகளினுல் நாம் கீழ்கண்டவற்றை நிதர்சனமாக அறியலாம். (1) அபாயமான குறிகள் ஜாஸ்திபாக சாப்பிட்டு கடைசி நிலைமையிலேதான் அதனதன் கொடூரக் குறிகளைக் காண்பித்து கொலை செய்கின்றன. (2) மற்றொரு விசேஷம்: குறிகள் ஆரம்பிக்கும் போதும் முடியும்போதும் ஒன்றுக்கொன்று எதிரிடையாக இருத்தல். (3) அதாவது முதல் தோன்றும் குறிகள் ஸ்லோகம் 63 மருந்தினுடைய முதல் தோற்றம் (Primary Action) இரண்டாவதாக கடைசியில் தோன்றுவது, உயிர் உடல் இரண்டும் சேர்ந்து உள்ளே வந்த வியாதியை வெளியே விரட்டி அடிக்கும்போது உடலில் உண்டாகும் குறிகள் ஸ்லோகம் 62 (Vital force's fighting—Secondary action) (4) ஆனுல் நாம் நம் முறைப்படி சிறிய அளவில் மருந்து கொடுத்து வியாதியை குணப்படுத்தும்போது இந்தப்போராட்டம் (Secondary Action) மிகவும் குறைவாகத் தோன்றியோ அல்லது சிறிய அளவினுல் (மருந்து குறைத்தலினுல்) தோன்ருமலோ வியாதிகள் படிப்படியாக நீங்கும் தன்மையை நாம் அறியலாம். (5) நாம் கொடுக்கும் மருந்து உடல் நலத்துக்கு வேண்டிய சிறிய அளவுதான். அதனுல் தான் உடலும் (Vital Force) வெகு சீக்கிரம் அதிக சிரமமில்லாமல் தன்னை சீர்படுத்திக் கொள்கின்றது. ஸ்லோகம் 67.

## ஸ்லோகம் 113

இதற்கு விதி விலக்கு மயக்கம் தரும் மருந்துகளின் குறிகள் தான். எப்படியென்ருல் இவைகள் தன்னுடைய அமுக்கும் சக்தியினுல் முதலில் (Primary action) மனம், உணர்ச்சி, புத்தி, குணம் இவைகளை அமுக்கி விடுவதினுல், இவைகள் இரண்டாவது (Secondary action) தோற்றத்தில் அதிக உணர்ச்சி வேகம் முதலிய தன்மைகளை காண்பிக்கின்றன.

## ஸ்லோகம் 114

இந்த மேற் கூறிய மருந்துகளைத் தவிர பாக்கி எல்லா மருந்துகளும் நாம் சிறிய அளவில் கொடுக்கும்போது நல்ல உடலின் கண் குறிகளை, சிறிது காலத்திற்கோ அல்லது அதனதன் விசேஷத் தன்மையினுல் நீண்ட காலத்திற்கோ தோற்றுவிக்கின்றன.

## ஸ்லோகம் 115

இன்னும் சில மருந்துகளில் பரிசோதனையில் முதலிலேயே (In primary action only) இரண்டு விதமான முரண்பாடான குறிகள் தோன்றுகின்றது. இது உடலின் இரண்டாவது எதிர்ப்பு அல்ல (not secondary action). ஆனுல் சில மருந்துகளின் இரட்டிப்பான மாறுதல் தன்மை (Alternating action).

## ஸ்லோகம் 116

அநேகர்களுக்கு மருந்து கொடுத்தவுடன் சில குறிகள் வெகு சீக்கிரமாகவும், மற்றும் சிலர்களுக்கு வெகுதாமதமாகவும், மற்றும் சில ஆரோக்கிய தேகமுடையவர்களுக்கு குறிகள் மிக அபூர்வமாகவும் தோன்றுகின்றன.

## ஸ்லோகம் 117

116-ம் ஸ்லோகத்தில் கூறினபடி சில திரேக வாகு உள்ள வர்கள் சிற்சில பதார்த்தங்களினுல் பாதிக்கப்படுகின்றனர். ஆனுல் இதே பதார்த்தங்கள் மற்ற அனேகர்களுக்கு ஒருவிதத் தொந்திரவும் உண்டாக்காது. இந்த பாதிக்கும் தன்மை ஒரு சிலரைத்தான் பாதிக்கும், சில பதார்த்தங்கள் தான் சிலபேரைப்

பாதிக்கும். விளக்கிக் கூறுவோமானல் சிலருடைய தேகவாகுக்கு உள் ஆழ்ந்திருக்கும் மியாஸ முதலிய அடிப்படை காரணங்களினல் சில பதார்த்தங்கள் ஒத்துக்கொள்ளாமலிருத்தல்தான். (உதாரணம்) சிலருக்கு ரோஜாப்பூவின் வாசனை மயக்கத்தை உண்டாக்கும். சில செடிகளின் இலையை தொடுவதினல் அல்லது அதன் வாசனையை நுகருவதால் சிலர் பாதிக்கப் படுவது நாம் கண்டிருக்கலாம்; கேட்டிருக்கலாம். இந்த உண்மையினல் விசேஷ பாதிக்கும் தன்மையை உள்ள பதார்த்தங்களை மருந்துகளாக நாம் ஹோமியோபதி முறைப்படி செய்து இதே மாதிரியாக (Similar) பாதிக்கப்பட்டபேர்களுக்கு உபயோகிக்க முடிகிறது.

## ஸ்லோகம் 118

ஆகையால் நாம் அறிந்துகொள்ள வேண்டியது என்னவென்றல் ஒவ்வொரு மருந்தும் மனித உடம்பில் சில விசேஷ குறிகளை உண்டாக்குகிறது. இதே மாதிரியான விசேஷ குறிகள் வேறு எந்த மருந்தினலும் உண்டாக்கப்பட முடியாது.

## ஸ்லோகம் 119

ஒவ்வொருவிதச் செடி கொடிகளும் அதனுடைய அமைப்பு வளருதல், அதன் ருசி, அதன் மணம் முதலியன மற்ற செடிகளிலிருந்து மாறுபட்டு இருப்பதனலேதான் அவைகள் மனித உடம்பிலேயும் ஒருசில குறிகளைத்தான் உண்டாக்குகிறது. இதேதான், அதனதற்கு ஏற்ற குறிகள் தோன்றின வியாதியஸ்தரை குணம் செய்வதற்கு அனுகூலமாகுகிறது. இதனல்தான் ஒரு மருந்து கொடுக்க வேண்டிய இடத்தில் இன்னெரு மருந்து கொடுத்தால் குணமாகிறதில்லை. மருந்துகள் Similar ஆக மட்டும் இருந்தால் போதாது. Similimum ஆகவும் இருக்க வேண்டும். இந்த அனுகூல முறைதான் ஒரு கேசில் அநேக மருந்துகளிலிருந்து விசேஷ குறிகளினல் ஒரு தனிப்பட்ட மருந்தை எடுக்கும் சக்தியையளிக்கிறது.

## ஸ்லோகம் 120

ஆகையால் மருந்துகளின் சத்தியினல்தான் மனிதனுடைய சாவும், வாழ்வும், உடல்நலமும், உடலின் கெடுதலும் அமைந்

திருக்கின்றன. ஆகையால் மருந்துகளை மிகவும் ஜாக்கிரதை யாக அதனதன் பருவங்களில் முறைப்படி சேகரித்து சரியாகப் பக்குவம் செய்து மிகவும் ஜாக்கிரதையும் அனுபவமும் உள்ளவர் களால் சரியான ஔஷத நிர்ணயம் செய்து அதனதன் குறிகளை சேகரித்து அதைப் பிறகு உபயோகப்படுத்தி நிச்சயம் செய்து கொண்டு பிறகு பலருக்கு உபயோகப்படுத்தும்படியாக வெளியிடுதலால்தான் நம் முறையினுல் அநேக வியாதியஸ்தர்கள் குணமடைந்து நமது முறைக்கு உயிரையே தியாகம் செய்திருக்கின்றனர். (உதாரணம்) போனிங் ஹாசன் என்னும் புண்ணிய புருஷர் அவருடைய டியூபர் குலாசிஸ் வியாதி மற்ற முறையால் கைவிடப்பட்டு நம் முறையால் சொஸ்தப்பட்டவுடன் அவர் ஆற்றிய தொண்டு புஸ்தக மூலமாகவும், விசேஷ மாக அவருடைய பாக்கட் ரெப்பரட்டரி என்னும் அமிர்தமயமான புஸ்தகத்தாலும் அழியாப் புகழ் பெற்ருர். ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்சருக்கு ஒரு விவேகானந்த சுவாமிகள், நம் தந்தை ஸாமுவேல் ஹானிமானுக்கு ஒரு போனிங் ஹாஸன் மாத்திரமல்ல, மற்றும் கெண்ட், ஹெரிங் இதோடுகூட அமெரிக்காவின் திலகம் காரோல் டன்ஹாம்.

## ஸ்லோகம் 121

மருந்துகளில் சில கொடூரமானதாகவும், வேகமுள்ள தாகவும் இருக்கின்றன. இவைகள் மிகுந்த பலமுள்ளவர் களையும் சிறிய அளவில் கொடுத்தால்கூட மாறுதலை உண்டாக்கி விடுகின்றன. ஆகையால் குறைந்த சக்தியால் அதிகமாகக் கொடுத்து மிகுந்த சாதாரணமான ஆரோக்கியமுள்ளவர் களிடத்திலிருந்தும் குறிகள் உண்டாகும்படி கொடுக்கவேண்டும். நிர்ணயம் செய்கிறவர்கள் வியாதியில்லாதவர்களாயும், சுறுசுறுப்பும், புத்திசாலித்தனமாக இருப்பவர்களாகவும் இருக்க வேண்டும். ஏனென்ருல் இவர்கள்தான் உலகத்துக்கே வழிகாட்டிகள்.

## ஸ்லோகம் 122

இந்த பரீக்ஷைகளில் நாம் நமக்கு நன்ருக தெரிந்த (எடுத்த இடம் அதன் விசேஷ குணங்கள் அதன் முழு விபரம்)

மூலிகைகள்தான் உபயோகப்படுத்தவேண்டும். இப்படிச் சரியான கற்களாக பொருக்கி கட்டினுல்தான் நம் ஹோமியோபதி வீடு அழுத்தமாக இருக்கும்.

## ஸ்லோகம் 123

ஒவ்வொரு மருந்தையும் மிகவும் சாதாரண முறையால் கலப்பில்லாமல் எடுக்கவேண்டும். மருந்துச் செடிகளாயின், அவற்றின் ஸாரத்தை (juice) எடுத்துச் சிறிது சாராயத்துடன் (Alcohol) கலந்து வைக்கவேண்டும். (சாராயத்துடன் கலந்து வைத்தால் அதனுடைய சக்தி கெடாது.) பிறதேசத்திலுள்ள தாவர வர்க்க மருந்துகளை பவுடர் மூலமாகவாவது அல்லது எடுத்த உடனேயே சாராயத்துடன் கலந்து பிறகு தண்ணீரோடும் கலக்கலாம். உப்புப்பதார்த்தங்கள் முதலியனவற்றை எடுப்பதற்கு முன் தண்ணீரில் கலந்து எடுக்கவேண்டும். செடிகள் நமக்கு காய்ந்த நிலைமையில் கிடைத்தால் (காய்ந்த நிலைமையில் எந்த வஸ்துவுக்கும் சக்தி குறைவுதான்) அவைகளைத் துண்டு துண்டாக வெட்டி அவைகளுடன் கொதிக்கும் வென்னீரைச் சேர்த்து அதனுடைய மருந்து சக்தியை எடுக்க வேண்டும். சாப்பிடுவதும் சிறிது உஷ்ணத்தோடு இருக்கும் போதேதான் பயனளிக்கும். தாவரவர்க்கங்கள் அதனுடைய ஸாரத்துடன் சாராயம் சேர்க்கப்படாவிட்டால் அது செத்து வீணுகப்போய் தன்னுடைய மருந்தின் தன்மையை இழந்து விடுகிறது.

## ஸ்லோகம் 124

பரீக்ஷார்த்தமாக எந்த மருந்து எடுத்துக்கொள்ளும் பொழுதும் அவை தனிப்பட்டு வேறு எதுவுடனும் கலக்கப் படாமலும் இருக்கவேண்டும். ஒருநாளில் இரண்டுவிதமான மருந்து சாப்பிடக்கூடாது. ஒவ்வொரு மருந்தும் அதனதன் முழுக் குணங்கள் இருந்து மறைந்துபோகுமளவும் மற்ருெரு மருந்து சாப்பிடக்கூடாது.

## ஸ்லோகம் 125

மருந்து சாப்பிடும்பொழுது (Proving) ஆகாரத்தை சரிவரக் கட்டுப்படுத்தவேண்டும். சுலபமாக ஜீரணமாகக் கூடியதும்

மருந்துக் குணங்கள் இல்லாததுமாக இருக்கவேண்டும். சில கிழங்கு கீரைவகைகள் எவ்வளவு ஜாக்கிரதையாக பக்குவம் செய்தாலும் மருந்தைக் கெடுக்கும் சக்தி உடையனவாக இருக்கின்றன. இவைகளை அறவே விலக்கவேண்டும். குடிக்கும் பானங்களும் உடம்பில் மயக்கம் முதலியவைகளை ஏற்படுத்தாதவையாக இருக்கவேண்டும்.

## ஸ்லோகம் 126

ப்ரூவிங் செய்பவர் எந்தவிதமான மிகுந்த சிரமமான வேலையையும் செய்யக்கூடாது. மனதுக்கும் தேகத்திற்கும் அதிர்ச்சி தரக்கூடிய செய்கைகளைச் செய்யக்கூடாது. உடம்பும் ஆரோக்கியத்துடன் இருக்கவேண்டும். இவைகள் எல்லாவற்றிற்கும் முக்கியமாக தன் உடம்பில், மனதில் தோன்றுவதை விபரமாக சொல்லக்கூடிய புத்திசாலித்தனம் உடையவராக இருக்கவேண்டும். இவர்தான் உலகத்துக்கே வழிகாட்டியாக இருப்பதால் எவ்வளவு புத்தி கூர்மையாயிருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது.

## ஸ்லோகம் 127

ப்ரூவ் செய்பவர்கள் ஆண் பெண் இருபாலரும் தனித் தனியே ப்ரூவ் செய்தல் நலம். இதனால் அவரவர்கள் ஜனனேந்திரியங்களில் பாதிக்கப்படுதலையும் உணர்ச்சிகளையும் அறியலாம்.

## ஸ்லோகம் 128

ப்ரூவ் செய்பவர்கள் மருந்தை வீரியப்படுத்தாமல் எடுத்துக் கொண்டால் சரியான பலன் கிடைப்பதில்லை; ஏனெனில், அதனுள் மறைந்து கிடக்கும் சக்தி அதிக வீரியத்தினால்தான் காண்பிக்கப்படுகிறது. வீரியம் உயர உயர அதனுள் மறைந்து கிடக்கும் சக்தி வெளித் தோன்றுகிறது. மிகுந்த பலமில்லாத சாதாரண மருந்தையும் முப்பது வீரியத்தில் தினந்தோறும் நனைக்கப்பட்ட நான்கு மாத்திரைகள் காலி வயிற்றில் பலநாள் சாப்பிடப்படவேண்டும்.

## ஸ்லோகம் 129

அப்படி 128-வது ஸ்லோகத்தில் சொல்லியபடி எடுத்துக் கொண்ட மருந்து மிகவும் குறைந்த அளவில் இருந்து அதனுல் குறிகள் தெளிவாகத் தெரியாவிட்டால் (அதாவது உடம்பின் குறிகள் தெளிவாகும்படி பாதிக்கப்படுதல்) சாப்பிடும் மருந்தைக் கொஞ்சம் அதிகப்படுத்தி பிரதிதினம் சாப்பிடவேண்டும். ஏனென்ருல் எல்லோரும் ஒரே விதமான மருந்தால் ஒரே வித மாகப் பாதிக்கப்படுகிறதில்லே. ஆனுல் சில மருந்துகள் பல ஹீனமான மனிதர்களே பாதிக்காமலும் பலமுள்ளவர்களே பாதித்தும் பலவிதமான மாறுதல்களேயும் எதிர்பாராதபடி காண் பிக்கிறது. நாம் இதனுல் ஒரே சீராக ஒரு வீரியத்திலிருந்து ஆரம்பித்து சிறிது சிறிதாக அதிகப்படுத்திக்கொண்டு போவது உசிதமான நிலே. இதனுல் விசேஷக்குறிகள், சில ப்ரூவர்களி னுடைய தன்மையினுல் (Susceptability) தோன்றலாம்.

## ஸ்லோகம் 130

அல்லது முதலிலேயே கொடுத்த அதிக மருந்து சக்தி யுள்ளதாக இருந்து குறிகள் தோன்ற ஆரம்பித்து விட்டால் ப்ரூவிங் நடத்துகிறவர் அவ்வப்போது தோன்றும் குறிகள், விசேஷக் குறிகள், மாறுபட்டுத் தோன்றும் குறிகள் முதலிய வற்றைக் குறித்துக்கொள்ளலாம். இதுவும் உயர்ந்த வழியே. சிலமருந்துகள் ஒரு சக்தியாலேயே தன்னுடைய பூரா குணதிச யங்களேயும் காண்பித்து விடுகின்றது. இதற்கு ப்ரூவிங் செய்கிற வரும் மிகுந்த புத்திசாலியாயும் கவனிப்புள்ளவராகவும் இருக்க வேண்டும். ஒவ்வொரு மருந்தின் வேலே செய்யக்கூடிய கால அளவு அநேக தடவை செய்த ப்ரூவிங்களினுல்தான் நிர்ணயிக்கப்படவேண்டும்.

## ஸ்லோகம் 131

மேலும் விபரமாகப் புரிந்து கொள்ளுவதற்கு ஒரே மனி தருக்கு அநேக நாட்கள் மருந்தை அதிகப்படுத்திக் கொடுத்துக் கொண்டே போனுல் நாம் மருந்தினுடைய பொதுவான சக்தி களேத் தான் அறிந்துகொண்டே போகலாம். ஆனுல் எந்தக்

குறிகளுக்குப் பிறகு ஏற்படுகின்றன, எதனுல் ஏற்படுகிறது என் பது தெரியவராது. முதலில் கொடுத்த மருந்தின் சக்திக்கு இரண் டாவதாக அல்லது மூன்ருவதாக கொடுக்கும் அதே மருந்து சில குறிகளை சமனமடையச் செய்யலாம். அல்லது எதிரிடையான குறிகளை உண்டாக்கலாம். இவ்விதமான மாறுபாடான விசேஷக் குறிகளை தனிப்படுத்தி (பிராக்கட் போட்டு) வைத்துக்கொண்டு பிறகு செய்யும் ப்ரூவிங்களிலிருந்து அது மருந்தினுடைய இரண்டாவது தன்மையா (தேகத்தினுடைய எதிர்ப்புக் குறி களா) அல்லது மருந்தினுடைய மாறுபடும் தன்மையா என்று தெரிந்து கொள்ளலாம்.

## ஸ்லோகம் 132

ஆனுல் ப்ரூவிங் செய்யும்போது மருந்தினுடைய குணத்தை மட்டும் அறிய உபயோகப்படுத்தப் பட்டால் அநேக நாட் ளுக்குச் சிறிது சிறிதாக அதிகமாக கொடுத்துக்கொண்டே போய்த் தெரிந்துகொள்ள வேண்டும். இதுமாதிரியாக ப்ரூவிங் செய்தால் மிகுந்த சாதாரணமான மருந்தினுடைய குணுதிசயங் களும் தெரியும். ஆனுல் மிகுந்த புத்தி நுட்பமுள்ளவர்களாய் ப்ரூவிங் செய்பவர்கள் கிடைத்தால் விசேஷ குணங்கள் தெரியும்.

## ஸ்லோகம் 133

ஒரு மருந்து ப்ரூவிங் செய்யும்பொழுது ஒரு விசேஷமான குறி தோன்றியவுடனே அதனுடைய விசேஷங்களை அறிவதற்கு பலவித வேறுபாடுகளை (உட்காருதல், எழுந்திருத்தல், அசை தல், படுத்தல் முதலியவைகளினுல் மாறுபடுகிறதா, எவ்வளவு காலம் மாறுபாடுகள் இருக்கிறது) கவனித்து அறியவேண்டும். இன்னும் பலவிதமான முறைகள், சாப்பிடுதல், பலவித ஆகாரங் கள், காய்வகைகள், பேசுதல், இருமல், பகலில், இரவில், வெளி யில், உள்ளில், காற்றில் முதலிய பலவிதமான வேறுபாட்டினுல் ஒரு குறியின் விசேஷத்தை அறிந்து கொள்ளலாம்.

## ஸ்லோகம் 134

உலகில் மருந்துகள் நல்ல உடம்பின் கண் அதனதன் தன்மைக்கு (இயற்கைக்கு) தகுந்தபடி மாறுதல்களை உண்டாக்கு கிறது. ஆனாலும் ஒவ்வொரு மருந்தும் ஒரே சமயத்தில் ஒரே மனிதனிடத்தில் (ப்ரூவரிடத்தில்) தன்னுடைய விசேஷக் குறி கள் முழுவதையும் தோற்றுவிப்பதில்லை. சில விசேஷக் குறிகள் நான்காவது எட்டாவது அல்லது பத்தாவது ப்ரூவரிடத்திலும் உண்டாகலாம். இப்படித் தோன்றும் விசேஷக் குறிகள் முன்பும் தோன்றியிருக்கலாம். அல்லது தோன்றும் நேரத்திலும் மாறுபடலாம்.

## ஸ்லோகம் 135

ஒவ்வொரு மருந்தினுடைய முழு விசேஷக் குறிகளையும் காண வேண்டுமென்றால், அநேக தடவைகளில் அநேக ப்ரூவர் களிடத்திலிருந்து தோன்றிய குறிகளை அலசி ஆராய்ந்து பார்த்து தெரிந்துகொள்ளவேண்டும். பல தடவைகளிலும் ஒரே மாதிரியான குறிகளை ஒரு மருந்து வெளிப்படுத்துமானால் நாம் அந்த மருந்தின் குறிகளை நன்றாகத் தெரிந்துகொள்ளலாம்.

## ஸ்லோகம் 136

இயற்கையின் தன்மைப்படி ஒவ்வொரு மருந்தும் 117-வது ஸ்லோகத்தில் சொல்லியபடி அதனுடைய தன்மையினால் ஒருவன் உடம்பு நிலை மாறியிருக்கும்பொழுது அதேமாதிரி குறிகளைத் தோற்றினால் இந்த மருந்தானது நம் ஹோமியோபதி முறையின்படி ஒரேமாதிரியாயிருப்பதால் வியாதியை (குறிகளை) நீக்கிவிடுகிறது.

## ஸ்லோகம் 137

ப்ருவ் செய்வதிலேயும் ப்ருவ் செய்கிறவர் உண்மையை விரும்புகிறவரும், சாந்தமானவரும், வாழ்க்கையில் நிலை தவறு

மல் ஒழுங்காக இருப்பவராயுமிருந்தால், மருந்தினுடைய முதல் குணங்கள் (இதுதான் அவசியம் Primary effects) இரண்டாவது குணங்கள் அல்லது (Vital force) என்கிற உடலின் எதிர்ப்பு சக்தியினுல் தோன்றிய குறிகள் கலக்காமலும் இருக்கும். ஆனுல் அதிகப்படியான அளவில் மருந்து கொடுக்கப்பட்டால் வெகு சீக்கிரமாகவும் இரண்டாவது குறிகளோடு கலந்தும் குறிகளை உண்டாக்கிவிடும். இது செய்யப்படுவதினுல் உண்டாகும் அபாயங்களை மனதில் வைத்துக்கொண்டு நிதானமாகவும் முதல் குறிகளோடு இரண்டாவது குறிகள் கலக்காமல் இருக்கும்படி பார்த்துக் கொடுக்கவேண்டும்.

## ஸ்லோகம் 138

127-வது ஸ்லோகத்தில் கூறியபடி ப்ரூவ் செய்கிறவர்கள் உடம்பில் ஏற்படும் மாறுதல்கள் மருந்திஞல் ஏற்படுவதுதான். சில குறிகள் ப்ரூவருக்கு முதலிலேயும் சில சமயம் இருந்திருக்கலாம். இது மருந்து ப்ரூவ் செய்யும் போதும் உண்டானுல் அது அவர்களின் உடம்பின் தன்மையினுல் தான் என்று அறிய வேண்டும்.

## ஸ்லோகம் 139

வைத்தியரல்லாத மற்றவர் மருந்துகளை புரூவ் செய்யும் போது அவரவர் தெளிவாக மருந்து சாப்பிடும்பொழுது உண்டான, தோன்றிய குறிகள், உணர்ச்சிகள், அவைகள் தோன்றிய நேரம், மருந்து சாப்பிட்டதிலிருந்து எவ்வளவு மணி நேரத்திற்குப் பிறகு என்ற விவரங்களை குறித்து வைக்கவேண்டும். வைத்தியர் ஒவ்வொருநாளும் புரூவ் செய்கிறவர் தோன்றிய குறிகளை மறப்பதற்கு முன் எழுதிவைத்ததை தினமும் படித்து தோன்றிய எண்ணங்களை எழுதினதைப் பார்த்து மாற்ற வேண்டிய அவசியமிருந்தால் அதை மாற்றி எழுதிக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்வதில் ஒவ்வொரு குறியும் சரியாக ஆராயப்படும்.

## ஸ்லோகம் 140

அப்படி புரூவ் செய்கிறவர் எழுதப் படிக்கத் தெரியாதவராயிருந்தால் வைத்தியர் [புரூவ் நடத்துகிறவர்] கேட்டு தினமும்

எழுதிக்கொள்ள வேண்டும். புரூவ் செய்பவர் சொல்லும் வார்த்தைகளிலேயும் எழுதுவதில் மாறிவிடாதபடியும் இருக்க வேண்டும். 84 முதல் 99-வது ஸ்லோகங்களில் கூறியபடி வியாதியினுடைய போக்கை அறிவதற்கு சாதனமான இக்குறிகளை மிகவும் கவனமாகக் குறித்துக் கொள்ளவேண்டும்.

## ஸ்லோகம் 141

மிகவும் உயர்வான புரூவிங் முறை என்னவென்ருல் வைத்தியர் தானே மருந்தைச் சாப்பிட்டு உடலின் மாறுபாடுகளை தெளிவாக எழுதிக் கொள்வதேயாகும். சாதாரண ப்ரூவர்களை விட இவர்கள் நிச்சயமாகவும், தோன்றும் குறிகளின் தன்மைகளையும், அவைகளின் காலங்களையும் சரியான வார்த்தைகளால் குறித்துக்கொள்ள முடியும்.

## ஸ்லோகம் 142

புரூவ் செய்யும்பொழுது [வைத்தியர் புரூவ் செய்தால்] மருந்தினுடைய குறிகள் எவை, பழைய வியாதியின் குறிகள் எவை, [ஏனென்ருல் ஒவ்வொரு மனிதருக்கும் ஏதாவது உபாதைகள் இருக்கலாம்] என்று பிரித்து தெரிந்துகொள்ள வேண்டும். இது சாதாரணமாக எல்லோராலும் முடியாது. வைத்தியர் செய்வதினுல் அவருக்குப் பல அதிசயமான உண்மைகள் தெரிய வரும். இந்த ஆச்சர்யமான அனுபவமே இன்னும் பல மருந்துகளை புரூவ் செய்வதற்கு தூண்டுகோலாகும். இன்னும் ஒரு முக்கியமான விஷயம் என்னவென்ருல் புரூவ் செய்வதிலிருந்து புரூவ் செய்பவர் உடல் வலிவு அடையுமே தவிர கெடுதல் ஆவதே இல்லை.

(**கருத்து**) வியாதியின்போது தோன்றும் குறிகள், வெகுகாலம் முன் தோன்றியோ, அல்லது புதிதாக தோன்றியோ காணப்பட்டால், அவைகளே புரூவ் செய்யும் மருந்தின் குறிகளாகும்.

## ஸ்லோகம் 143

நாம் சாதாரண மருந்துகளை திட திரேகத்திலுள்ளவர்களிடத்தில் புரூவ் செய்யவேண்டும். அப்படி புரூவ் செய்யும்

போது உண்டான செயற்கை வியாதிகளின் (Artificial Disease) குணுதிசயங்களேயும், தன்மைகளேயும் (Modalities etc) விபரமாக எழுதிக்கொள்ள வேண்டும். இதுமாதிரியாக கொஞ்சம் கொஞ்சமாக கவனமாக சேர்க்கப்பட்டவைகள் தான் நாம் நம் உயர் ஹோமியோபதியின் முறைப்படி நாம் அடையவேண்டிய மெட்ரியா மெடிக்காவாகும். ஹானிமென் காலத்திலேயே சில மருந்துகள் வெகுதூரத்திலிருந்து பணத்துக்காக ப்ரூவிங் செய்கிறவர்களிடத்தில் குறிகளே சேர்த்து பார்வையிட்டதில் அது அவர் மனதுக்கு சமாதானமாயில்லே என்று கூறியிருக்கிருர். ஆகையால் ப்ரூவ் செய்கிறவர் தாஞகவே இஷ்டப்பட்டு வரவேண்டும். (Voluntary Prover) அதற்கு ஹோமியோபதியின் அருமை தெரிந்தவர்களாயிருக்கவேண்டும். மற்றும் ப்ரூவிங் நடத்துகிறவர்களும் மிகவும் படித்தவரும் அனுபவ முதிர்ச்சியடைந்தவராயும் இருக்கவேண்டும். ஏனென்ருல் இவைகள் தான் நமக்கு நம் வைத்தியத்திற்கு ஆதாரம். நமக்கு ஒரு குறி புதிதாக தோன்றுகிறபோது இந்த புஸ்தகத்தை புரட்டிப் பார்த்து இதுமாதிரியான குறிகள் எந்த ப்ரூவரிடத்திலாவது தோன்றியிருக்கிறதா, எந்த எந்த வேளேயில் என்ற விபரங்களே ஆராய்ந்து பார்க்கும்போதுதான் உண்மையான ப்ரூவிங்கின் அருமை தெரியும். இந்த ஆதாரத்தை சாதனமாகக் கொண்டு தான் நாம் வியாதிகளே முறியடித்து நிச்சயமாக குணம் செய்ய முடியும்.

## ஸ்லோகம் 144

மேலும் மெட்டிரியா மெடிகாவின் ப்ரூவிங் வார்த்தைகள் ப்ரூவ் செய்பவர் சாதாரண வார்த்தைகளாகவே இருக்க வேண்டும். சந்தேகமான வார்த்தைகளோ, 'தோன்றினது போல' கூறிய குறிகளோ ஒதுக்கப்படவேண்டும்.

## ஸ்லோகம் 145

இந்த விதமான மெட்ரியா மெடிக்காவின் ஆதாரத்திஞல் தான் இயற்கையில் தோன்றும் அநேகவிதமான வியாதிகளுக்கு ஏற்ற மருந்துகளே தேர்ந்தெடுக்க ஏதுவாகிறது. ஆஞலும் சில

வியாதிகளுக்குச் சரியான (Most appropriate) மருந்து இது வரையிலும் ப்ரூவ் செய்யப்பட்ட மருந்துகளில் இல்லாமலும் இருக்கலாம். ஆனாலும் இந்த வியாதிகளும்கூட நாம் சாதாரண மாகக் கூடியமட்டும் ஒத்து இருக்கிற மருந்துகளினால் நிச்சய மாகவும் ஒருவித இடைஞ்சலில்லாமலும் குணம் செய்துவிடும். (ஆனால் அல்லோபதியிலோ அந்த முறையில் உள்ள கலக்கப் பட்ட பல மருந்துகள் நாட்பட்ட வியாதிகளை சொஸ்தம் பண்ணவே முடியாது. ஏன்? வியாதி முற்றிக்கொண்டே போவதைக்கூட தடுக்க முடியாது).

## ஸ்லோகம் 146

மூன்றாவதாக உண்மையான வைத்தியத்தின் ப்ரூவ் செய்யப்பட்ட மருந்துகளை ஒரு ஜெட்ஜ் (Judge) பரிசீலனை செய்து முடிவுக்கு வருவதுபோல் தீர்க்கமாக ஆராய்ந்து அறிந்து பிறகுதான் கொடுக்கவேண்டும்.

## ஸ்லோகம் 147

இன்னும் விசேஷித்துக் கூறுமிடத்து வியாதியஸ்தர்களின் குறிகளின் ஆராய்ச்சியை (Totality of Symptoms) எந்த மருந் தின் ப்ரூவிங் ஆராய்ச்சிக்கு ஒத்திருக்கிறது என்று ஆராய வேண்டும். இதுதான் இந்த தனிப்பட்ட (Particular case in hand) கேஸுக்கு தகுந்த மருந்தாகும். ஆகவே அதுவே இதற் கேற்ற மருந்து (Specific remedy) என்று அறிந்து கூறலாம்.

## ஸ்லோகம் 148

இப்படிப் பொறுக்கப்பட்ட மருந்து எந்த வியாதியை நிவர்த்திக்க வேண்டுமோ அந்த வியாதியின் குறிகளைப்போல குறிகளை உண்டாக்கும் தன்மையையும் சக்தியையும் உடைத்ததா யிருக்கிறது. ஆகையினால் மருந்து கொடுத்தவுடன் ஒரு செயற்கை வியாதி உண்டாகிறது. மருந்து தன்னுடைய ஆழ்ந்து வேலை செய்யும் சக்தியினால் தகுந்த வீரியத்தில் கொடுக்கப்பட்டவுடனே இயற்கை வியாதி உடம்பின்கண் எந்த எந்த உறுப்புக்களில் வியாபித்து இருந்ததோ அதே இடங்

களில் மருந்தின் தன்மையும் வியாபிக்கின்றது. இப்படி வியாபிப்பது இயற்கை வியாதியைவிட அதிக சக்தியை உடைய தாகையால் இயற்கை வியாதி செயற்கை வியாதியின் விசேஷ ஒற்றுமையான குணப்பாட்டால் அகன்று விடுகின்றது. (ஒரே சமயத்தில் இரண்டு சமமான வியாதி இருக்க முடியாது.) இப்பொழுது கொடுக்கப்பட்ட மருந்து மிகுந்த சக்தியை உடையதாயிருந்தும் மிகவும் சிறிய அளவில் கொடுக்கப்பட்ட தால் அந்தராத்மா (Vital force) இந்த செயற்கை வியாதியையும் காலக்கிரமத்தில் அகற்றி விடுகின்றது. அகன்ற பிறகு உடம்பு வியாதியில்லாமல் சீக்கிரம் குணமடைந்து விடுகின்றது.

## ஸ்லோகம் 149

இப்படிச் சரியான மருந்தை பொறுக்கி எடுத்து கொடுக்கப் பட்டதால் சமீப காலத்தில் உண்டான வியாதியாயிருந்தால் சீக்கிரமாகவும், நாட்பட்டதாயிருந்தால் சில நாட்களிலும் அதிக உபத்திரவமில்லாமலும் அகன்று விடுகின்றது. நாளடைவில் உடம்பு குணமாகி விடுகின்றது. ஆனுல் நாட்பட்ட வியாதி மிகவும் சிக்கலாக இருந்தால் பல நாட்கள் ஆகும். அல்லோபதி முறையில் வைத்தியம் செய்துகொண்டதால் குழப்பப்பட்ட இயற்கை வியாதி குணமாக பல நாட்களாவது இயற்கையே. சில கேஸ்களில் அந்த முறையினுல் உண்டான குழப்பங்கள் சரிபண்ண முடியாமலேயும் போய்விடுகின்றன.

## ஸ்லோகம் 150

ஒருவர் தனக்கு அதிக முக்கியத்துவம் இல்லாத ஒன்றிரண்டு குறிகள் தனக்கு சில காலமாக இருப்பதாகச் சொன்னுல், அதை உடனே ஒரு பெரிய வியாதியாக மதித்து ஔஷதம் கொடுக்க ஆரம்பிக்காமல், அன்னுருடைய ஆகாரங்களிலும் பழக்க வழக்கங்களிலும் சில மாறுதல்களைச் செய்யச் செய்து, அந்த நிலைமையை மாற்றி விடலாம்.

## ஸ்லோகம் 151

ஆனுல் ஒரு வியாதியஸ்தர் சில கடுமையான குறிகளைத் தோற்றுவித்தால், வைத்தியர் மேலும் விசாரணை செய்வதன்

மூலம், இவ்வளவு முக்கியமில்லாத பல இதர குறிகளையும் கண்டுகொள்ளலாம். இவை அனைத்தும் சேர்ந்து ஒரு ஔஷதத்தை நிர்ணயிப்பதற்கு போதுமானதாய் இருக்கும்.

## ஸ்லோகம் 152

திடீரென்று வரும் வியாதிகள் (Acute diseases) எவ்வளவுக்கெவ்வளவு அபாயகரமாயிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமான குறிகளை மிகவும் தெளிவாகத் தோற்றுவிக்கும். இப்படிக் குறிகள் தெளிவாகவும் திடீரென்றும் எற்பட்டதால், கலக்கப்படாமலும் இருப்பதால் குறிகளுக்குத் தகுந்த மருந்தை பொறுக்கி எடுக்க மிகுந்த பிரயாசை வேண்டியிருக்காது.

## ஸ்லோகம் 153

இப்படி வியாதிகளின் பல முக்கிய குறிகளுக்குத் தகுந்த (ஏற்ற) முக்கியமான குறிகளைக்கொண்ட மருந்தை தேடும் பொழுது மிகவும் அபூர்வமானதும், மிகவும் தெளிவாயுள்ளதும், இருக்கும் வியாதிக்கு சம்பந்தா சம்பந்தமில்லாத சில விசேஷ குறிகளையும் கவனித்துக்கொள்ள வேண்டும். ஏனென்ருல் வியாதியை சொஸ்தம் செய்வதற்கு நாம் பொறுக்கி எடுக்கும் மருந்து இம் மாதிரியான விசேஷ, முக்கிய, குறிகளை உண்டாக்கக்கூடிய சக்தியையுடையதாயிருக்க வேண்டும்.

## ஸ்லோகம் 154

மேலே கூறியபடி விசேஷக் குறிகளுக்குத் தகுந்த சரியான மருந்து பொருக்கி எடுக்கப்பட்டு கொடுத்தவுடனே வியாதி அதிக நாள்பட்டதாயிராமலிருந்தால், முதல் வேளை மருந்திலேயே மேற்படி வியாதியை, உடம்புக்கு அதிக சிரமமில்லாமல், அகற்றிவிடலாம்.

## ஸ்லோகம் 155

நாம் அதிக சிரமமில்லாமல் அகற்றி விடுகிரேம் என்று முன் ஸ்லோகத்தில் கூறினேம் அது எவ்விதம் சாத்தியமாகும்

என்று கவனிக்கும்போது, நாம் கொடுக்கும் மருந்தானது தன்னுடைய விசேஷ ஒற்றுமை சக்தியினுல் வியாதியின் குறிகள் எவ்விடத்தில் பரவியிருக்கின்றனவோ, அவ்விடங்களிலேயே சென்று தாக்குவதால் (இதற்குத்தான் நாம் பொறுக்கி எடுக்கும் மருந்தானது வியாதியின் சக்தியை காட்டிலும் சிறிது அதிக சக்தி வாய்ந்ததாய் இருக்கவேண்டுமென்பது) குறைந்த பலமுள்ள குறிகள் பலமுள்ள தன்னைப்போல் ஒற்றுமையான குறிகளைக் கண்டவுடனே சூரியனைக்கண்ட பனிபோல் மிகவும் சுலபமாக நீங்கிவிடுகின்றன.

நாம் கொடுக்கும் மருந்தினுடைய மற்றக் குறிகள் வியாதிக்கு சம்பந்தப்படாத குறிகள் ஆனதினுல் அவை யாதொரு வேலையையும் செய்வதில்லை. வியாதி எந்த இடங்களில் பரவியிருக்கின்றதோ அதே இடங்களில்தான் மருந்தும் பரவும். எதிரிகள் இருக்கும் இடத்திற்குத் தான் சேனைகள் அனுப்பப்படும். மற்ற இடங்களுக்குச் சேனைகள் போகும் சக்தியை உடைத்தாயிருந்தால்கூட அவசியமில்லாததினுல் அவ்விடங்களில் அவை செல்வதில்லை. பிணியாளரும், மணிக்கு மணி, நாளுக்கு நாள் தனக்குத் தெரியாமலேயே கொஞ்சம் கொஞ்சமாக குணமடைந்துவிடுகின்றனர். ஏனென்ருல் கொடுக்கும் மருந்தானது அந்தராத்மாவுக்குத் தேவைக்கு தகுந்த அளவு உதவி செய்து எதிரியை விரட்டுவதோடு நின்று விடுகிறதே தவிற மற்ற பாகங்களில் (வியாதிக்குட்படாத பாகங்களில்) ஒருவித குறியையும் தோற்றுவிக்கா. இதனுல் தான் வியாதியின் குறிகள் படிப்படியாக அகன்று விடுவது எளிதாகின்றது.

## ஸ்லோகம் 156

மேலும் உட்புகுந்து ஆராய்வோமானுல், எவ்வளவு சாமர்த்தியமாகப் பொறுக்கி எடுத்த மருந்துகூட ஒற்றுமையாக வேலை செய்யும்பொழுதே மிகுந்த உணர்ச்சியுள்ள பிணியாளர்களிடத்தில் ஏதாவது ஒன்று அல்லது இரண்டு சம்பந்தமில்லாத குறிகளை தோற்றுவிக்கலாம். இது வியாதி சாதாரணமாகக் குணமடைந்துக்கொண்டுவரும்போதே தோன்றலாம். இந்த ஒன்றிரண்டு சம்பந்தமில்லாத குறிகளை அகற்றுவதற்கு அந்தராத்மாவின்(Vital force)சக்தியே போதுமானதாகையால் அது

தானே அகன்றுவிடும். இது போன்ற சமயங்களில் வியாதி யஸ்தர்கள் மனதாலேயோ, அல்லது அபரிமிதமாகக் கண்டபடி உண்பதினாலேயோ வியாதி குணமாவதற்கு இடைஞ்சல் செய்யக்கூடாது.

## ஸ்லோகம் 157

ஹோமியோபதி மருந்தானது உபயோகிக்கப்பட்டவுடனே தன் குறிகளைப்போல உள்ள குறிகளை சுலபமாக அகற்றி விடுகிறது என்று கூறினாலும் கூட இவைகள் (இந்த மருந்து கள்) சில சமயங்களில் மருந்து கொடுத்தவுடனேயோ அல்லது சில மணி நேரம் கழித்தோ வியாதியினுடைய குறிகளை அதிக மாக்கித் தோற்றுவித்தாலும் தோற்றுவிக்கலாம், இது மருந்தி னுடைய (இருக்கும் வியாதியின் சக்தியைவிட) அதிக சக்தி யுடைத்தலின் காரணத்தினாலேதான்.

## ஸ்லோகம் 158

கிட்டிய (Acute) வியாதிகளில் இப்படிக் குறிகள் மருந்து கொடுக்கப்பட்டவுடன் அதிகமாகிக் காணப்படுவது ஒரு நற் குறியேயாகும்; ஏனென்றால் இது வைத்தியருக்கு வியாதியின் முடிவு எப்படியாகும் என்று ஒருவாறு சொல்வதற்கு (Prognosis) ஒரு அடையாளமாகின்றது. இந்த முதல் வேளையில் கொடுக்கப் பட்ட மருந்தே வியாதியை கண்டிக்கும் சக்தியுள்ளது என்பதற்கு இதுவே அறிகுறியாகும் ஏன்? இது நியாயந்தானே. வியாதி கள் ஒன்றுக்கொன்று சமமாயிருப்பதைவிட கொடுக்கும் மருந் தின் சக்தி சிறிது அதிகமாக இருந்தால்தானே இருக்கும் வியாதியை அது அகற்றமுடியும்.

## ஸ்லோகம் 159

கிட்டிய வியாதிகளில் (Acute diseases) வியாதியை அகற்று வதற்கு நாம் கொடுக்கும் மருந்து எவ்வளவுக் கெவ்வளவு சிறிய பிரமாணத்திலிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு குறிகள் அதி கரிப்பது குறைவாகவும், சீக்கிரத்தில் சொஸ்தம் செய்வதாகவும் அமையும்.

## ஸ்லோகம் 160

அப்படி நாம் பொருக்கி எடுக்கும் மருந்தானது சிறியதாய் பிரமாணத்திலிருந்தாலும் கூட அது தோன்றிய வியாதியை அகற்றுவதற்கு வேண்டிய சக்தி வேண்டுமென்ருல் சிறிதாவது அதிக வீரிய முள்ளதாயிருக்கவேண்டுமல்லவா? இதே காரணத்திஞல் தான் மருந்து கொடுத்தவுடன் முதல் சில மணி நேரங்களில் வியாதியின் குறிகள் அதிகப்பட்டுக் காண்கின்றன. இப்படிக் குறிகள் அதிகப்படுவதால் நாம் ஹோமியோபதி உபாதி அதிகம், (Homoeopathic Aggravation) அல்லது ஒற்றுமையான மருந்து கொடுக்கப்பட்டால் இயற்கையாய் உண்டாகும் வியாதிகளின் அதிகரிப்பு என்று நாம் தெரிந்துகொள்ள வேண்டும். வியாதியைக் கண்டிக்கும் சக்தி மருந்துக்கு இருக்கிறது என்றும் வியாதி அகன்றுவிடும் என்றும் நிச்சயமாக அறியலாம்.

**குறிப்பு:** வியாதியின் முதல் சிலமணி நேர அதிகரிப்பு இதர வைத்திய முறையை கையாளுபவர்களாலும் காணப்பட்டு இருக்கின்றன. ஆனுல் அவர்கள் இது ஒற்றுமை முறையால் என்று அறியாமல் பிணியாளர்களிடம் வியாதி வெளியில் வந்துதான் பிறகு குணம் ஆகும்; அதனுல்தான் அதிகம் உபத்திரவமாக குறிகள் தோன்றுகின்றன என்று கூறி சமாதானப்படுத்துவார்கள்.

## ஸ்லோகம் 161

அவ்வப்போது தோன்றி மறையும் வியாதிகளிலும், சமீபத்தில் தோன்றிய வியாதிகளிலும் ஏற்படும் "உபாதி அதிகம்' (Aggravation) சில மணி நேரங்களுக்கு இருக்கும் என்று தெரிவித்தோம். ஆனுல் நாட்பட்ட நீடித்த வியாதிகளில், ஒரே மருந்து பல நாட்களுக்குத் தொடர்ந்து வேலைசெய்து வியாதியை நிவர்த்திக்கவேண்டி இருப்பதால், சில சமயங்கள் ஆறு எட்டு, அல்லது பத்து தினங்களுக்குக் கூட, வியாதி குறிகளை அதிகரித்துக் காட்டும் "உபாதி அதிகம்" ஏற்படலாம். இதிலும் ஒவ்வொரு தினத்திலும் சில மணி நேரங்களுக்கு உபாதி அதிகமாயிருந்து, மற்ற சமயங்களில் வியாதி படிவது தெரியும். சில தினங்கள் கழித்து இம்மாதிரியான உபாதி அதிகம் ஏற்படாமலேயே வியாதி படிப்படியாகப் படிய ஆரம்பிக்கும்.

## ஸ்லோகம் 162

மற்ருெரு விதமாகவும் நாம் விஷயங்களை அறியவேண்டும். உலகின்கண் நமக்கு ஔஷத நிர்ணயம் செய்து கிடைத்திருக்கும் மருந்துகள் மிகவும் குறைவே. இவைகளை வைத்துக் கொண்டே வியாதிகளின் பெருவாரியான குறிகளுக்கு ஒத்த ஔஷதத்தைத்தான் கொடுக்க வேண்டும்.

## ஸ்லோகம் 163

இந்தமாதிரியான கிட்டத்தட்ட ஒத்த மருந்துகள் கொடுப்பதனல் நாம் தடங்கலில்லாமல் வியாதி முற்றிலும் குணமாகும் என்று எதிர்பார்க்க முடியாது. ஏனென்ருல் இந்த மருந்து வேலை செய்து கொண்டிருக்கும்பொழுது முன் வியாதியில் கவனிச்கப்படாத குறிகள் தோன்றலாம். கொடுக்கப்பட்ட மருந்துக்கும் இந்தக் குறிகளுக்கும் சம்பந்தமில்லாமலுமிருக்கலாம். ஆனுலும் கொடுக்கப்பட்ட மருந்து எந்த எந்த குறிகளுக்கு வியாதியில் ஒத்திருந்ததோ அதை அகற்றி, சரியான வழியில் திரும்பலாம். ஆனுலும் மருந்தின் ஆதிக்கத்திற்குட்படாத குறிகள் இருக்கும் வரையிலும் பொறுக்கி எடுத்த மருந்து குணம் செய்வதற்கு முழுவதும் முடியாமலிருக்கிறது.

## ஸ்லோகம் 164

நாம் வியாதியில் தோன்றும் விசித்திரமான, சாதாரணமல்லாத, முக்கியமான (strange, uncommon, peculiar) குறிகளுக்கு தகுந்த மருந்தைப் பொறுக்கி யெடுத்திருந்தால் இந்த கேஸுகளில் ஒரு விதமான உபத்திரவமன்றி வியாதி குணமடைகிறது.

## ஸ்லோகம் 165

அப்படி நாம் பொறுக்கி எடுத்த மருந்து கேஸில் உள்ள முக்கியமான விசேஷ, விசேஷிய, குறிகளுக்குப் பொருந்தாமல் ஆனல் சில பொதுவான குறிகளுக்கு மட்டும் பொருந்தியிருந்தால், இதுமாதிரியான கேஸ்களில் நாம் மருந்து கொடுத்தவுடனே சமீபத்தில் ஒருவித குணத்தையும் காண முடியாது

ஏனென்ருல் பொறுக்கி எடுத்த மருந்து விசேஷக் குறிகளுக்கு ஒவ்வாமலிருப்பதுதான்.

## ஸ்லோகம் 166

மேற்கூறியபடி ஏற்படுவது சில சமயங்களில்தான். ப்ரூவிங் செய்யப்பட்டிருக்கும் மருந்துகள் பல. அவைகளில் நாம் ஒன்றைக் கவனமாக பொறுக்கி எடுத்துக் கொடுத்தும் ஏதாவது சில கெடுதலான குறிகள் தோன்றிஞல் அதை மறுபடியும் அப்பொழுது இருக்கும் குறிகளுக்குத் தகுந்த மருந்தை பொறுக்கி எடுத்து கொடுத்து நிவர்த்தி செய்து விடலாம்.

## ஸ்லோகம் 167

கிட்டிய வியாதிகளில் (Acute diseases) மருந்து மிகவும் ஒற்றுமையாய் அமையாததிஞல் ஏதாவது சில புதிய குறிகள் தோன்றிஞல் அப்பொழுது மருந்து பூராவாகவும் வேலை செய்யாமலும் அதஞல் வியாதியஸ்தர் அதிக காலம், மருந்தி னுடைய வேகம் குறையும் வரையிலும், கஷ்டப்பட விடாமலும் நாம் அப்பொழுது இருக்கும் குறிகளுக்குத் தகுந்தபடியும் பழய குறிகளுக்குத் தகுந்தபடியும் பொருந்தும் மருந்தை பொறுக்கி எடுத்துக்கொடுக்க வேண்டும்.

## ஸ்லோகம் 168

இப்படிச் செய்வதஞல் நாம் பொறுக்கி எடுத்த மருந்து வியாதியை முழுவதும் சொஸ்தம் செய்யாவிட்டாலும் முன் இருந்த கெடுதலான நிலைமையைவிட சிறிது குணமாகும் நிலைமைக்கு வரும். நாம் மறுபடியும் அவ்வப்பொழுது தோன்றும் குறிகளுக்குத் தகுந்தபடி மருந்துகளை பொறுக்கி எடுத்துக் கொடுக்கவேண்டும். வியாதியஸ்தர் முழுவதும் குணமடையும் வரையில் ஒவ்வொரு தடவையும் அவ்வப்போது இருக்கும் குறிகளுக்கு ஒற்றுமையுள்ள மருந்தை பொறுக்கி எடுத்துக் கொடுத்துக்கொண்டே போகவேண்டும்.

## ஸ்லோகம் 169

முதல் தடவை வியாதிக்குத் தகுந்த மருந்து பொறுக்கி எடுக்கும்பொழுது இரண்டு அல்லது மூன்று மருந்துகள் கொடுத்தால்தான் வியாதி முழுவதும் குணமடையும் என்று தோன்றலாம். சில கேஸ்களில் மிகவும் பொருந்தும் மருந்து இல்லாததினுல் (பூருவிங் செய்யப்பட்டவைகள் சிலவே.) இப்படித் தோன்றலாம். அப்பொழுது நாம் அந்த இரண்டு மூன்று மருந்துகளில் எது மிகவும் அதிகம் பொருத்தமாயிருக்கிறதோ அதை கொடுத்த பிறகு மறுபடியும் மருந்து கொடுக்கவேண்டும் போது முன் பொறுக்கி எடுத்த பாக்கி மருந்துகளை கொடுத்து விடக்கூடாது. முதல் மருந்து கொடுத்த பிறகு ஏற்பட்ட நிலைமைக்குத் தகுந்தபடி மருந்து பொறுக்க வேண்டும். ஏனென்ருல் வியாதியினுடைய தோற்றம் முதல் மருந்து கொடுத்த பிறகு நிலைமையில் மாறியிருக்கும். முதல் இருந்த நிலைமையிலேயே இருக்க முடியாது. ஒவ்வொரு தடவையும் மருந்து கொடுப்பது அவ்வப்போது தோன்றும் குறிகளுக்கு ஒற்றுமையுள்ளதாய் இருப்பது அவசியம்.

## ஸ்லோகம் 170

ஒவ்வொரு தடவையும் வியாதி மருந்துகளினுல் மாறிக் கொண்டு வரும்பொழுது (முன்னுல் இரண்டாவதாக கொடுக்க வேண்டும் என்று நினைத்த மருந்தை எண்ணுமல்) அப்பொழுது தோன்றும் குறிகளுக்குத் தகுந்தபடி பொறுக்க வேண்டும். சில சமயங்களில் முதலில் கொடுத்த மருந்தே தற்போது காணும் குறிகளுக்கு ஒற்றுமையாகத் தோன்றினுல் அதையே மறுபடியும் கொடுப்பது அவசியம்.

## ஸ்லோகம் 171

கொனேரியா, சிபிலிஸ், இந்த இரண்டு வியாதிகளைத் தவிர்த்து சாதாரணமாக ஸோராவிலிருந்து உண்டாகும் வியாதிகளுக்கு முழுவதும் சொஸ்தம் செய்வதற்கு அடுத்தடுத்து பல ஆண்டிஸோரிக் (Anti-psoric) மருந்துகள் கொடுக்கவேண்டி

வரும். ஆனுல் ஒவ்வொரு தடவையும் முன் கொடுத்த மருந்தின் செய்கை முடிவடையும் வரையில் மற்ருெரு மருந்தைக் கொடுக்கக்கூடாது.

## ஸ்லோகம் 172

வியாதியினுடைய குறிகள் மிகவும் குறைவாக இருப்பதால் வியாதியை முற்றிலும் குணம் செய்வதற்குத் தடை ஏற்படலாம். இதை மனதில் வைத்துக்கொண்டு இந்தக் குறிகளை நம் உன்னதமான முறையினுல் நீக்கிவிட்டால், வழியில் (குணம் செய்யும் வழியில்) உண்டாகும் பலவிதமான தடங்கல்களையும் நீக்கிவிடலாம்.

## ஸ்லோகம் 173

சில வியாதிகளில் குறிகள் மிகவும் குறைவாக இருப்பதினுல் குணம் செய்வதற்கு தடங்கல் ஏற்படலாம். இவைகளை ஒரு பக்க வியாதி என்று சொல்லலாம். ஏனென்ருல் இரண்டு மூன்று முக்கியமான குறிகள் மற்றக் குறிகளை மறைத்துவிடுகின்றன. இவைகள் (Chronic) நீடித்த வியாதிகளின் இனத்தைச் சேர்ந்தவையாகும்.

## ஸ்லோகம் 174

அப்படித் தோன்றும் முக்கிய குறியானது ஆழ்ந்து இருக்கும் குறிகளாகவும் இருக்கலாம். (நாட்பட்ட தலைவலி; நீடித்த வயிற்றுப் போக்கு; பழய ஹிருதய வலி) அல்லது பொதுவான வெளிப்பட்ட குறிகளாகவும் இருக்கலாம். பின் சொல்லப் பட்டவை தற்காலத்தில் தோன்றி உடம்பில் ஆழ்ந்து இராமல், மேலேயே தோன்றின குறிகளாகவும் இருக்கலாம்.

## ஸ்லோகம் 175

ஒரு தரப்பட்ட வியாதிகளில் வியாதி நிவர்த்தி செய்பவர் தற்போது இருக்கும் குறிகளை சரிவர கவனிக்காததினுல் வியாதியின் முழுத் தோற்றத்தையும் அறியமுடியாமல் போகிறது. (173-ம் ஸ்லோகத்தை கவனிக்கவும்) குறிகள் மிகவும் சொற்ப

மாக இருந்து குணம் செய்வதற்கு சுலபமாக இல்லாத வியாதிகள் ஒரு தரப்பட்ட (One sided) வியாதிகள் எனப்படும்.

## ஸ்லோகம் 176

இன்னும் சில வியாதிகள் இருக்கின்றன. இவைகளை ஆழ்ந்து கவனிப்போமானுல் (ஸ்லோகம் 84 முதல் 98 வரையிலும் சொல்லிய பிரகாரம் கவனித்துப் பார்த்தல்) ஒன்று அல்லது இரண்டு முக்கியமான அதிக உக்ரமான குறிகளைத் தவிர மற்றக் குறிகள் மிகவும் உபாயமாக இருந்து விசேஷத் தன்மைகளை (Modalities etc.) தெளிவாகத் தோற்றுவிக்காது.

## ஸ்லோகம் 177

இம்மாதிரியான சிக்கலான கேஸ்களை நிச்சயமாக குணம் செய்வதற்கு (இவைகள் மிகவும் அபூர்வமாகத்தான் தென்படுகின்றன) முதலில் தோன்றும் சில முக்கியமான குறிகளை வைத்துக்கொண்டு அதற்குத் தகுந்த மிகவும் பொருத்தமாயுள்ள மருந்தைக் கொடுக்கவேண்டும்.

## ஸ்லோகம் 178

சில சமயங்களில் இப்படிப் பொறுக்கி எடுத்த மருந்து நம் ஹோமியோபதியின் இயற்கை முறைப்படி தற்போதுள்ள வியாதியை நீக்குவதற்கு அதைப்போன்ற ஒரு செயற்கை (Aritificial) வியாதியை உண்டாக்குகிறது.

இப்படித் தோன்றுவது எந்த கேஸ்களில் மிகவும் சில முக்கியமான அபூர்வமாக மிகவும் எளிதில் மனதுக்கு புலப்படும் குறிகள் தோன்றுகிறதோ அவைகளில்தான்.

## ஸ்லோகம் 179

பல தடவை, இப்படியும் ஆகலாம். அதாவது மிகவும் குறைந்த குறிகளைக்கொண்டு பொறுக்கப்பட்ட மருந்து, இருக்கும் வியாதியை குறிகளின் குறைவினுல் சிறிதே குணமடையச் செய்யும்.

## ஸ்லோகம் 180

இந்த நிலைமையில், எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு நல்ல முறையில் பொறுக்கி எடுக்கப்பட்ட மருந்தானது, மேலே கூறிய காரணங்களால், வியாதியஸ்தரின் எல்லா குறிகளுக்கும் ஒத்ததாக இல்லாததினல் (சில குறிகளுக்கு மாத்திரமே பொருத்தமாயிருப்பதால்) கொடுக்கப்பட்டவுடன், வேறு சில புதுக்குறிகளைத் தோற்று விக்கலாம்; இவ்வாறு தோற்றுவிக்கப் படும் புதுக்குறிகள் இப்பொழுது கொடுக்கப்பட்ட மருந்தினல் ஏற்பட்டதாகத் தோன்றினலுங்கூட உண்மையில் ஷெ வியாதி யஸ்தருக்கு உள்ள வியாதியின் குறிகளே ஆகும். எனினும் இவை இதற்கு முன் ஏற்படாத குறிகளாகவே இருக்கலாம், அல்லது ஏற்கனவே மிகவும் குறைந்த அளவில் இருந்த குறி களாகவும் இருக்கலாம்.

## ஸ்லோகம் 181

இதனல் கொடுக்கப்பட்ட ஔஷதத்தினல்தான் புதுக் குறிகள் ஏற்பட்டுவிட்டன வென்று நினைக்கவேண்டாம். புதுக் குறிகளை வெளியிடும்படிசெய்தது கொடுக்கப்பட்ட ஔஷதத் தின் வேலைதான் என்ருலும், குறிகள் வியாதியினுடையவையே என்பது கவனிக்கப்படுதல் வேண்டும். இவ்வாறு ஏற்பட்ட குறிகளையும், ஏற்கனவே உள்ள குறிகளில் பாக்கி உள்ளவை யும் ஒன்ருகச் சேர்த்து அவை 'அனைத்திற்கும் பொருத்தமான ஒரு ஔஷதத்தைத் தேர்ந்தெடுத்து மேற்கொண்டு சிகிச்சை செய்வது முறை.

## ஸ்லோகம் 182

இப்படியாகக் குறிகள் குறைவாயிருந்ததினல் சுமாராக ஔஷதம் ஒன்றை தேர்ந்தெடுத்துக் கொடுக்க வேண்டிய அவசியமேற்பட்ட கேசுகளில், இதே ஔஷதம் மற்றக் குறி களையும் வெளியே கொண்டுவருவதற்கு உதவி, மேற்கொண்டு எல்லாக் குறிகளுக்கும் சரியான ஔஷதத்தைத் தேர்ந்தெடுப்ப தற்கு உதவுகிறது.

## ஸ்லோகம் 183

ஆகவே முதலாவது வேளையாகக் கொடுத்த ஔஷதம் சரியான பலனை அளிக்காவிடில், வியாதியையும் அதன் குறிகளையும் மறுபடியும் புதிதாகக் கவனித்து, தற்சமயம் இருக்கும் குறிகளுக்கு ஒத்த ஹோமியோபதி ஔஷதத்தைக் கண்டு பிடித்துக்கொடுக்க வேண்டும். பல குறிகள் புதிதாகத் தோன்றி இருக்குமாதலின் சரியான ஔஷதத்தைக் கண்டுபிடிப்பதற்கு இது மிகவும் உதவியாகவும் இருக்கும்.

## ஸ்லோகம் 184

இதுபோலவே ஒவ்வொரு வேளை ஔஷதத்திற்குப் பிறகும், பாக்கி இருக்கும் வியாதியின் நிலைமை நன்கு பரிசீலனை செய்யப்பட்டு, குறிகளைத் திரட்டி அதற்குத் தகுந்த ஹோமியோபதி ஔஷதத்தைக் கொடுக்கவேண்டும். இதுபோலவேதான் வியாதி பூரண சௌக்கியம் அடையும் வரையில் செய்ய வேண்டும்.

## ஸ்லோகம் 185

ஒரு பக்க வியாதிகள் என்பவை முக்கியமாக சரீரத்தின் வெளிப் புறத்தில் குறிகளைத் தோற்றுவிக்கும் சில குறிப்பிட்ட வியாதிகளைக் குறிப்பதாகும். இது வரையில் பழைய வைத்திய முறைகளில் இவ்விதமான வியாதிகளைப்பற்றிய அபிப்பிராயம்; ஏதோ வியாதி தோன்றியிருக்கும் சரீர பாகங்கள் மாத்திரம் வியாதியுற்றிருப்பதாகவும் இவ்வாறான வியாதிக்கும் முழு சரீரத்திற்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாதெனவும் இருந்தது. ஆனல் இந்த அபிப்பிராயம் முட்டாள்தனமானது; அப்படி நினைத்து சிகிச்சைகள் செய்ததில் பல அனர்த்தங்களும் விளைந்திருக்கின்றன.

## ஸ்லோகம் 186

இம்மாதிரியாகக் குறிப்பிட்ட இடங்களில் மாத்திரம் தோன்றும் வியாதிகள் (Local diseases) சிறிது காலத்திற்குமுன் ஏற்பட்ட வெளி அதிர்ச்சியினல் ஏற்பட்டதாக இருக்கலாம். இத

ளுலேயே இவைகளை ஆங்காங்கு தோன்றிய வியாதி என நினைக்கிறோம். இவ்வாறு ஏற்பட்ட வெளி அதிர்ச்சி மிகவும் சிறியதாக இருக்குமாயின், இதைப் பற்றி அதிகம் கவலைப்படு வதற்கில்லை. ஏனெனில் வெளியிலிருந்து சரீரத்திற்கு ஏற்பட்ட அடி, காயம் முதலியவைகளில், அவை கடுமையானதாக இருக்குமாயின், சரீரம் முழுவதுமே பாதிக்கப்படுகிறது, உதா ரணமாக ஜுரம் முதலியவை தோன்றுகின்றன. இம்மாதிரி யான சந்தர்ப்பங்களில் சஸ்திர சிகிச்சை அவசியமானதே. ஆனுல் இந்த சஸ்திர சிகிச்சை. அதிர்ச்சியினுல் பாதிக்கப்பட்ட பாகங்களை சரி செய்யும் அளவுக்குத்தான் உபயோகிக்கப்பட வேண்டும். அதாவது வெளிக் காரணங்களால் பாதிக்கப்பட்ட விஷயத்தை வெளி சக்தி கொண்டு சரி செய்வதுதான் நல்லது. உதாரணமாக, நழுவின மூட்டுகளைச் சரி செய்தல், வெட்டுக் காயங்களின் இரு பக்கங்களையும் பொருத்திக் கட்டுதல், சரீரத் தின் பாகங்களில் நுழைந்துவிட்ட இதர வஸ்துக்களை எடுத்தல், முறிந்த எலும்புகளைக் கூடும்படி வைத்துக் கட்டுதல் முதலிய வையாகும். ஆனுல் இம்மாதிரி ஏற்பட்ட வெளி அதிர்ச்சிகளி ஞல் உடல் முழுவதும் பொதுவாகப் பாதிக்கப்பட்ட நிலைமைகளாகிய கடுமையான ஜுரம் முதலியவற்றிற்கு சரியான ஹோமியோபதி ஔஷதங்களை உள்ளுக்குக் கொடுத்தும் சொஸ் தம் செய்யவேண்டும்.

## ஸ்லோகம் 187

ஆனுல் சரீரத்தில் மேல் பாகங்களில் தோன்றும் சில மாறு தல்களும், உபாதிகளும், அவை வெளி அதிர்சியினுல் உண்டா காதவையாக இருந்தாலும், அல்லது ஏதோ ஒரு சிறு அளவுக்கு அவ்வாறு உண்டானவையாக இருப்பினும், இவை வேறுவிதக் காரணங்களால் உண்டானவையாகவே கருதப்பட வேண் டும். இவைகளையும் குறிப்பிட்ட இடங்களில் தோன்றும் (Local) வியாதிகளாகக் கருதுவதும், அவைகளுக்கு அவ்வாறு சிகிச்சை செய்ய முற்படுவதும், பல காலமாக பழைய வைத்திய முறையில் செய்வதுபோல செய்வது முட்டாள்தனமானதும் அபாயகரமானதுமாகும்.

## ஸ்லோகம் 188

இம்மாதிரியான உபாதிகள் அந்தந்த பாகத்திற்கு உரியவை எனக் கருதப்பட்டு, இவற்றிற்கும் முழு சரீரத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை எனவும் இதுவரையில் கருதப் பட்டு வந்திருக்கிறது. பழைய வைத்திய முறையில் செய்யப் பட்டு வந்திருக்கிற பெரிய தவறுகளில் இதுவும் ஒன்று.

## ஸ்லோகம் 189

ஆனால் சிறிது ஆலோசனை செய்தோமானால், (வெளி அதிர்ச்சியினால் தோன்றாத வரையில்) இம்மாதிரியான வெளி உபாதிகள், முழு சரீரத்தின் ஒத்துழைப்பில்லாமல் தோன்றவோ, நீடித்து இருக்கவோ முடியாது எனத் தெரிய வரும். முழு சரீரமும் வியாதியுற்றிருந்தால்தான் இது சாத்திய மாகும். இம்மாதிரியான உபாதிகள் தோன்ற வேண்டுமாயின் ஒன்றுக்கொன்று சரியான இணைப்புள்ள பல அவயவங்களைக் கொண்ட முழு சரீரமும் பாதிக்கப்பட்டே இருக்க வேண்டும். ஒரு சிறு சிரங்கோ, அல்லது ஒரு நகச்சுற்றியோ முழு சரீரமும் பாதிக்கப்படாமல் தோன்றமாட்டாது.

## ஸ்லோகம் 190

ஆகவே யாதொரு வெளிக் காரணங்களோ, வெளி அதிர்ச்சியோ இல்லாமல் தோன்றும் எந்த வியாதிக்கும், அம்மாதிரி வியாதிகள் வெளி உறுப்புகளில் தோன்றினாலும் சரி, சிகிச்சைகள் முழு சரீரத்திலும் வேலை செய்யக்கூடியதாகவே இருக்க வேண்டும். இவ்வாறு சிகிச்சைகள் செய்யப்பட்டால் தான் வியாதி பூரணமாகவும், நிச்சயமாகவும் சொஸ்தம் ஆகும். (மேற் பூச்சு மருந்துகள் மாத்திரம் பிரயோஜனமில்லை என்பதைக் குறிக்கிறது.)

## ஸ்லோகம் 191

முன் ஸ்லோகத்தில் கூறியது நாம் அனுபவத்தினால் சிறிது கூட சந்தேகத்திற்கிடமில்லாமல் அறியப்படுகிறது, ஒவ்வொரு சக்தி உள்ள மருந்தும் உள்ளுக்கு சாப்பிட்டவுடன் பொதுவில்

உடலில் சில பாகங்களில் நிச்சயமாக சில மாறுதல்களை உண்டுபண்ணுகிறது, அப்படி உண்டுபண்ணுவது உடலின் நன்மைக்கேயாம். ஏனென்ருல் வெளிக் குறிகள், வெளிப்பூச்சு மருந்து எதுவுமின்றி, மறைந்தவுடன் உடம்பின்கண் உள்ளிருக்கும் வியாதியும் தானே மறைந்து விடுகிறது. ஆனல் இது ஹோமியோபதி முறையில் சரியான மருந்தை பொறுக்கி எடுத்துக் கொடுத்திருந்தால்தான் இப்பயனை எதிர்பார்க்கலாம்.

**குறிப்பு:** இப்படி வெளித்தோன்றும் வியாதிகளை பழைய முறை வைத்தியமானது தனிப்பட்ட வியாதிகள் என்று நினைத்து அதற்கு மேல்பூச்சு மருந்துகளைப் போட்டு வியாதியை விரட்டப் பார்க்கின்றது. ஆனல் வெளியே விரட்டவில்லை. வியாதி உள்ளேதான் அமுக்கப் படுகிறது.

## ஸ்லோகம் 192

இது எப்பொழுது சாத்தியமாகுமென்ருல், கேஸ் எடுக்கும் பொழுது தற்கால வியாதிகளையும் அதன் விசேஷ குணங்களையும் (பலவித மாறுதல்கள், சமனங்கள், அதிகமாதல்) அறிவதோடு அல்லாமல் முக்கியமாக வியாதி, மருந்துகள் சாப்பிடுவதற்கு முன் எந்த நிலைமையில் இருந்தது என்று தெரிந்து கொண்டு எந்த மருந்தின் (ப்ரூவிங்) குணதிசயங்கள் இப்போது எடுத்த கேசுக்கு ஒற்றுமையாக இருக்கிறது என்று அலசி ஆராய்ந்து கண்டுபிடித்து எடுத்துக் கொடுத்தோமானல் அதுவே உண்மையான ஹோமியோபதியின் முறையின்படி பொறுக்கி எடுக்கப்பட்டதாகும்.

## ஸ்லோகம் 193

இம்மாதிரி பொறுக்கி எடுத்து உள்ளுக்குக் கொடுத்த பிறகு உடம்பின்கண் உள்ள பொதுவியாதி மேல் தோன்றின குறிகளோடு தானகவே மறைந்து விடும். இதனல் நாம் மேல் இருக்கும் குறிகள் உள்ளிருக்கும் வியாதிக்கு சம்பந்தம் உள்ளது என்றும், வெளியிலிருக்கும் குறிகள் உள்ளிருக்கும் வியாதியின் ஒரு பாகமே என்பதையும் தெளிவாக அறியலாம்.

## ஸ்லோகம் 194

தோன்றி மறையும் வியாதியிலும், ஆரம்பத்தில் தோன்றியதாயிருந்தாலும் சரி, தனிப் பட்டு மேலிருக்கும் வியாதிகள் நீண்ட நாட்களாக இருந்தாலும் சரி, மேல் பூச்சு மருந்து கொடுப்பது பிரயோஜனமில்லே. உள்ளுக்கு மருந்து கொடுத்து குணம் செய்வதுதான் முறை. அடிபட்ட காயங்கள் தவிர மற்றவைகளுக்கு உள்ளுக்கு மருந்து கொடுத்துத்தான் தீரவேண்டும், ஆனுல் இப்படி உள்ளுக்கு கொடுக்கும் மருந்தினுல் வியாதி முற்றும் குணமாகாமல் வெளிக்குறிகள் விடாப் பிடியாக (வியாதியஸ்தர் சரியான சட்ட திட்டங்களுக்குட்பட்டு நடந்து கொண்டும் கூட) இருந்தால் நாம் இது ஸோராவின் குறி, நாட்பட்ட வியாதியாக மாறுகிறது; உடலுக்கு வியாதியை அகற்றும் சக்தியில்லே என்று தெரிந்து கொள்ளவேண்டியது.

## ஸ்லோகம் 195

இம்மாதிரியான கேஸ்களில் வியாதியை முற்றும் குணம் செய்வதற்கு நாம் செய்ய வேண்டியது என்ன வென்ருல் தற்போது தோன்றிய வியாதிக்கு தக்க மருந்து கொடுத்து அது நீங்கினவுடன் ஹானிமன் நாட்பட்ட வியாதிகள் (Chronic Diseases) என்னும் புஸ்தகத்தில் கூறியபடி ஸோராவுக்கு எதிரியான (Anti-psoric) மருந்தை எஞ்சியிருக்கும் குறிகளுக்கும் வியாதியஸ்தரின் தற்போது உள்ள வியாதியின் முன் நிலேமைக்கும் தகுந்தவாறு பொறுக்கி எடுக்க வேண்டும். துர்வியாதிகள் (கொனேரியா, ஸிபிலிஸ், முதலியன) அல்லாது மற்ற நாட்பட்டு இருக்கும் உடம்பின் மேல் வியாதிகளுக்கு இந்த ஸோராவுக்கு எதிரியான (Anti-psoric) மருந்தே போதுமானது.

## ஸ்லோகம் 196

அப்படி நாம் எல்லாக் குறிகளுக்கும் தகுந்தாற்போல் பொறுக்கி எடுத்த மருந்து உள்ளே கொடுத்தும் அதையே பூச்சாகவும் பூசினுல் வெளித்தோன்றும் வியாதி சீக்கிரமாக குணமாகிவிடலாம். இதனுல் இந்த இரண்டு விதமாக

மருந்தை உபயோகப்படுத்தினுல் வியாதியை சீக்கிரம் குணப் படுத்தலாம் என்று தோன்றலாம்.

## ஸ்லோகம் 197

ஆனுல் இது சரியான முறையல்ல. ஏனென்ருல், ஸோரா வின் உள் வியாதியின் வெளிக்குறிகளாலுைம் சரி அல்லது ஸைக்கோஸிஸ், ஸிபிலிஸின் வெளிக்குறிகளினுலும் சரி இந்த முறை உபயோகப்படுத்தக்கூடாது. இதில் எந்த விதமான கெடுதல் என்ருல் மேல் பூச்சாக உள்ளுக்கு கொடுக்கும் மருந்தை உபயோகத்தினுல் சீக்கிரம் வெளிக்குறிகள் மறைந்து விடும். அதனுல் நமக்கு மிகவும் உபயோகமானதும் அடையாள மாகவும் இருக்கும் ஒரே ஒரு அற்புதமான வழியும் போய் விடுகிறது. சில சமயம் இந்த குறி மிக சீக்கிரமாகவும் மறைந்து விடலாம். இதைவிட உள்ளுக்கே கொடுத்துவந்தால், உள் வியாதி (நம் கண்ணுக்குத் தெரியாதது) குறையக்குறைய வெளிக்குறியும் சிறிது சிறிதாக குறைந்துகொண்டே வரும். இந்த விதமான அடையாளத்தின் உபயோகத்தை நாம் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமானுல் மேல் பூச்சாக உள்ளுக்கு கொடுக்கும் மருந்தை உபயோகப் படுத்தக்கூடாது.

## ஸ்லோகம் 198

மேல் விளக்கிச் சொன்ன காரணங்களினுல் நாட்பட்ட வியாதிகளுக்கு தோன்றும் வெளிக்குறிகளுக்கு மேல்பூச்சு மருந்து உபயோக படுத்தக்கூடாது. அப்படி நாட்பட்ட வியாதி யின் வெளிக்குறி மேல்பூச்சு மருந்தினுல் நீக்கப்பட்டால், உள்ளுக்கு மருந்து கொடுத்து வியாதியை பூராவும் குணப் படுத்த முடியாமல் போய்விடும். மேல் தோன்றும் குறிகள் மறைந்தவுடன் பாக்கிக் குறிகள் நமக்கு உள் இருக்கும் வியாதி யின் நிலைமையை முழுவதும் விவரமாக தெரிவிக்காது.

## ஸ்லோகம் 199

வியாதிகளுக்கு தகுந்த, சரியான ஹோமியோபதி மருந்து கிடைக்காமற் போனுல் (இந்த கஷ்டம் ஆண்டிசோரிக் மருந்து கள் கண்டு பிடிப்பதற்கு முன், சர்ம (தோல்) வியாதிகளில்

ஹானிமனால் அனுபவிக்கப்பட்டது.) இதே மேல் குறி கத்தியாலேயோ அல்லது வேறு எந்தவிதமான மேல்பூச்சு மருந்தினாலேயோ போய்விட்டாலும் சரி, நமக்கு கடைசி வரையிலும் அடையாளம் கொடுத்துக் கொண்டிருக்கும் (இதனால் அப்போதைக்கப்போது தகுந்த மருந்துகளை உள்ளுக்கு பொறுக்கி எடுத்துக்கொடுக்கலாம்.) ஒரே ஒரு வழிகாட்டியும் மறைந்து விடுகிறது.

## ஸ்லோகம் 200

அப்படி மேல்தோன்றிய குறிகள் இருந்து கொண்டே இருந்தால். நாம் எல்லாக்குறிகளுக்கும் (Totality of Symptoms) தகுந்த மருந்தை பொறுக்கி எடுக்க அனுகூலமாக இருக்கும். அப்படிப் பொறுக்கி எடுத்த மருந்து கொடுத்தும் வெளிக் குறிகளில் மாறுபாடு ஒன்றும் தோன்றாமலிருந்தால் வியாதி சரியாக முற்றும் குணமாகவில்லை என்று அறிந்து கொள்ளலாம். ஆனால் வெளிக்குறிகள், மேல்பூச்சு மருந்து உபயோகப் படுத்தாமல் மறைந்து விட்டால் உள் வியாதி நிச்சயமாகவும் சரியாகவும் நீங்கிவிட்டது என்று நிதரிசனமாக தெரிந்து கொள்ளலாம்.

## ஸ்லோகம் 201

இதனால் நமக்கு தெரிவது, அந்தராத்மாவானது வெளியிலிருந்து மிகுந்த பலத்துடன் தாக்கப்பட்டபொழுது தன்னால் கூடியமட்டும் உடலில் இருக்கும் மிகவும் முக்கியமான உறுப்புகள் கேடுறுவண்ணம் பாதுகாக்கவேண்டி வியாதியை உடம்பின் வெளியே, உள்ளுக்கு கெடுதல் செய்ய முடியாத பாகத்திற்கு, மாற்றிவிடுகிறது. இப்படி முக்கியமான உறுப்புகள் சுவாச கோசம், ஹிருதயம் முதலியன பாதிக்கப்படாமல் வெளிக் குறிகளை ஏற்படுத்துகின்றது. இதை ஆங்கிலத்தில் (Vicarious) அதாவது மாறுபட்டு தோன்றுவது என்று கூறுகிறார்கள். அந்தராத்மா இந்த வெளித் தோற்றக் குறிகளால் வியாதியை குணம் செய்ய முடியாவிட்டாலும் சிறிது காலம் தடைபடுத்தக் கூடுமான சக்தியையுடைத்தாயிருக்கிறது. இந்த வெளித் தோன்றும் குறி ஒரு தனியான வியாதியில்லை. உள்ளிருக்கும்

வியாதியின் ஒரு பாகமே, மிகுந்த முக்கியமான பாகத்திலிருந்து முக்கியமில்லாத பாகத்திற்கு வியாதியின் குறிகள் தோன்று கின்றன. நாம் முன்னே கூறியபடி அந்தராத்மா இப்படிச் செய்தும்கூட வியாதியை குறைக்கும் அல்லது குணமாக்கும் சக்தியில்லாததினுல் வியாதி தடைப்பட்டாலும் கூட வளர்ந்து கொண்டேவருகிறது. இது (உள் வியாதி) வளர வளர மேல் தோன்றும் குறிகள் மேலும் உக்கிரமாக வளர்ந்துகொண்டே வருகின்றன.

## ஸ்லோகம் 202

இந்தச் சமயங்களில் பழைய வைத்தியர் மேலிருக்கும் குறிகளை மறைப்பதற்கு மேல் பூச்சாக மருந்துகள் கொடுத்தால் இதனுடைய பலன் மேலிருக்கும் வியாதி குறையக் குறைய உள்ளிருக்கும் வியாதி அதிகமாகிக்கொண்டே வருகின்றது. இப்படி உண்டாகும்போது வெளி வியாதி உள்ளுக்கு செலுத்தப் பட்டது என்று சொல்லுவது சகஜம். ஆனுல் இது சரியில்லை.

## ஸ்லோகம் 203

வெளித் தோன்றும் குறிகளை, அதாவது சர்ம வியாதிகளை சுலபமாக நீக்குவதற்கு, இதுகாறும் கையாளப்பட்டுவந்த வைத்திய முறைகள், அதாவது களிம்பு போடுவது, தீய்ப்பது, சுடுவது முதலியன, உள்ளிருக்கும் வியாதியை குணமாக்கா மலிருப்பதோடு, மேல் தோற்றுவித்தக் குறிகளும் உள்ளே அமுங்கப்பட்டு மனித சமூகத்தை துன்புறுத்திவரும், பலவித மாக பெயரிட்டழைக்கப்படும், நாட்பட்ட வியாதிகள் சம்பவிக்க ஹேதுவாகிறது.

தற்பொழுது இம்மாதிரியான முறைகள் இல்லாவிட்டாலும்கூட பலவித புதுமாதிரியான அதிசய மருந்துகள் (Wonder Drugs) அநேகம் தோன்றியிருக்கின்றன. மேலும் எவ்வளவோ தோன்றவும் போகின்றன. ஆனுல் அவைகள் நமக்கு நிரந்தரமான குணம் செய்யும் தன்மையை உடையவை என்று கூறுவதற்கு இடமில்லாமலிருக்கிறது. இந்த முறையால் உள்ளிருக்கும் வியாதியுடன் மருந்துகளின் வியாதியும் சேர்ந்து பலவிதமான பெயர்கள் இடப்படுகின்றன.

## ஸ்லோகம் 204

உலகின்கண் தோன்றும் அநேக வியாதிகளில், சரியானபடி வசிக்காததால் ஏற்படும் வியாதிகள், மருந்துகளால் ஏற்படும் வியாதிகள் முதலியவற்றை நீக்கிப் பாக்கியிருக்கும் வியாதிகளை ஆராய்ந்து பார்த்தோமானல், இவை பெருவாரியாக ஸோராவின் விளைவாகவும், சிலவை ஸிபிலிஸ், ஸைக்கோஸிஸ், முதலியவைகளினல் ஏற்பட்டதாகவும் இருக்கலாம். இந்த மூன்றும் அதனதன் குறிகளால் தானிருப்பதை காண்பிக்கிறது. ஸோரா சருமத்தின் கெடுதலினலும் ஸிபிலிஸ், சாங்கர், பியுபோ, என்னும் கட்டியாலும் ஸைக்கோஸிஸ் திராக்ஷை கொத்துப்போன்ற சரும வியாதி களாலும் தன்னுடைய உபக்குறிகளை தோற்றுவிக்கின்றது. இந்த உபாதிக்குறிகள் முட்டாள் தனமாக நீக்கப்பட்டால், ஒவ்வொன்றும் பலவிதமான, பெயர்களோடு மிக சீக்கிரமாக உயிரையே அழிக்கத் தயாராகின்றது. இதைத் தவிர்க்க ஒவ்வொன்றுக்கும் தகுந்த ஹோமியோபதி மருந்து கண்டு பிடித்துக் குணப்படுத்த வேண்டுமே தவிற மேல் பூச்சு மருந்து களை முட்டாள்தனமாக உபயோகப்படுத்தவே கூடாது.

## ஸ்லோகம் 205

ஹோமியோபதி வைத்தியர் இப்படித் தோன்றும் உபக் குறிகளையாவது அல்லது அதனுடைய அடுத்தபடியாக (வெளிப் பூச்சு மருந்துகளாலோ அல்லது வேறு மருந்துகளால் உண்டா கும் குறிகளையோ) தோன்றும் குறிகளையோ நீக்காது எதனு டைய விளைவோ அந்த மியாஸத்தையே (miasm) குறித்து மருந்துகளை தேர்ந்தெடுத்துக் கொடுப்பதனல், உபக்குறிகள், அதற்கு அடுத்தபடியான குறிகள், உள்ளிருக்கும் வியாதி, முதலிய எல்லா வியாதிகளும் நாளடைவில் குணமாகின்றன. ஆனல் இந்த முறை முன் வைத்தியம் செய்த அல்லோபதி வைத்தியர்களால் செய்யப்படாததினல் உபக்குறிகள் மேல் பூச்சு மருந்துகளால் அழிக்கப்பட்டு (மறைக்கப்பட்டு) இரண் டாவது கட்டமான குறிகளுடன் வருவதால் (அதாவது உள்ளி ருக்கும் வியாதி கொழுந்து விட்டெரியும் நிலைமையில்) இம்

மாதிரியான கஷ்டமான நிலேமையில் நம் ஹோமியோபதி வைத்திய முறையில் வைத்தியம் செய்து சமாளிப்பதற்கு ஹானிமென் தன் அனுபவத்தால் எழுதின நாட்பட்ட வியாதி கள் (Chronic Diseases) என்னும் புத்தகத்தை கவனித்துப் பார்த்து தன்னுடைய அனுபவத்தைப் பயன்படுத்திக் கொண்டு, வியாதிகளே குணம் செய்யுமாறு கூறுகிருர்.

அதாவது ஹானிமன் தான் மிகவும் கஷ்டப்பட்டு அனுபவத்தின் பேரில் கண்டுபிடித்ததை மற்றவரும் தன்னைப்போல் கஷ்டப் படாமல் தன்னுடைய அனுபவத்திஞல் கண்டுபிடித்த முறையை கைப்பற்றி மக்களின் இன்னல்களே அகற்றுமாறு முறையிடுகின்ருர்.

## ஸ்லோகம் 206

நாட்பட்ட வியாதிகளேத் தீர்ப்பதற்குதொடங்கு முன் நாம் மிகவும் ஜாக்கிரதையாக சில விஷயங்களே விசாரித்து அறிந்த பிறகே தொடங்கவேண்டும். அவைகள் முதலில் வியாதியஸ்தர் எப்பொழுதாவது துர் வியாதியால், (கெட்ட ஆண் பெண் சம்பந்தத்திஞல், Venereal diseases) பாதிக்கப் பட்டிருந்தாரா. (Sycosis or Syphilis) (ஆஞல் இப்பொழுது இதனுடைய குறிகள் முன் தெரிந்தது போல் அவ்வளவு தெளிவாகத் தெரிவதில்லே) அப்படி எதஞலாவது பாதிக்கப்பட்டிருந்தால் வியாதிகளே நீக்குவதற்கு முன் ஸோரா சம்பந்தத்தையும் கவனிக்க வேண்டும். ஏனென்ருல், ஸோரா சம்பந்தப்படாத வியாதியே கிடையாது. ஸோரா என்பது மனதில் எண்ணுவது என்று வைத்துக்கொள்ளுவோம். மனதில் கெடுதலான விஷயங்களே எண்ணுவது அல்லது நியாயமல்லாத காரியங்களே செய்யும்படியான நிலேமையில் மனம் இருத்தல் இதுவே 'ஸோரா'தான். ஸோரா அடிப்படையாக இல்லாவிட்டால் மனிதன் நியாயமல்லாத கெட்ட வழிகளேப்பற்றி எண்ணவே மாட்டான். எண்ணுவது ஸோரா; இப்படி மனம் தயாரான பிறகு காரியம் நடக்கிறது.

**ஸைக்கோஸிஸ்** (Sycosis) இது மனிதன் தப்புக்காரியம் செய்துவிட்டு அதை மறைக்கிருன்; பொய் சொல்கிருன், திருடுகிருன்.

கெட்ட விஷயங்களில் பிரவேசிக்கிருன். கொனேரியாவின் (Sycosis) மியாசம் இருந்தால் தான் ஒருவன் பொய்சொல்லி மறைக்க முற்படுவான்.

**ஸிபிலிஸ் (Syphilis)** கெட்ட வியாதிகளின் பலனுக வரும் வியாதிகளினுல் அவன் உடல் முழுவதும் படிப்படியாக பாதிக்கப்பட்டு முடிவையடைகிருன். ஆகையால், எந்தெந்த வியாதிகள் கலந்து இருக்கின்றன எது மோலோங்கி இருக்கிறது என்றும் கவனிக்க வேண்டும். இதோடு கூட பல்வேறு மருந்துகளின் மூலமாக வியாதியே அடியோடு உருமாறியும் தோன்றலாம்.

**குறிப்பு:** வியாதியஸ்தர்களிடையே நாட்பட்ட வியாதிகளின் காரணத்தை கேட்கும்பொழுது ஏதாவது சாதாரணமான வியாதிகளின் பெயரைச்சொல்லி, எப்பவோ ஜலதோஷம் பிடித்தது, எப்பவோ மழையில் நனைந்துவிட்டேன், எப்பவோ பயந்துவிட்டேன், தடுக்கி விழுந்தேன் என்று பலவிதமாகப் பொய் செல்லுவார்கள். இவைகள் ஒரு நாட்பட்ட வியாதியை உண்டாக்க முடியாது. ஆனுல் நாட்பட்ட வியாதிகள் உடலில் இருந்தால், இம்மாதிரியான காரணங்கள் நாட்பட்டவியாதிகளை (அமுங்கியிருக்கும்) கிளப்பிவிடுவதற்கு ஏதுவாயிருக்குமே யொழிய இவைகள் வியாதியின் காரணமல்ல. (Acute exacerbations of chronic Diseases)

## ஸ்லோகம் 207

**மேலே கூறியபடி விசாரித்து தெரிந்துகொண்டபிறகு நாம் மேலும் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டியது எவைகள் என்ருல்**

1. இதுவரையிலும் எந்தெந்த மருந்துகள் மற்ற வைத்திய முறைப்படி சாப்பிடப்பட்டன.

2. அவைகளில் எவை அடிக்கடி அதிகமாக உபயோகிக்கப் படுகின்றன.

3. மேலும் ஏதாவது அருவிகளில்போய் நீராடியிருக்கின்றனரா? (ஐரோப்பாவில் சில நீர்த்தடாகங்கள் சில இடங்களில் இருக்கின்றன இவைகளில் அடியில் பூமியில் சில உலோகங்கள் இருக்கின்றன. இந்த

உலோக சம்பந்தப்பட்ட ஜலத்தினுல் சில வியாதிகள் நிவர்த்தியாகும் என்று ஜனங்கள் நம்பிப் போய்வருகிருர்கள். ஆங்கிலத்தில் இவைகளை (Mineral Springs—உலோக ஊற்றுக்கள்) என்றும் சொல்லலாம். இந்த மூன்று காரணங்களால் வியாதி தன்னுடைய உண்மையான நிலைமையிலிருந்து எவ்வளவுதூரம் மாற்றமடைந்திருக்கிறது என்றும் தெரிந்துகொண்டு, அவைகளை நிறுத்தி பிறகு நம் ஹோமியோபதி மருந்தை கொடுக்க ஆரம்பிக்கவேண்டும்.

## ஸ்லோகம் 208

**மேலும் வியாதியஸ்தரின் வயது, தொழில், உணவு வகைகளின் விபரம் பழக்க வழக்கங்கள் முதலியனவற்றை விசாரித்தறிந்து இவைகளால் உபாதி அதிகப்படுத்தப் படுகின்றதா, அல்லது இவைகள் நாம் கொடுக்கும் மருந்துக்கு இடையூருக இருக்குமா அல்லது அனுகூலமாக இருக்குமா என்றறியவேண்டும். இவைகளை எல்லாம் அறிந்துகொண்டு கடைசியில் வியாதியஸ்தரின் மனது எந்த நிதானத்திலிருக்கிறது என்று அறியவேண்டும்.**

சிலர் 'மருந்து சாப்பிட்டு என்ன பயன், மருந்து வேண்டாம்' என்று நினைத்து வைத்தியரின் மருந்துகளை கிரமப்படி சாப்பிடாமல் இருப்பார். இதனுல் நாம் எதிர்பார்த்த அளவு மருந்து வேலைசெய்ய இடமில்லாது வியாதியில் குணமிருக்காது. சிலர் "நாம் எவ்வளவோ மருந்து சாப்பிட்டாய்விட்டது, இதனுல்தான் தெளியப் போகிறதா" என்றும் இருந்து விடலாம். மற்றும் இம்மாதிரியான பலவிதமான மனதுடையவர்களைக் காணலாம். ஆகையால் ஒவ்வொரு வியாதியஸ்தரையும் சரியான வழியை காண்பித்தோ, உத்தரவு கொடுத்தோ அல்லது அவர்களுக்குத் தைரியங்களைக் கூறியோ நம் மருந்தை சரிவரச் சாப்பிடச் செய்ய வேண்டும்.

## ஸ்லோகம் 209

**இதோடு வியாதியஸ்தரோடு பேசும்பொழுது அவர் சொல்லும் குறிகளிலிருந்து மிகவும் முக்கியமானதும் விசேஷமானதுமானவைகளை கவனித்து அதற்குத்தகுந்த ஆண்டிஸோரிக், ஆண்டிஸைக்கோஸிஸ், அல்லது ஆண்டிஸிபிலிஸ் மருந்தை பொறுக்கி எடுக்கவேண்டும்.**

## ஸ்லோகம் 210

ஸோரிக் வியாதிகளின் ஒரு விசேஷமான தன்மையைக் கூறுவோம். அதாவது இவைகளை ஹானிமன் ஒரு பக்க வியாதிகள் என்று கூறுகிருர். இவைகளின் விசேஷம் என்ன வென்ருல் மனக்குறிகளைத் தவிர பாக்கி வியாதிகளின் குறிகள் மறைந்து வருகின்றன. இவைகளைக் குணப்படுத்துவது கஷ்டம் இவைகள் மற்ற வியாதிகளிலிருந்து வேறுபட்டவை அல்ல. ஆனுல் மற்ற வியாதிகளில் வியாதியஸ்தர்களுடைய சுபாவமும் மனதும் எப்பொழுதும் மாறுபட்டேயிருக்கும். ஆகையால் நாம் வியாதியின் குறிகளை கேட்டுத் தெரிந்து கொள்ளும்பொழுது இவைகளையும் கவனிக்கவேண்டும்.

குறிப்பு: வியாதியின் தன்மையினுல் சாந்த சுபாவமுள்ளவர் சிடுமூஞ்சியாதலும், வெட்கப்பட்டு அடக்கமாக இருப்பவர்கள் வெட்கத்தை விட்டு மானஹீனமான பல காரியங்களை செய்வதும், இன்னும் பலவித ஆச்சரியமான குணமாறுதல்களையும் காணலாம்.

## ஸ்லோகம் 211

வியாதியஸ்தரின் மன நிலைமையே சில சமயங்களில் வியாதிக்கு ஔஷதத்தைத் தேர்ந்தெடுப்பதில் விசேஷமாக உதவி செய்வதாக இருக்கிறது. மிகவும் கவனமாக கவனிப்பு சக்தியுள்ள பிணியகற்றுவோருக்கு இம்மாதிரியான மனக் குறிகளைக் கண்டுபிடிப்பது சிரமமாக இராது.

## ஸ்லோகம் 212

வியாதிக்கு உபயோகப்படும் ஒவ்வொருவஸ்துவிலும், மனக் குறிகளையும் மாற்றும் சக்தி யிருக்கிறது. சுகதேகியாக உள்ளவர்கள் இவைகளை அதிகமாக உட்கொண்டால், மன நிலைமையிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஒவ்வொரு ஔஷதமும், அதற்கே விசேஷமாக உள்ள, வெவ்வேறு விதமான மனக்குறிகளை உண்டாக்குகின்றது. இதுபோலவே வியாதிகளிலும் மன நிலைமையில் மாறுபாடுகள் ஏற்படுவது ஒரு விசேஷ அம்சமாகவே இருக்கின்றது.

## ஸ்லோகம் 213

ஆகவே மனக்குறிகளையும், மன நிலைமையில் ஏற்படும் மாறுபாடுகளையும் கவனித்து அவைகளையும் மற்றக்குறிகளுடன் சேர்த்து அவற்றிற்கும் பொருத்தமான ஔஷதத்தைத் தேர்ந் தெடுத்தாலன்றி, நீடித்த வியாதியாயினும் சரி, தோன்றி மறையும் வியாதியாயினும் சரி, நாம் இயற்கை நியதியின்படி, அதாவது ஹோமியோபதியின் தத்துவங்களின்படி, வியாதியை சொஸ்தம் செய்ய முடியாது.

## ஸ்லோகம் 214

மனோவியாதிகளைப் பற்றி நான் கொடுத்திருக்கும் விஷயங் களும்இதுவேதான். இவைகளும் மற்ற வியாதிகளைப் போலவே சொஸ்தமாகக்கூடிவையே. மனத்திலும், சரீரத்திலும் எந்த விதமான மாறுதல்களை ஔஷதம் உண்டு பண்ணுகிறதோ அதேபோன்ற மாறுபாடு உடைய குறிகளைக் கொண்ட வியாதியை அந்த மருந்து சொஸ்தம் செய்யும்.

## ஸ்லோகம் 215

அநேகமாக எல்லா மன வியாதிகளும் (சித்தப் பிரமை முதலியவை கூட) சரீரத்தைப் பற்றியவைதான். இவைகளின் மனக்குறிகள் அதிகப்பட்டு, சரீரக் குறிகள் சீக்கிரமாகக் குறைந்து விடுகின்றன. இவ்வாறு ஆவதால் மனக் குறிகளே மேல் நோக்கி நிற்க, மனம் மாத்திரமே வியாதியுற்றிருப்பதாகத் தோற்றம் அளிக்கின்றது.

## ஸ்லோகம் 216

அனேக சந்தர்ப்பங்களில், மரணத்தை உண்டுபண்ணக் கூடியவையான மிகவும் கடுமையான வியாதிகள்—உதாரணமாக சுவாசகோசங்களில் சீழ்ப்பிடித்தல்: வேறு ஏதாவது முக்கியமான உறுப்புகளை அழித்துவிடக்கூடிய அளவுக்குள்ள கேடுகளுள்ள வியாதிகள்; பிரசவத்திற்குப்பின் ஏற்படக்கூடிய சில கடுமையான நிலைமைகள்—இவை திடீரென்று மாறி உன் மத்தம் போன்ற மனக் குறிகளையோ அல்லது சங்காதோஷம்

போன்ற குறிகளையோ மனத்தில் ஏற்படுத்தும். இம்மாதிரியான மனக் குறிகள் ஏற்பட்டவுடன் சரீர அவயவங்களில் ஏற்பட்டிருந்த குறிகள் மாறி அவை சுக சரீர நிலைமைக்கே வந்தும் விடலாம் அல்லது அவை அநேகமாக நீங்கி, மிகவும் அதிகமான கவனமுள்ள வைத்தியரைத் தவிர, மற்றவர்களால் கண்டுபிடிக்க முடியாத அளவுக்குக் குறைந்தும் விடலாம். இவ் வகையில் அவை ஒருபக்கம் வியாதிகளாக மாறி, ஏதோ மனக் கோளாறுதான் என்று நினைக்கும் அளவுக்கு ஆரம்பத்தில் சிறியதாகத் தோன்றினலும், நாளடைவில் பெரிய உன்மத்த வியாதியாகவே ஆகிவிடும். இதைக் கத்தியைக்கொண்டு வைத்தியம் செய்யமுடியாதல்லவா? நமது நாகரீக வைத்தியர்கள் எவ்வளவு சாமர்த்தியமாக எவ்வளவு சோதனை கள் நடத்தினலும், அவர்களின் கண்களுக்கோ அல்லது பரி சோதனைக்கோ (உறுப்புக் கோளாறுகள்) தென்படுவதில்லை. ஏனென்றல் வியாதி அவ்வளவு தூரத்திற்கு ஆழ்ந்து மறைந்து விடுகிறது.

## ஸ்லோகம் 217

இம்மாதிரியான வியாதிகளை நீக்குவதற்கு நாம் மிகவும் ஜாக்கிரதையாக தற்போது இருக்கும் மனக்குறிகளிலிருந்து தொடர்ந்து கொண்டேபோய், உறுப்பு சம்பந்த வியாதியின் சம்பந்தத்தையும் கண்டுபிடித்து, ஆதியிலிருந்துவந்த பொது வான மன நிலைமையையும் அனுசரித்து, எல்லாவற்றிற்கும் பொருத்தமான ஒரு ஹோமியோபதி ஔஷதத்தைக் கண்டு பிடிக்க வேண்டும்.

## ஸ்லோகம் 218

இம்மாதிரி எல்லாக்குறிகளையும் நாம் தெரிந்துகொள்ளுவ தற்கு வியாதியஸ்தரின் நெருங்கிய உறவினர்களிடமிருந்தோ, சினேகிதர்களிடமிருந்தோ ஏற்கனவே இருந்த உடல் உறுப்பு வியாதிகளின் குறிகளையும், முக்கிய தன்மைகளையும் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

## ஸ்லோகம் 219

முன்பு இருந்த உறுப்பு வியாதிகளின் குறிகளையும் தற்பொழுது இருக்கும் உறுப்பு சம்பந்தமான குறிகளையும் நன்கு கவனித்தால், அவைகளுக்கு ஒரு சிறு அளவாவது தொடர்பு இருப்பது தெரியவரும் அவை எவ்வளவு மறைந்தாலும், ஒவ்வொரு சமயங்களில் மனக்குறிகள் சிறிதளவு சமனப்பட்டு, உறுப்புக் குறிகள் தோன்ற ஆரம்பிக்கும்.

## ஸ்லோகம் 220

தற்பொழுது இருக்கும் மனக்குறிகளுடன், வியாதியஸ்தரின் உறவினர், நண்பர் இவர்களிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்ட உடற்குறிகளையும் நன்கு அறிந்து இவ்விரண்டையும் ஒன்றுசேர்த்து ஆராய்ந்தோமானல், நமக்கு ஒரு முழு வியாதியின் குறிகளும் கிடைத்துவிடுகின்றன. இவை எல்லாவற்றிற்கும் பொருத்தமான (ஸோராவை நீக்கக்கூடிய) சரியான ஔஷதத்தைத் தேர்ந்தெடுத்தால், ஹோமியோபதி முறைப்படி வியாதியஸ்தருக்கு வியாதி பூரண சௌக்கியமாகும்.

## ஸ்லோகம் 221

வியாதியஸ்தர் சாதாரணமாக உபாதைகள் இல்லாமல் சில சமயம் இருக்கலாம். அச்சமயங்களில் பயத்தினலோ, வெறுப்பினலோ அல்லது மதுபானக் குடி முதலிய லாகிரி வஸ்துக்களாலோ திடீரென்று மனமாறுதலினல் பைத்தியமாக நடக்கலாம். இதை திடீரென்று தோன்றி மறையும் வியாதியைப் போல் வந்தால் அதை ஆண்டி ஸோரிக் (Anti psoric) மருந்துகளால் நிவர்த்திபண்ண முயற்சிக்கக்கூடாது. (ஆனல் பொதுவாக இது உண்டாவது உள் ஆழ்ந்திருக்கும் ஸோராவின் தலை கிளப்பலேயாம்.) இதை அகோனைட், பெல்லடொன்ன, ஸ்ட்ரமோனியம், ஹயாஸ்யாமஸ், மெர்குரி முதலிய மருந்துகளை உயர்ந்த வீரியத்தில் கொடுத்தால் அது (அந்த ஸோரா) தன்னுடைய பழைய உள் அடங்கி இருக்கும் நிலைமைக்குப் போய்விடும். வியாதியஸ்தரும் தற்சமயம் குணமடைந்து விடுவார்.

## ஸ்லோகம் 222

ஆனல் இதுமாதிரியான ஆண்டிஸோரிக் அல்லாத (Non-anti-psoric) மருந்துகளைக் கொடுத்து திடீரென்று தோன்றின வியாதி மறைந்தவுடன் வியாதி தீர்ந்து விட்டது என்று நம்பி ஏமாந்துவிடக்கூடாது. இப்படி இருக்கும் சமயத்தில்தான் ஆண்டி ஸோரிக் மருந்தை பொறுக்கி எடுத்துக் கொடுத்தால் நாளடைவில் வியாதி முற்றிலும் குணப்பட்டு விடும். மறுபடியும் முன்மாதிரியான திடீரென்று தோன்றும் வியாதிகள் உண்டாகா. ஆகாரங்களிலும் சரியான சட்டதிட்டங்களிட வேண்டும்.

## ஸ்லோகம் 223

இப்படி ஆண்டி ஸோரிக் வைத்தியம் கைவிடப்பட்டால் அடிக்கடி, சாதாரண சிறு காரணங்களினுல்கூட, முன்வந்த பைத்தியம், மயக்கம், முதலானவைகள் அடிக்கடியும், நீடித்த நேரங்கள் இருப்பனவாயும் வரும். இப்படி அடிக்கடி வந்து கொண்டிருக்கும் போது உள்ளிருக்கும் ஸோராவானது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டேபோய் கடைசியில் எந்தவிதமான ஆண்டி ஸோரிக் மருந்துகளாலும் குணம் செய்யமுடியாத நிலேக்கு வந்துவிடும்.

## ஸ்லோகம் 224

மனேவியாதி முற்றிலும் தெளிவாகத் தெரியும் நிலைமைக்கு வராமல் இருக்கலாம். இந்த நிலைமையில் இரண்டு விதமான சந்தேகங்கள் வரலாம். ஒன்று சரீர சம்பந்தங்களினல் உண்டானதா அல்லது கெட்ட படிப்பு, பழக்கம், துர்நடத்தை, மனதைக் கட்டுப்படுத்தாமலிருத்தல், தப்பான தெய்வீக எண்ணங்கள், அறியாத் தன்மை முதலியவைகளினல் உண்டானதா என்ற சந்தேகம் உண்டாகலாம். இதை நிவர்த்திப்பதற்கு வழி பின்வருமாறு.

கெட்ட படிப்பு முதலானவைகள் சரியான நல்ல போதனையினல் குறைந்தும், அந்த போதனை இல்லாதபோது மறுபடியும் பழைய நிலேக்கு வந்தும் இப்படி மாறுதல்கள் உண்டாகும். ஆனல்

உண்மையான சரீரத்தோடு சம்பந்தப்பட்ட மனோவியாதிகள் இது மாதிரியான நற்போதனையால் வியாதி அதிகப்பட்டு மூளைகெட்டு வியாதி முற்றிக்கொண்டே போகும். இந்த வித்தியாசத்திலிருந்தே வியாதி எந்தவிதமானது என்று தெரிந்து கொள்ளலாம்.

## ஸ்லோகம் 225

சரீர சம்பந்தத்தினாலும் சில மன அதிர்ச்சி வியாதிகள் உண்டாகி இருந்துகொண்டே இருக்கலாம். அல்லது சரீரம் சிறிதளவு பாதிக்கப்பட்டிருந்தும் அடிக்கடி உண்டாகும் மன அதிர்ச்சி, கவலை, தொந்தரவு பயம் முதலானவைகளினால் சரீரத்தில் வியாதி நீங்காமலே இருக்கலாம்.

இதுவே நீடித்திருந்தால் நாளடைவில் உடம்பை மிகவும் கெடுத்து விடும்.

## ஸ்லோகம் 226

இம்மாதிரியான மன அதிர்ச்சியான வியாதிகள்தான், முதன்முதலில் மனதில் வியாபித்து பிறகு அதைவிட்டு அகலாமல் இருப்பதால் அவைகள் சமீபத்தில் தோன்றியதாயிருந்தாலும், உடம்பில் பரவாததினாலும், இந்த வியாதிஸ்தர்களை மனதை உற்சாகப் படுத்தியோ, நற்போதனை செய்தோ. அல்லது நம்பிக்கை வரும்படி செய்தோ, மனதையும் திருத்தி, சரியான முறைப்படி கொடுக்கும் ஆகாரங்களினால் உடலையும் மனதையும் சரிப்படுத்தி குணமாக்கிவிடலாம்.

## ஸ்லோகம் 227

ஆனால் இந்த கேஸ்களில் அடிப்படையான காரணம் ஸோராவாக இருப்பதுதான். ஆகையால் இந்த அடிப்படையான காரணம் மறுபடியும் மனதில் அல்லது உடலில் கெடுதல் உண்டாக்காமல் இருப்பதற்கு தற்போது மேலே கூறியபடி குணமான வியாதியஸ்தரை சரியான ஆண்டி ஸோரிக் மருந்துகளைக் கொடுத்து நிரந்தரமாக குணமாக்கி விடவேண்டும்.

## ஸ்லோகம் 228

உடல் வியாதியால் உண்டாகும் அல்லது மன அதிர்ச்சி யினுல் உண்டாகும் வியாதிகளுக்குச் சரியான ஆண்டி ஸோரிக் மருந்துகளைத் கொடுத்துத்தான் குணம் செய்ய முடியும். தவிர சமீபத்திலிருக்கும் உறவினர், சிநேகிதர்கள் முதலியவர்களின் நடவடிக்கை அவனுடைய (வியாதியஸ்தருடைய) மனதை பாதிக்கும்படியானபடி இருக்கக் கூடாது; பின் வருமாறு நடக்க வேண்டும்.

(1) மிகுந்த கோபத்துடன் வரும் பயித்தியச் செயல்களுக்குத் திடமான சாந்த மனதுடன் எதிர்க்கவேண்டும்.

(2) அனுவசியமாக அழுகை, வருத்தப்படும் நடத்தைகளுக்குத் நாம் ஒருவித உணர்ச்சியையும் முகத்திலோ அல்லது செயல்களிலோ காட்டாமல் இருக்கவேண்டும்.

(3) பிதற்றல்களுக்கும் கவனித்தும் கவனிக்காததுபோல் நடக்க வேண்டும்.

(4) அருவருப்பான பேச்சு நடத்தைகளுக்கு முழுவதும் கவனிக் காமல் இருக்கவேண்டும். வியாதிபஸ்தர்கள் தன்னையோ மற்றவரையோ துன்புறுத்திக்கொள்ளத் தக்க பண்டங்களை அகற்றி வைக்க வேண்டும். அப்படித் தவறி ஏதாவது அவர்கள் செய்து விட்டாலும் கூட அவர்களை அடித்துத் துன்புறுத்துதல் கூடாது. மருந்துகள் கொடுப்பதும்கூட கட் டாயப்படுத்தாமல் அவர்களுக்குத் தெரியாமல் பானங்களில் கலந்து கொடுத்து விடலாம். நம் ஹோமியோபதி முறையில் பானங்களில் மருந்துகளை கலந்தாலும் கூட ருசி மாருததினுல் அவர்கள் மறுக்காமல் சாப்பிட்டுவிடுவார்கள்.

## ஸ்லோகம் 229

மேலும் இம்மாதிரியான மனே வியாதிகளை முரட்டுத்தன மாகக் கண்டிப்பதோ, அவர்களை சாந்தப்படுத்துவதற்கு பயந்து அவர்கள் இஷ்டப்படி நடப்பதோ அல்லது பயந்து நடப்பதோ மிகவும் கெடுதலான முறை. நம்முடைய நடத்தையைப் பார்த்து வியாதியஸ்தர்கள் நம்மை ஏமாற்றும் முறையில், மேலும் அதிகமாக வியாதியிருப்பது போல் நடிப்பார்கள். வைத்தியரும்,

அவர்களை காவல் சூழ்ந்து இருப்பவரும், வியாதியஸ்தர்கள் நல்ல புத்தியோடு நடப்பதாகவும் அவர்களை நாம் நம்பி நடப் தாகவும் நடித்து அவர்களின் மனதை மாற்ற வேண்டும். அவர்கள் மனதை அல்லது மன உணர்ச்சிகளை கிளப்பும் படியான பதார்த்தங்களை அவர்கள் எதிரில் வைக்கக்கூடாது. அவர்கள் மனது அமைதி குலைந்து இருப்பதால் அவர்களைச் சுலபத்தில் குணமாக்க முடியாது. அவர்கள் உடல் நலம் நாளடைவில் குணம் அடைய அடைய மனமும் சாந்தியை அடைந்துகொண்டே வரும். இது துரிதமாக நடக்காது.

## ஸ்லோகம் 230

(ஹானிமன் சொல்லுவதாவது) என் அனுபவத்தில் உடலோடு சம்பந்தப்பட்டோ, தனியாகவோ அல்லது சேர்ந்தோ உண்டான மனோவியாதிகள் நம் ஹோமியோபதி முறையில் தான் குணம் செய்ய முடியும். அல்லோபதி முறையில் கண்டபடி அடிக்கடி மருந்துகளைக் கொடுத்தும் வியாதியஸ்த ருக்கு நன்மை உண்டாவதில்லை. நம் வைத்தியத்தில் மனோ வியாதிகளுக்குப் பல மருந்துகள் இருக்கின்றன. இவைகளி லிருந்து ஒவ்வொரு கேசுக்கும் அதன் முக்கிய குறிகளுக்கு ஒத்தாற்போலுள்ள ஹோமியோபதி மருந்தை பொறுக்கி எடுத்துக் கொடுத்தால் வெகு சீக்கிரமாகவே குணம் தெரியும். நம் ஹோமியோபதியின் அருமையான சக்தியை மனோவியாதி களில் மிகவும் விசேஷமாகக் காட்டலாம். வேறு ஒரு முறையிலும் மனோவியாதிகளைக் குணம் செய்யச் சிறந்த வழியில்லை. இதற்காக நாம் நம்முடைய ஒவ்வொரு ஹோமியோபதி மருந்திலும் அதனுடைய நிர்ணயத்தில் மனது எந்தவிதமான அமைதியற்ற நிலைமையை அடைகிறது என்பதைக் கவனித்துக்கொள்ளவேண்டும்.

## ஸ்லோகம் 231

முறை வைத்து, விட்டு விட்டுத் திரும்பிவரும் உபாதிகளும், சில காலவறை அல்லது பருவங்களுக்குள் திரும்பவும் பீடிப் பவைகள்—அநேக முறைக் காய்ச்சல்களும், முறைக் காய்ச்சல் களைப்போல் சில காலவறைக்குள் திரும்பப் பீடிக்கும் சுர

மில்லாத உபாதைகள்—மற்றும், சில வேறு வகைப்பட்ட வியாதி நிலைகளுடன், சில வியாதி நிலைகள் தொகுக்கப்படாத காலவறை முறையில் விட்டு விட்டு வருபவைகளும், விசேஷ ஆராய்ச்சி நடத்துவதற்கு தகுந்தவைகள் அல்லது யோக்கியதை யுடையவைகள்.

## ஸ்லோகம் 232

பின் சொல்லப்பட்ட மாறி மாறி வருகின்ற வியாதிகள் கூடமிகப்பலவே. ஆனுல் அவைகள் எல்லாம் நாட்பட்ட வியாதி களின் பிரிவில் சார்ந்தவையே. அவைகள், பொதுவாக. விருத்தியடைந்த ஸோராவின் தோற்றமேயாகும். ஆனுல் சில சமயங்களில் ஸிபிலிஸ் விஷவாத சிக்கல்களில் சம்பந்தப் பட்டுமிருக்கலாம். அதனுல் முதல் பிரிவான ஸோராவின் விளைவான வியாதியை அது சம்பந்தப்பட்ட ஆண்டிஸோரிக் (Antipsoric) மருந்துகளால் குணமாக்கலாம். பின்னுல் சொல்லப்பட்ட ஸிபிலிஸ் சம்பந்தப்பட்டவைகளில் நாட்பட்ட சீக்குகள் (Chronic Diseases) என்னும் நூலில் என்னுல் அறிவுறுத்திய ஸிபிலிஸ்ஸை அகற்றும் (Antisyphilitics) மருந்துகளையும் மாற்றி, மாற்றித் தருவதால் நீக்கலாம்.

## ஸ்லோகம் 233

முறை வைத்து விட்டு விட்டு தோன்றும் உபாதைகளின் முக்கிய அடையாளமாவது ஒரு நோயாளி சில காலத்துக்கு ஆரோக்கிய நிலைமையிலிருப்பது போலிருப்பதும், நோயின் குணம் ஒரு குறித்த காலவரையில் திரும்பத் தோன்றுதலும் பிறகு அதே காலவரையில் கழிந்து போதலுமாகும். இது சுரமில்லாத நோயாக விட்டு விட்டு முறை வைத்து வருதலும் உண்டு அல்லது சுரத்துடன் கூடிய வியாதியாகவும் தோன்றும். (உதாரணமாக அனேகவித முறைச்சுரங்கள்)

## ஸ்லோகம் 234

இம்மாதிரியான சுரமில்லாத விட்டு விட்டு ஏற்படும் ஒரு வியாதி ஒருவருக்குத் தோன்றுமானுல் (இம்மாதிரி வியாதி

கள் கொள்ளை நோயாகத் தோன்றுவதில்லை.) இது நீடித்த வியாதி வகையில் சேர்ந்ததே. முக்கியமாக ஸோராவின் விளைவாகவும், அல்லது சில சமயங்களில் ஸிபிலிஸுடன் கலந்ததாகவும் இருக்கலாம். இதற்கும் மேலே குறிப்பிட்ட முறையிலேயே சிகிச்சை செய்யலாம். இருந்தாலும் சில சமயங்களில் விட்டு விட்டு வரும் நிலைமையைத் தடுக்க இடையிலே வீரியப்படுத்தப்பட்ட சைனு மருந்தை ஒரு வேளை கொடுத்துக்கொள்ளலாம்.

## ஸ்லோகம் 235

தனிப்பட்டதாகவோ, அல்லது பெருவாரியாகவோ தோன்றும் முறை சுரங்கள், சதுப்பு நிலப் பிரதேசங்களில் தோன்றும் தீராத சுரங்கள் போலல்லாமல், இரண்டு வேறு பாடான, மாறி மாறி வரும் குறிகளுடன், (அதாவது குளிர், உஷ்ணம், உஷ்ணம், குளிர்) மேலும் சில சமயங்களில் மூன்றுவித மாறுபாடான நிலைகளுடன் (அதாவது உஷ்ணம், குளிர், வியர்வை என்று) காணப்படுகின்றன. ஆகையினுல் இந்த சுரங்களுக்கு மருந்து தேர்ந்தெடுக்கும்போது நிரூபிக்கப் பட்ட (Proved) சாதாரண மருந்துகளில் (ஆண்டிஸோரிக் அல்லாதவை) எவை திடகாத்திர சரீரத்தில் மேற்சொன்ன இரண்டு அல்லது மூன்று குறிகளை ஹோமியோபதியின் தத்துவத்தின்படி, உண்டாக்கக் கூடியவைகளோ அவைகளே நிச்சயமான ஔஷதங்களாகும். அதோடு கூட, சுரம் விட்ட பிறகு வியாதியஸ்தரின் நிலைமையையும் நன்கு ஆராய்ந்து மருந்து தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

## ஸ்லோகம் 236

இவ்வகையான கேஸ்களில் மருந்து கொடுப்பதற்கு மிகவும் ஏற்றதான காலம், ஒவ்வொரு தடவை வியாதி உக்கிரமடைந்து தணிந்த பிறகு ஆகும். வியாதியின் உக்கிரத்திலிருந்து தானுகவே தணியும்போது, வியாதி படிவதற்கு வேண்டிய சூழ்நிலை சரீரத்தில் ஏற்படுகிறது. இந்த சமயத்தில் மருந்து கொடுக்கப்பட்டால் யாதொரு கடுமையான கொந்தளிப்பும்

ஏற்படாமல் வியாதி சொஸ்தமாக ஏதுவாகும். ஆனல் வியாதி யின் உக்கிரம் ஆரம்பிப்பதற்கு முன்னல் கொடுக்கப்பட்டால் ஔஷதம் எவ்வளவுதான் வியாதிக்குப் பொருத்தமானதாக இருந்தாலுங்கூட, வியாதியின் உக்கிர நிலைமையுடன், ஔஷ தத்தின் வேலையும் சேர்ந்து (வியாதியஸ்தருடைய உயிருக்கு ஆபத்து ஏற்படாவிட்டாலும்) அதிகமான சரீர பலவீனத்தை ஏற்படுத்தலாம். ஆனல் வியாதியின் ஒரு உக்கிர நிலைமை படிந்து, சுரமில்லாத நிலைமையில் ஔஷதம் கொடுக்கப்பட்டால், அதாவது அடுத்த உக்கிர நிலைமை ஏற்படுவதற்கு அதிக காலம் முன்னலேயே கொடுக்கப்பட்டால், சரீரத்தின் ஜீவ சக்தி இது சமயம் மிகவும் நல்ல சாதகமான நிலைமையில் இருப்பதால், மருந்து வேலை செய்து சொஸ்தம் செய்வது சாத்தியமாக இருக்கும்.

## ஸ்லோகம் 237

ஆனல் சில கொடிய சுரங்களில் ஏற்படுவது போல சுரமில்லாத நிலைமை மிகவும் குறுகிய காலத்திற்கே இருக்கு மாயினும், அல்லது இந்தக்காலத்தில் வேறு ஏதாவது தொந் திரவுகள் இருக்குமாயினும், சரியான ஹோமியோபதி ஔஷதத்தை வியர்வை ஏற்பட்டு அது அடங்கும்போது கொடுக்க வேண்டும். அதாவது வியாதியின் உக்கிரம் ஒருவாறு அடங்கியவுடன் கொடுக்கவேண்டும்.

## ஸ்லோகம் 238

அனேக சந்தர்ப்பங்களில் சரியான ஔஷதத்தில் ஒரே வேளை, பல முறை வந்த உக்கிரவியாதியை சொஸ்தம் செய் திருக்கிறது. ஆனல் அநேக கேஸ்களில் ஒவ்வொரு வியாதி உக்கிரத்திற்குப் பிறகும் ஒரு வேளை ஔஷதம் கொடுப்பது அவசியமாகும். வியாதியின் உக்கிரத்தன்மை குறைந்தாலும், குறிகளில் மாறுதல்கள் இல்லாவிட்டால் அதே ஔஷதம் கொடுக்கப்படலாம். அவ்வாறு கொடுக்கப்படும்போது, ஒவ் வொரு தடவையும், முந்தியதைவிட ஔஷத வீரியத்தை அதிகப்படுத்துவதற்காக, மருந்து இருக்கும் பாட்டிலைப் பத்துப் பன்னிரண்டு தடவை பலமாகக் குலுக்கவேண்டும். மேலும்

சில சமயங்களில் அந்த முறைச்சுரம் பல நாட்கள் கழித்துக் கூடத் திரும்பிவர ஏதுவுண்டு. இம்மாதிரி பலநாட்கள் கழித்து அதே வியாதி திரும்பி வருதல், அவ்வியாதியை ஏற்படுத்திய கெட்ட சூழ்நிலை நீக்கப்படாமலிருப்பதினுல்தான். உதாரண மாக, சதுப்பு நிலவாசம் முதலியவை. இம்மாதிரியான நிலைமைகளில் வியாதியின் பூரண நிவர்த்தி, அம்மாதிரியான சதுப்பு நிலத்தில் வாசம் செய்வதை விடுத்து வேறு வரண்ட பிரதேசங்களில் வசிக்கச் செய்வதாகும்

## ஸ்லோகம் 239

அநேகமாக ஒவ்வொரு ஔஷதமும், தன்னுடைய ப்ரூவிங்கில், ஒரு விசேஷமான முறைச்சுரத்தைத் தோற்று விக்கிறது. இவ்வாறு தோற்றுவிக்கப்படும் ஒவ்வொரு சுரமும், வேறு ஔஷதங்களினுல் தோற்றுவிக்கப்படும் சுரத்திற்கு வித்தியாசமாகவே இருக்கிறது. ஆகவே இதுவரையில் நிர்ண யிக்கப்பட்டு நம்மிடம் இருக்கும் ஔஷதங்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருந்துங்கூட, உலகில் தோன்றும் எல்லா முறை சுரங்களுக்கும் பொருந்தும் ஔஷதங்கள் நம்மிடம் இருக்கின்றன.

## ஸ்லோகம் 240

ஆனுல் சரியாகத்தேர்ந்தெடுத்த ஹோமியோபதி ஔஷ தம் முறைச் சுரத்தைப் பூரணமாக சொஸ்தம் செய்யாமலும், ஆனுல் சதுப்பு நிலக் குடியிருப்புப்போன்ற காரணமும் இல்லாமலிருக்குமாயின், இவ்வாறு வியாதி பூரணமாக சொஸ்த மாகாமல் இருப்பதற்குக் காரணம் சரீரத்தில் உள்ளடங்கிக் கிடக்கும் "ஸோரா"வாகத்தான் இருக்கவேண்டும். இம்மாதிரி யான கேஸ்களில் வியாதி பூரண சௌக்கியம் ஆவதற்கு ஆண்டிஸோரிக் மருந்துக்ள் கொடுக்கப்படவேண்டும்.

## ஸ்லோகம் 241

சாதாரணமாக சில பிரதேசங்களில் எப்பொழுதும் முறை சுரங்கள் இருந்துகொண்டே இருக்கும். இம்மாதிரியான

பிரதேசங்களில் முறைச் சுரம் கொள்ளை நோயாகத் தோன்று மாயின் இவை ஒரே கிட்டிய உபாதி உள்ள நீடித்த வியாதி என்று கருதப்படவேண்டும். இவ்வாறு தோன்றும் ஒவ்வொரு கொள்ளை சுரமும், அதனுல் பாதிக்கப்படும் நபர்களுக்கு ஒரே மாதிரியான குறிகளை உண்டுபண்ணும். பொதுக் குறிகள் ஒரே மாதிரியாக இருப்பதால் இவற்றிற்கு எற்ற ஒரு சரியான ஹோமியோபதி ஔஷதத்தைத் தேர்ந்தெடுத்துவிட்டால் இதுவே இதற்கு முன்னுல் ஸோராபோன்ற நீடித்த வியாதியால் பாதிக்கப்படாமலிருப்பவர்கள் அனைவருக்கும் மருந்து ஆகும்.

## ஸ்லோகம் 242

இம்மாதிரி ஏற்படும் கொள்ளை முறைச் சுரம், முதல் தடவை சுரம் ஏற்பட்டவுடனேயே மேற்காட்டியவாறு சொஸ்தம் செய்யப் படாவிட்டாலும், அல்லது முறை தவறிய அல்லோபதி சிகிச்சை செய்யப்பட்டாலும், துர் அதிர்ஷ்டவசமாக அநேகருக்கு உள்ளடங்கி இருக்கும் ஸோரா வெளிக்கிளம்பி தாண்டவமாட ஆரம்பித்து விடுகின்றது. இனி முதலில் தேர்ந்தெடுத்த மருந்து (இது அநேகமாக ஆண்டி ஸோரிக் ஔஷதமாக இருக்காது) பிரயோஜனப்படாமல் போய்விடும். ஆகவே இனி நாம் ஸோராவினுல் ஏற்பட்ட முறைச் சுரத்தை சொஸ்தம் செய்யவேண்டியவர்கள் ஆகிரோம். அநேகமாக இந்த நிலைமையில் மிகச் சிறிய அளவில், உயர்ந்த வீரியத்தில் ஸல்பரோ, ஹீபார் ஸல்பரோ, ஒரே வேளையோ அல்லது பல நாட்களுக்கு ஒரு முறையோ கொடுக்க சொஸ்தமாகும்.

## ஸ்லோகம் 243

சதுப்பு நிலப் பிரதேசத்தில் வசிக்காத ஒரு மனிதனைத் தாக்கும் மிகக் கடுமையான முறை சுரத்தில் ஸோராவின் மூல காரணங்களை ஒத்திருப்பவை போன்ற முறைச் சுரத்தில் குறுகிய கால வியாதிகளில் செய்வதுபோல், நிரூபிக்கப்பட்ட மருந்துகளின் மற்றத் தொகுதியிலிருந்து தனிப்பட்ட கேஸுக்குப் பொருக்கியெடுத்த குணமாக்கவல்ல ஹோமியோ பதி மருந்தை, இது செய்யக்கூடுமானதை செய்யட்டுமென்று

முதலில் சில நாட்களுக்கு நாம் பிரயோகிக்கவும் வேண்டும். ஆனல் இவ்வழியைக் கையாண்டபோதிலும் குணமேற்படுவது மாறுபட்டுத் தோன்றினல், முன்னேற்றமடையும் தருவாயில் இருக்கும் ஸோராவுடன் நாம் செய்ய வேண்டுவது நமக்குத் தெரியும், மேலும் இவ்வகைப்பட்ட கேஸில் ஸோராவை எதிர்க்கும் மருந்துகள் மாத்திரமே வியாதியை வேரறச் செய்ய முடியும்.

## ஸ்லோகம் 244

சதுப்பு நில ஜில்லாக்களிலும் அடிக்கடி வெள்ளங்கள் ஏற்படுவதற்குறிய நாடுகளிலும் அந்நிலப்பரப்பிற்குறிய முறைச் சுரங்களை குணமாக்க அல்லோபதி வைத்தியர்களுக்கு சிரமமாயிருக்கிறது. ஆனல் வியாதியால் பீடிக்கப்படாத ஒரு யௌவன மனிதன் ஆரோக்கிய உணவை புசித்தும் அவன் தேகம் யாதொன்றின் குறைவால் தாழ்த்தப்படாமலும் இருந்தால் அச்சதுப்பு நில ஜில்லாக்களும் அவனுக்கு வசிக்க ஒத்துக் கொண்டு விடுவதுடன் வியாதியால் பீடிக்காமலும் இருக்கிருன். இச்சதுப்பு நிலத்திற்குறிய முறை சுரமும் புதிதாய் அங்கு சென்றவனைத்தான் தாக்குகிறது. ஆனல் மிக உயர்ந்து வீரியப் படுத்திய ஸிங்கோனப் பட்டை திராவகத்தில் ஒன்று அல்லது இரண்டு துளி மருந்து மேற்காட்டியபடி கட்டுப்பாட்டுடன் உசித ஆகார நியமங்களுடன் வசித்து வருவதால் சீக்கிரமாக வியாதியிலிருந்து அவனைக் காப்பாற்றுகிறது. ஆனல் மிதமான தேகப்பயிற்சி எடுத்துக்கொண்டும், தொழில் புரிந்தும் சரீரத்துக்கொத்த உசித ஆகாரம் உட்கொண்டும் வரும் மனிதர்களுக்கும் அப்படிப்பட்ட ஸிங்கோன ஒன்று அல்லது இரண்டு சிறு சொட்டு மருந்தால் சதுப்பு நிலத்திற்குறிய முறை சுரத்தை சொஸ்தமாக்கவும் முடியாது. ஏனென்ருல் ஸோரா தோற்றமளிக்க முயற்சியுள்ள அம்மனிதர்களில் அது அவர்களின் வியாதியின் அஸ்திவாரத்தில் எப்பொழுதும் தங்கி நிற்கிறது. ஸோராவை எதிர்த்து அடக்க சிகிச்சை செய்யாது அவர்களின் முறைச் சுரத்தை அச்சதுப்புநில ஜில்லாவிலேயே சொஸ்தஞ் செய்ய முடியாது. இவ்வியாதியஸ்தர்கள் உடனே சதுப்பு நில ஜில்லாவை விட்டகன்று வரண்ட, மலைப்பாங்காயுள்ள இடங்

களுக்குக் குடிப்புகுந்தால், வியாதியால் வெகு நாள் ஆழ்ந்து தாக்கப்பட்டிராவிட்டால், அ தா வ து, அவர்களில் ஸோரா முழுமையும் விருத்தியடைந்து வெளித்தோன்ருதிருப்பினும், அது தன்னுடைய மறைந்திருக்கும் தன்மையிலேயே திரும்பி விடினும் குணமடைகிருர்கள்; ஸோராவை எதிர்க்கும் சிகிச்சை செய்து கொள்ளாமல் முற்றும் சௌக்கியமடைய மாட்டார்கள்.

## ஸ்லோகம் 245

ஹோமியோபதி சிகிச்சையில் வியாதிகளின் முக்கியமான வைகளுக்கும் அவைகளுக்கு ஏற்படும் தன்மைகளுக்கும் என்ன கவனம் செலுத்தவேண்டும் என்பதைத் தெரிந்துகொண்டோம். மருந்துகளைப் பற்றியும் அவைகளை உபயோகிக்கும் வழிகளைப் பற்றியும், மற்றும் இம்மருந்துகளை, உபயோகிக்கும்போது அனுசரிக்க வேண்டிய பத்தியக் கட்டுப்பாடுகளைப்பற்றியும் சொல்லத் தொடங்குவோம்.

## ஸ்லோகம் 246

சிகிச்சை செய்யும் ஒவ்வொரு சமயத்திலும் உறுதியாய் விருத்தியடைந்து வரும் குணம் நீடித்திருக்கும் வரை ஒரு மருந்தையும் திரும்பவும் கொடுக்கக் கூடாது; ஏனென்ருல் சாப்பிட்ட மருந்து தொடர்ந்து வேலை செய்து நன்மை செய்ய ஆரம்பித்து அதை முற்றும் நிறைவேற்ற விரைந்துகொண்டிருக் கிறது. குறுகிய கால (acute) வியாதிகளில் இத்தன்மை இயல் பானதே, ஆனல் அநேக நீடித்த (chronic) வியாதிகளிலோ வென்ருல் தேர்ந்தெடுத்த சரியான ஒரே வேளை ஹோமியோபதி மருந்து தொடர்ந்து தாமதமாய் வேலை செய்யினும் சில சமயங் களில் அப்படியுள்ள கேஸில் அம்மருந்தால் 40, 50, 60, 100 நாள்களில் பூரண அனுகூலம் ஏற்படும்படி சாதாரணமாக ஒத்தாசை செய்யலாம். ஆனுலும் இத்தன்மை அறியதாயிருக் கிறது. இதுவுமின்றி, கூடியவரையில் வைத்தியனுக்கும் நோயாளிக்கும்கூட மிகவும் துரிதத்தில் குணங்கிட்டுமளவுக்கு இந்த கால எல்லையை அரை, கால், இன்னும் குறைந்த

அளவிற்குச் சுருக்குதல் ஒரு முக்கியமான விஷயம். சமீப காலத்தில் அடிக்கடி அனுபவத்தாலறிந்ததில் இக்கால எல்லையை கீழ்கண்ட நிலைமைகளில் இன்பமாகவே குறைக்கலாம் எனக்கண்டேன். முதலாவதாக, மிகுந்த ஜாக்கிரதையுடன் பொருக்கியெடுத்த மருந்து முற்றும் ஹோமியோபதி முறைப் படி இருத்தல்; இரண்டாவதாக, அது உயர்ந்து வீரியப்படுத்தப் பட்டு, தண்ணீரில் கரைத்து தகுந்த சிறிய அளவில் குறித்த இடைவேளைகளில் ஒரு வேளை மருந்து கொடுப்பது குணமாக் குவதை விரைவில் செய்து முடிக்க மிகவும் தகுந்ததென அனுபவம் தெரிவித்திருக்கிறது ஆனல் ஜீவ சக்தியை பொருந் தாத வகையில் எதிர்த்தாக்குதலைச் செய்யாமலும், முக்கியமாய் மருந்தின் வீரியத்தை மாற்ருமல் அடிக்கடியும் கொடுக்கப்படும் கேஸ்களில் உண்டாகும் குழப்புதலை போல் எழுப்பாமலும், வியாதியையொத்த குறிகளை ஏற்படச் செய்யும்படி, ஒவ்வொரு மருந்தின் பாகமும், முதலில் கொடுத்ததை அடுத்துத் தொடர்ந்து கொடுக்கப்படுவது சற்றேறக் குறைய வீரிய மருந்துகளின் அளவு குறைந்திருக்கும்படி முன்னெச்சரிக்கை யாயிருத்தல் வேண்டும்.

## ஸ்லோகம் 247

அடிக்கடி அதே மருந்தைக் கொடுப்பதைத் தவிர்த்து (குண மாவதை தாமதிக்காதிருக்கும் பொருட்டு குறுகிய இடை வேளை களில் கொடுத்தல்) ஒரு தடவை கொடுத்த வீரிய அளவுக்கே ஒரு மருந்தை மாற்ருமல் திரும்பவும் அவ் வீரியத்திலேயே கொடுத்தல் ஏற்றதல்ல. அப்படி மாற்ருத மருந்தினளவை ஜீவசக்தி எதிர்க்குமே தவிர ஏற்பதில்லை. அதாவது சொஸ்தம் செய்யவிருக்கும் வியாதிக் குறிகளைக் காட்டிலும் மருந்திற்கேற் பட்ட மற்ற குறிகளை வெளிக்காட்டாமலிருக்காது. ஏனென்ருல் முதலில் கொடுத்த ஒரு வேளை மருந்து ஜீவசக்தியில் விரும்பிய மாறுதலை முன்பே செய்துவிட்டது. ஆகையால் வியாதிக்கேற்ற வீரியப்படுத்திய அம்மருந்தின் இரண்டாவது வேளை, வீரியத் தில் மாறுபடாத அதே மருந்து ஜீவசக்தியில் முன்பு கண்ட அதே நிலைமையை இன்னமும் காண்பதில்லை. வியாதியஸ்தர் மாற்ருத அதே வீரிய மருந்தை பல வேளைகள் சாப்பிடுவதால்

மற்ருெரு வகையில் அவஸ்தைக்குள்ளாகலாம். முன்பிருந்ததைக் காட்டிலும் அதிகமாக உபாதிப்படலாம் ஏனென்ருல், ஆரம்பத்திலுள்ள வியாதிக்கு ஹோமியோபதிக்குற்ற குறிகள் இல்லாத சிலவை திரும்பவும் கொடுத்த மருந்தினுல் ஏற்படுகிறது. ஆகவே வியாதியஸ்தரின் உண்மையான அவஸ்தை நிலைமை அதிக மடைவதல்லாது குணமாவதற்கான வழி ஏற்படாது. ஆனுல் பிறகு தொடர்ந்துகொடுக்கப்படும் வேளை மருந்துகள் ஒவ்வொரு தடவையும் சிறிதளவு மாற்றப்பட்டால் (see 269, 270) பிறகு ஜீவசக்தி அதே மருந்தால் கஷ்டமில்லாமல் தக்கவாறு மாற்றப்பட்டு (ஏற்பட்ட வியாதியின் உணர்ச்சி குறைந்து) அவ்வழியே குணமும் கிட்டுகிறது.

## ஸ்லோகம் 248

இதைச் செய்வதற்கு, மருந்து கரைத்ததை திரும்பவும் வீரியப்படுத்துகிருேம் (8, 10, 12 தடவைகள் குலுக்குவதால்) அதிலிருந்து நீடித்த வியாதிகளுக்கு தினம் அல்லது இரண்டு நாளைக்கு ஒரு தடவை, குறுகியகால வியாதிகளில் 2-லிருந்து 6 மணிகளுக்கு ஒரு தடவையும், அவசரமான கேஸ்களில் ஒரு மணிக்கு ஒரு தடவையும் அல்லது அடிக்கடி வியாதியஸ்தருக்கு ஒன்று அல்லது (அதிகமாய்) பல தேக்கரண்டியளவு நாம் கொடுக்கிருேம். இதேபோல் நீடித்த வியாதிகளில், ஒவ்வொரு சரியாய் பொருக்கியெடுத்த ஹோமியோபதி மருந்தும், நீடித்து வேலைசெய்பவைகளுங்கூட, தொடர்ந்து அனுகூலத்தை அதிகரிக்கச்செய்கிறது. இம்மருந்தை ஒவ்வொரு நாளும் பல வேளைகளாக மாதக்கணக்கில் கொடுக்கலாம். கரைத்த மருந்து உபயோகித்தாகி விட்டால் (7 அல்லது 15 நாட்களில்) அதே மருந்து இன்னமும் சுட்டாயிருப்பின், வியாதியஸ்தர் அவர் ஜீவிய காலத்தில் இதற்கு முன் தோன்ருத உபாதிகளை அடையாமல் தொடர்ந்து குணமடைந்துவரின், நாம் கொடுக்கும் அதே மருந்தின் உயர்ந்த வீரிய மாத்திரையில் ஒன்று அல்லது (எப்பவாகிலும்) பலவற்றை அடுத்ததாகக் கரைத்துக் கொடுக்க வேண்டும். அப்படி வேற்றுக்குறிகள் தோன்றின் அதற்குரிய மற்ருெரு ஹோமியோபதி மருந்தை தெரிந்தெடுத்து முன்பு கொடுத்த மருந்திற்குப் பதிலாய் முன்போலவே அடிக்கடி

கொடுக்கவேண்டும். அப்படிச் செய்கையில் ஒவ்வொரு வேளை மருந்து கொடுக்கும்போதும் கரைத்திருக்கும் மருந்தை துரிதமாகக் குலுக்கி வீரியத்தை ஒவ்வொரு தடவையும் சிறிதளவு உயர்த்திக்கொண்டே வரவேண்டும். சரியான ஹோமியோபதி மருந்தை ஒவ்வொரு தினமும் திரும்பத் திரும்பக் கொடுத்துவரும்போது நீடித்த வியாதியின் சிகிச்சை முடிவடையும் தருவாயில் ஹோமியோபதி உபாதி அதிகம் (Homoeopathic aggravation) தோன்றினால் (வியாதிக் குறிகளுக்கு ஒப்பான மருந்தினால் உண்டான குறிகள் தோன்றுதல்) இம்மாதிரியான நிலைமையில் மருந்தின் பிரமாணத்தை மேலும் குறைத்து, (வீரியத்தை அதிகப்படுத்தி என்பது பொருள்) நீடித்த இடைவேளைவிட்டு, வியாதி சொஸ்தம் ஆவதற்கு இனி மருந்தின் உதவி தேவையா அல்லது இல்லையாவென்பதை அறியும்பொருட்டு; முடியுமானால் அனேக நாட்களுக்கு மருந்தை நிறுத்திவிடவேண்டும். அதிகப்படியாக உட்செலுத்தப்பட்ட ஹோமியோபதி மருந்தினால் உண்டாகிய அக்குறிகள் சீக்கிரமே மறைந்து அதனால் உண்டாக்கப்பட்ட அசௌக்யம் நீங்கிவிடும்.

## ஸ்லோகம் 249

ஒரு வியாதிக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொரு மருந்தும், அது வேலை செய்யும்போது, அந்த வியாதிக்கு சம்பந்தமில்லாத கஷ்டத்தைக் கொடுக்கும் புதுக்குறிகளை உண்டாக்கினால், அந்த மருந்து குறிப்பிட்ட வியாதியை சொஸ்தம் செய்யச் சக்தியற்றது என்று கருதப்படவேண்டும், அது சரியான ஹோமியோபதி தத்துவங்களின்படி தேர்ந்தெடுக்கப்பட்டதல்ல. ஆகவே, இவ்வாறு ஏற்படும் புதுக் குறிகள் மிகவும் கடுமையானவையாக இருந்தால், சரியான முறிவு மருந்தைக் கொடுத்து முதலில் கொடுத்த மருந்தை முறிக்க வேண்டும். அதன் பிறகு குறிகளுக்கு மிகவும் பொருத்தமான வேறு மருந்து கொடுக்கப்பட வேண்டும். அல்லது, அவ்வாறு ஏற்பட்ட புதுக்குறிகள் அதிகக் கடுமையானதாக இல்லாவிட்டால், (யாதொரு முறிவையும் கொடுக்கா

மலேயே) அடுத்து சரியாகத் தேர்ந்தெடுத்த மருந்தைக் கொடுத்து விடலாம்.

## ஸ்லோகம் 250

வியாதியின் நிலைமையைக் குறிப்பாய் நன்கு விசாரித்தறியும் உற்று நோக்கும் சிகிச்சையாளருக்கு அவசரக் கேசுகளில் ஆறு, எட்டு அல்லது 12 மணி நேரத்திற்குள் அவர் இறுதியாகக் கொடுத்த மருந்து நன்கு தகுதியுள்ளதாகப் பொருக்கி எடுக்கப் படவில்லை என்று நிச்சயமாகத் தெரிந்தவுடன், அதனல் வியாதியஸ்தரின் நிலைமை தெளிவுருமல், புதுக்குறிகளும் உபத்திரவமும் ஏற்படுதல், மணிக்குமணி கெடுதலை அடைந்துவருதல், கொஞ்ச அளவில் இருப்பினும் அதை அப்படியே விட்டுவிடாமல் தகுதியுள்ள ஒத்துமையான ஹோமியோபதிமருந்தை தெரிந்தெடுத்து கொடுப்பதுடன், தற்காலம் இருக்கும் வியாதிக்குறிகளுக்கு மிகவும் ஏற்றதான மருந்தாகவும் இருப்பதை கூடிய வரையில் கொடுத்து அவன் பிசகைத் திருத்திக்கொள்ளுதல் அவனது கடமையாகும்.

## ஸ்லோகம் 251

சரீரத்தின் வேலைகளை மாத்திரம் மாற்றியமைக்கும் தன்மை வாய்ந்த சில ஔஷதங்கள் இருக்கின்றன. (உதாரணமாக இக்னேஷியா, பிரையோனியா, ரஸ், சில சமயங்களில் பெல்லடொன்ன). இவைகள் ஆழ்ந்து வேலை செய்வதில்லை. இவைகளில் ஒன்றை ஒரு வியாதியஸ்தருக்குக் கொடுத்த பின்னர், அப்படிக் கொடுத்தது சரியாக வியாதிக் குறிகளுக்கு ஒத்ததாக இருந்தாலும், வியாதி சமனம் அடையாதிருக்குமாயின் (கிட்டிய வியாதிகளில் சில மணி நேரங்களுக்குள்ளாகக்கூட) அதே ஔஷதத்தை அதே வீரியத்தில் மறுபடியும் திரும்பக் கொடுக்க வேண்டும்.

## ஸ்லோகம் 252

நாள்பட்ட (ஸோரா சம்பந்த) வியாதிகளில் மற்ற மருந்துகளை உபயோகிக்கும்போது தகுதியுற்ற மேன்மையான

ஹோமியோபதி (ஸோராவை யடக்கும்) மருந்தைத் தகுந்த குறைவான அளவில் கொடுத்தும் குணங்கிட்டாவிடில் வியாதியை தயங்கவைக்கும் காரணம் தொடர்ந்து நிற்பதின் காரணம் வியாதியஸ்தரின் ஸந்தர்ப்பத்தில் அல்லது நிலைமையில் ஏதோ பிசகு ஏற்பட்டிருக்கிறது. முற்றும் குணமடைவதின் பொருட்டு அதை அகற்ற வேண்டும்.

## ஸ்லோகம் 253

எல்லா வியாதிகளிலும், முக்கியமாய் குறுகிய கால வியாதிப் போக்கில் உள்ள சில குறிகள் ஒவ்வொருவருக்கும் தெரிய இயலாத வகையில் சிறிது அதிகப்படல் அல்லது சமனமாதல் உணர்ச்சியை செய்கிறது, வியாதியஸ்தரின் மன நிலேயும் மற்றப்படி நடத்தையும் நிச்சயமானதும் நமக்கு நிலைமையை அறிவிப்பதும் ஆகும். குறைந்த அளவில் ஏற்படும் அனுகூலத்தையும் மிகுந்த அளவில் ஆறுதலும், அதிகரித்த அமைதியையும், மன, ஆத்ம உத்சாக நிம்மதியும்—ஒருவித இயல்பான தன்மைக்குத் திரும்புவதை நாம் காண்கிறோம். மிகச்சிறிய அளவில் ஆரம்பமாகும் உபாதி அதிகமாதல் தன்மை இதற்கு மாருக, நேர் எதிரிடையான நிலைமையாகும்; ஒரு கட்டுண்ட, உதவியற்ற, பரிதாபகர தேகம், மனம், மற்றுமுள்ள எல்லாத் தன்மையும், அறிகுறிகளும், அங்கஸ்திதியும், செய்கைகளும் கூர்ந்து கவனித்தால் சுலபத்தில் தெளிவுற அறியலாம், வாயால் சொல்லவொண்ணுதது.

## ஸ்லோகம் 254

ஒரு மருந்தைக் கொடுத்தபின் ஏற்படும் புதிய குறிகள் அல்லது குறிகள் அதிகமாதல், அல்லது இதற்கு எதிரிடையாக, முதலில் இருந்த குறிகள் குறைதல், இவைகளே கவனிக்குங்கால் நன்கு கவனிக்கும் ஒரு வைத்தியருக்கு வியாதி அதிகப்படுகிறதா குறைகிறதா என்பதில் யாதொரு சந்தேகத்தையுமே ஏற்படுத்தாது. எனினும் வியாதியஸ்தர்களில் சிலர் தங்களுக்கு இருக்கும் நிலைமையை தெரிவிக்கத் தெரியாதவர்களாக இருப்பார்கள் அல்லது அதைத் தெரிவிக்க இஷ்டப்படாதவர்களாக வுமிருப்பார்கள்.

## ஸ்லோகம் 255

இப்படி இருப்பவர்களின் விஷயத்தில்கூட, தற்சமயம் அவர்கள் சொல்லும் குறிகளையும், ஏற்கனவே அவர்கள் சொன்ன குறிகளை நாம் குறித்து வைத்துக்கொண்டதையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அவர்கள் புதுக்குறிகள் ஒன்றும் சொல்லவில்லை என்பதையும், பழைய குறிகளும் முன்பு இருந்ததைவிட அதிகமாகவில்லை என்பதையும், தெரிந்து கொள்ளுவோம். விஷயம் இப்படி இருக்குமாயின் இத்துடன் கூட வியாதியஸ்தரின் மனத்திலும் தன்மையிலும் அபிவிருத்தி இருக்கிறது என்றும் கவனித்துவிட்டோமாயின் நாம் கொடுத்த ஒளஷதம் வியாதியை நிச்சயம் குறைத்திருக்கிறது என்று அறிந்துகொள்ளுவோம். தவிர இந்த நிலைமை ஏற்படுவதற்குப் போதிய அவகாசம் ஏற்கனவே கொடுக்கப்பட்டிராவிட்டால், மேலும் அவகாசம் கொடுக்கப்பட்டால் இந்த அபிவிர்த்தி நிலைமை ஏற்படும். ஆனுல் வியாதி நீங்குவதில் அபிவிருத்தி காண்பது அதிகத் தாமதப்பட்டால் நாம் அறிய வேண்டியது வியாதியஸ்தர் நடத்தையில் (பத்தியக் கட்டுப்பாட்டில்) ஏதோ தவறு செய்திருக்கிருரென்ருே அல்லது வேறு எதுவோ குறுக் கிடுகிறதென்ருே அறியவேண்டியதாகும்.

## ஸ்லோகம் 256

இந்த நிலைமைகளுக்கு முற்றிலும் மாருக, வியாதியஸ்தர் வேறு புதிய நிலைமைகளையும், கவனிக்கப்பட வேண்டிய முக்கிய மான புதிய குறிகளையும் தெரிவிப்பாரானுல் — இது முன் கொடுத்த மருந்து ஹோமியோபதி சாஸ்திரத்தின் அடிப்படை யில் சரியானபடி தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதைக் குறிக் கும் — அவன் நல்ல மனமுடையவனுக இருந்தால் (நம்மைத் திருப்தி செய்து வைக்க வேண்டி) தனக்குச் சிறிது சௌக்கியம் என்று தெரிவித்தாலுங்கூட, (இது டியூபர்குலாஸிஸ் வியாதி யில் — சுவாச கோசங்களில் சிறங்குகள் ஏற்பட்டிருக்கும்போது ஏற்படலாம்) நாம் அவன் சொல்வதை நம்பக்கூடாது. ஆனுல் இதை உபாதி அதிகம்'' என்ற நிலைமையாகவே கருதவேண்டும்.

இது அவ்வாறுதான் என்பது அதன் பின் சிறிது காலத்தில் நிதரிசனமாகப் புலப்படும்.

## ஸ்லோகம் 257

அடிக்கடி சில மருந்துகளை பல கேஸ்களில் உபயோகிக்க சந்தர்ப்பம் ஏற்பட்டு அவைகளினுல் அதிகமாக நல்ல பலன்கள் ஏற்பட்டிருந்தாலுங்கூட ஒரு நல்ல வைத்தியன், இம்மாதிரி யான ஔஷதங்களை தன்னுடைய தொழிலில் அதிகம் உப யோகமுள்ளவை என்று வைத்துக்கொள்ளக்கூடாது. இவன் இவ்வாறு செய்வானுனல் அநேக சந்தர்ப்பங்களில் சில அபூர்வ மாக உபயோகப்படும் ஔஷதங்களை, இவைகள் தேவைப் படும்போது, உபயோகிக்காமலே விட்டுவிட ஏதுவாகும்.

## ஸ்லோகம் 258

மேலும் ஒரு உண்மையான வைத்தியன், தன்னுடைய தொழிலில், தான் ஏற்கனவே அவைகளை உபயோகித்து நல்ல பலன் கிட்டவில்லை என்பதை மனதில்கொண்டு, சில மருந்து களை உபயோகிக்காமலே இருக்கக்கூடாது. ஏற்கனவே (இவனுடைய தவறுதலினுலேயே) சரியானதாக இல்லாத மருந்தைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்து பலன் காணுததாலோ, அல்லது அது கெடுதலாக வேலை செய்ததாலோ அந்த மருந்து களே உபயோகமற்றவை என்று பின் ஒரு காலத்திலும் அவைகளை உபயோகிக்காமலேயே இருப்பது தவறு. ஒவ் வொரு கேசிலும் நமது பல ஔஷதங்களில் ஒரே ஒரு ஔஷதம்தான் சரிக்குச் சரி ஔஷதமாக இருக்கக்கூடும். ஆகவே இம்மாதிரி ஒதுக்கப்பட்ட ஔஷதங்கள் தேவைப்படும் போது இவனுக்கு சரியான ஔஷதம் கிடைக்காமலேபோகலாம்.

## ஸ்லோகம் 259

ஹோமியோபதி சிகிச்சையில், தேவைப்படுவதும், சரி யானதுமான ஔஷதம் மிக நுண்ணியதேயாதலின் சிகிச் சையின்போது வியாதியஸ்தனின் ஆகாரத்திலும் நடவடிக் கையிலும் ஔஷத மதிப்புள்ள எல்லா விஷயங்களும் நீக்கப்பட

வேண்டும். ஏனென்றால் இதர ஔஷதச் சரக்குகள் நமது சிறிய ஹோமியோபதி ஔஷதத்தை அமுக்கி விடாமலிருப்பதற்காகவே.

## ஸ்லோகம் 260

ஆகவே நீடித்த வியாதியில் பாதிக்கப்பட்டவர்கள் விஷயமாக, சரியாக விசாரணை செய்யவேண்டியது அவசியமாகும். ஏனெனில் இம்மாதிரியான ஆகாரக் கோளாறுகள், நடவடிக்கைத் தவறுகள், வியாதியை அதிகப்படுத்திக்கொண்டே இருக்கலாம். அது கவனிக்கப்படாமலேயேயும் இருக்கலாம்.

## ஸ்லோகம் 261

நீடித்த வியாதிகளில் நாம் ஔஷதம் கொடுக்கும்போது மிகவும் சரியான பத்தியபாகம் எதுவெனில் இம்மாதிரியாக வியாதியை சொஸ்தமாக்குவதற்கு இடைஞ்சல் செய்யும் விஷயங்களை நீக்குதலும், தேவையுள்ள இடத்தில் அதற்கு எதிரிடையாக உள்ளவைகளை கொடுத்தலுமாகும். குற்றமற்ற மனப் பயிற்சி, திறந்த வெளிகளில் உடற்பயிற்சி (நடத்தல், வேலை செய்தல்) ஒத்துக்கொள்ளும் புஷ்டியுள்ள ஆகாரங்கள், பானங்கள் முதலியன.

## ஸ்லோகம் 262

ஆனால் கிட்டிய வியாதிகளிலோ — மனத்தடுமாற்றம் ஏற்பட்டிருக்கிற நிலைமைகள் தவிர மற்ற சந்தர்ப்பங்களில் — தன் உள் உணர்வே தனக்குத் தேவையானதைத் தெரிவிக்கும். ஆகவே வியாதியஸ்தர் கேட்பதை கொடுக்கும்படி செய்வதும், அனுவசிய, கெடுதலான பதார்த்தங்களை கட்டாயப்படுத்திக் கொடுப்பதைத் தடுப்பதும், வைத்தியனின் முக்கிய கடமையாகும்.

## ஸ்லோகம் 263

ஆகார பானம் இவைகள் சம்பந்தமாய், கிட்டிய வியாதியில் அவஸ்தைப்படுபவன், விரும்புவது முக்கியமாக அவனுக்குத் தற்சமயம் சாந்தியளிக்கும் வஸ்துக்களாகவே இருக்கும்.

அவைகள் வேறு மருந்துகள் சம்பந்தப்பட்டதாக இருக்காது. ஏதோ இச்சைப்படுவதைக் கோருவதாக இருக்கும். இவ்வாறு கொடுக்கப்படும் வஸ்துவால் வியாதி சமனப்படுவது சிறிய அளவுக்குப் பாதிக்கப்பட்டாலும், சரியான ஹோமியோபதி ஔஷதம் கொடுக்கப்பட்டு, அதனல் விடுவிக்கப்படும் சக்தி அதையும் சரி செய்துவிடும். இது போலவே கிட்டிய வியாதிகளில் வியாதியஸ்தர் படுக்கும் அறையின் உஷ்ணமும் படுக்கைகளின் தன்மையும், வியாதியஸ்தனுடைய சௌகர்யத்திற்கு அமைக்கவேண்டும். அந்த சமயத்தில் அவனுடைய மனத்திற்கு யாதொரு அதிக அதிர்ச்சியும் இல்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

## ஸ்லோகம் 264

ஒரு உண்மையான வைத்தியனிடம், உண்மையான சக்தியுள்ள, மருந்துகளே இருக்கவேண்டும். அவைகள் சரியானபடி வேலை செய்யும் என்கிற நம்பிக்கை அவனுக்கு ஏற்படும்படியாக அவைகளின் தன்மை இருக்கவேண்டும். (அதாவது நம்பிக்கையான மருந்துகளையே உபயோகிக்க வேண்டுமென்பது).

## ஸ்லோகம் 265

வியாதியஸ்தனுக்குச் சரியான ஔஷதமே கொடுக்கப்படவேண்டுமென்று, அவனுடைய மனச்சாட்சி வற்புறுத்த வேண்டும். அவனுடைய மனச்சாட்சிக்குத் திருப்தி அளிக்கும் வகையில் அவனே சரியான ஔஷதத்தைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கவேண்டும்.

## ஸ்லோகம் 266

பிராணி வர்க்கத்திலும், தாவர வர்க்கத்திலுமுள்ள சரக்குகள், அவைகளின் சுய உருவத்தில் நல்ல சக்தியுடன் இருக்கின்றன.

## ஸ்லோகம் 267

சுதேச தாவர வர்க்கங்களின் சக்தியையும் பச்சையாகக் கிடைக்கக்கூடிய மூலிகைகளின் சக்தியையும் நாம் அடைய வழி வருமாறு: ஒரு விளக்கில் எரியக்கூடிய அளவு ஸ்பிரிட் சத்துள்ள திராவகம் சரிபாதியும் பச்சை மூலிகைகளின் சாறு சரிபாதியும் கலந்து வைக்கவேண்டும். இதை ஒரு பகல் ஒரு இரவு நன்ருக மூடியிட்ட பாட்டிலில் வைத்திருந்தால் அதிலுள்ள நார் போன்ற பதார்த்தங்கள் அடியில் தங்கிவிடும். இதில் மேலே உள்ள சுத்தமான திராவகத்தை தெளிவாக ஊற்றி வைத்துக்கொண்டு ஔஷதமாக உபயோகிக்கலாம். தாவரங்களின் சாறு புளித்துப் போகாமல் ஸ்பிரிட் என்னும் மதுசாரம் காக்கின்றது. இதனுல் அந்த மூலிகைகளின் முழு ஔஷத சக்தியும் (யாதொரு கெடுதலேயும் அடையாமல்) கிடைக்கின்றது. இதை எவ்வளவு காலத்திற்கு வேண்டுமாயினும் நன்ருக மூடியிட்ட பாட்டில்களில் வைத்து வைக்கலாம். ஆனுல் ஔஷதம் கெடாமலிருக்க சூரிய வெளிச்சம் படாத இடத்தில் வைத்து வைக்கவேண்டியது அவசியம்.

## ஸ்லோகம் 268

சில மூலிகைகள், பட்டைகள், விதைகள், வேர்கள் முதலியவை நமக்குப் பச்சையாக கிடைக்கமாட்டா. இவைகளே வாங்கும்போது புத்திசாலிகளான டாக்டர்கள், அவைகளேத் தூள்களாக வாங்கமாட்டார்கள். ஆனுல் அவைகள் உண்மையாக நாம் எதிர்பார்க்கும் சரக்குகள்தானு என்று தெரிந்துகொள்ளும் பொருட்டு, அவைகளே தூளாக்கப்படாத சுய நிலேமையில் வாங்கித்தான் உபயோகிக்கவேண்டும்.

## ஸ்லோகம் 269

ஹோமியோபதி வைத்திய முறையில், இது வரையில் கேள்விப்படாத முறையில் ஔஷதங்கள் தயார் ஆக்கப் படுகின்றன. இப்படி ஒரு அபூர்வமான முறையில் தயாரிக்கப்

படுவதால் ஒவ்வொரு சரக்கின் மூலத்திலுள்ள அதிசயமான ஔஷத நிலைமை வெளியாக்கப்படுகின்றது. இதனாலேயே ஹோமியோபதி ஔஷதங்கள் விசேஷ சக்தி வாய்ந்தவையாக இருக்கின்றன. அவைகளின் சாதாரண நிலைமையில் ஔஷதமாக உபயோகப்படும் என்று கருதப்படாத சில சரக்குகள் கூட இம்மாதிரியான ஹோமியோபதி முறைப்படி தயார் செய்யப்பட்டால், அவைகளின் உள்ளே மறைந்து கிடக்கும் அபூர்வ சக்தி வெளிப்பட்டு, உயிர் வர்க்கத்தின் சரீர சக்தியில் வேலை செய்து பிணிகளை நீக்குகின்றன. இவ்வாறு இந்த சரக்குகளுக்கும் அபூர்வமான சக்தி ஏற்படுவது, அவைகளின் அணுக்களை வேறு திட திரவ பதார்த்தங்களில் கலந்து, அரைப்பதின் மூலமோ, குலுக்குவதின் மூலமோ மறுபடியும் மறுபடியும் பிரிப்பதின் காரணமாகவேதான். இந்த முறைக்கு டைனமைசிங் (Dynamizing) போடன்டைசிங் (Potentising) என்று சொல்லும் வீரியப்படுத்துதல் ஆகும். இம்மாதிரி செய்யப்பட்ட ஔஷதங்களை டைனமைஸேஷன்ஸ் (Dynamizations) அல்லது போடன்ஸீஸ் (Potencies) அல்லது வீரியங்கள் எனப்படும். இப்படிப் பல வீரியங்களில் ஔஷதங்கள் செய்யப்படும்.

## ஸ்லோகம் 270

இம்மாதிரியாக ஔஷதங்களை வீரியப்படுத்துவதற்கு வீரியப்படுத்தப்பட வேண்டிய ஒரு ஔஷதத்தில் சிறிதளவு அதாவது ஒரு குன்றுமணி எடை எடுத்து அத்துடன் 100 குன்றுமணி எடை பால் சர்க்கரை மாவை (Sugar of milk) கலந்து, கீழே குறிப்பிட்டிருக்கிற முறைப்படி, மூன்று மணி நேரம் அரைக்கவேண்டும். இவ்வாறு மூன்று தடவைகள் செய்ய வரும் மாவில் ஔஷதச் சரக்கு பத்து லக்ஷத்தில் ஒரு பங்குதான் இருக்கும். கீழே குறிப்பிட்டிருக்கும் காரணங்களைக் கொண்டு, இந்த ஔஷதத்தில் ஒரு குன்றுமணி எடையை ஒரு பாகம் மதுசாரம் (alcohol) 4 பாகங்கள் டிஸ்டில்டு தண்ணீரும் கலந்த கூட்டில் 500 சொட்டுகளில் கரைத்துக் கொண்டு, இதிலிருந்து ஒரு சொட்டு ஒரு சுத்தமான பாட்டிலில் எடுத்துக்

கொள்ள வேண்டும். இந்த பாட்டிலில் 100 சொட்டுக்கள் சுத்தமான மதுசாரத்தை ஊற்றிக்கொண்டு 100 தடவை அந்த பாட்டிலே ஒரு கையால் பிடித்துக்கொண்டு ஒரு மிருதுவான இடத்தில் இடிக்க வேண்டும். இது முதல் தரமான ஔஷதம். இதைக்கொண்டு சிறிய சர்க்கரை உருண்டைகளை ஈரப்படுத்தி அவ்வாறு ஈரப்படுத்திய உருண்டைகளை ஒரு பிளாட்டிங் பேப்பர்மேல் உலர்த்தி பாட்டிலிலிட்டு மூடிவைத்துக்கொள்ள வேண்டும். இதுதான் முதலாவது வீரியம். இதிலிருந்து உயர்ந்த வீரியங்களைச் செய்ய, ஒரு சிறிய உருண்டையை எடுத்து வேறு ஒரு சுத்தமான பாட்டிலில் போட்டு, அதைக் கரைக்க ஒரு சொட்டுத் தண்ணீரும் ஊற்றி அத்துடன் 100 சொட்டுக்கள் நல்ல மதுசாரத்தையும் ஊற்றி முன்போலவே நூறு தடவை இடிக்க வேண்டும்.

இந்த ஔஷதத்தைக் கொண்டு மறுபடியும் முன்போல் சர்க்கரை உருண்டைகளை ஈரப்படுத்திக்கொண்டு, பிளாட்டிங் பேப்பரில் உலர்த்தி வேறு பாட்டிலில் போட்டுக்கொண்டு; இது இரண்டாவது வீரியம் என்று வைத்துக்கொள்ள வேண்டும். இதுபோலவே மேலும் மேலும் வீரியங்களைச் செய்து 29-வது வீரியம் வரையில் செய்ய வேண்டும். இதிலிருந்து 30-வது வீரியத்தையும் செய்து, சர்க்கரை உருண்டைகளில் ஏற்றி அவைகளை பாட்டிலிலிட்டு வைத்துக்கொண்டால் இது சரியான ஔஷதம் ஆகும்.

இம்மாதிரி செய்யப்படும் முறையால்: ஔஷதச் சரக்குகள் ஔஷதங்கள் ஆகின்றன. இவைகள்தான் வியாதியை நிச்சயமாக வெல்ல வல்லவை. இவைகளைக் கொடுத்து ஏற்கனவே உள்ள வியாதியைப் போன்று ஒரு செயற்கை வியாதியை உண்டாக்கி, உள்ளே இருக்கும் தாதுக்கள் சுத்தமாக்கப்படுகின்றன. இம்மாதிரியான முறையால், அப்படி ஔஷதங்கள் சரியாக செய்யப்படுமானல், ஔஷதச் சரக்கில் ஒரு விசேஷ மாறுதல் உண்டாகின்றது. ஔஷதச் சரக்காயிருந்த போது சாதாரணமாக இருந்தது. இவ்வாறு செய்யப்பட்ட பின் அந்த ஔஷதத்தின் உயிர் நாடியே வெளியே கொண்டுவரப்படுகின்றது. இதன் சக்தி நம் கண்களுக்குப் புலப்படாவிட்டாலும், மிக அதிகமாக சக்தி வாய்ந்தவை என்பது உண்மையான விஷயமாகும்.

## ஸ்லோகம் 271

ஒரு வைத்தியன் தனக்குத் தேவையான ஔஷதங்களைத் தன் கைகளினுலேயே செய்துகொள்வது உத்தமம். அவன் அப்படிச் செய்யப் பச்சை மூலிகைகளையே உபயோகிக்கலாம்; அது மிகவும் சிறிய அளவே தேவைப்படும். ஒரு கலுவத்தில் சில குன்றுமணி எடை சரக்கை எடுத்துக்கொண்டு முன் சொன்னபடி மூன்று முறை அறைத்து, பத்து லக்ஷத்தில் ஒரு பாகத்திற்குக் கொண்டு வந்து அதிலிருந்து ஒரு சிறிய பாகத்தை எடுத்துக்கொண்டு, குலுக்குவதின் மூலம் வீரியத்தை (முன் சொன்னபடி) உயர்த்திக்கொள்ள வேண்டியது. இதே முறைதான் உலர்ந்தவையானுலும், எண்ணைப் பசையுள்ள தானுலும் எல்லா சரக்குகளுக்கும் கையாளப்படவேண்டும்.

## ஸ்லோகம் 272

மேலே கூறியபடி செய்யப்பட்ட சிறிய சர்க்கரை உருண்டைகளில் (Globules) ஒன்று. ஒரு சாதாரண சமீபத்திய வியாதியில், வியாதியஸ்தரின் நாக்கில் வைக்கப்படுவது ஒரு வேளை ஔஷதமாகும். இப்படிச் செய்வதால் சரீரத்திலுள்ள சில நரம்புகள் அதனுல் தொடப்படுகின்றன. இதேமாதிரியான ஒரு உருண்டையை நசுக்கி அத்துடன் சிறிது பால் சர்க்கரை மாவையும் (sugar of milk) கலந்து, சுமார் ஒரு டம்ளர் சுத்தமான தண்ணீரில் கலக்கி, ஒவ்வொரு முறை கொடுப்ப தற்கு முன்பும் நன்ருகக் கலக்கிக் கொடுத்தால், இதற்கு அதிக சக்தியுண்டு, பல தினங்களுக்கும் வேலை செய்யும். ஒவ்வொரு வேளை ஔஷதமும், அது எவ்வளவு சிறியதாக இருந்தாலும், அது சரீரத்தின் பல நரம்புகளைத் தொடுகின்றது.

## ஸ்லோகம் 273

எந்தக் கேசுக்கும் சிகிச்சை அளிக்கும்போது ஒரு தடவையில் ஒரே ஒரு மருந்தைத் தவிர அதற்கு மேல் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. ஒரு தனி மருந்துச் சரக்கைத் தவிர வேறு பலவிதமாய் வேலை செய்யும் பல மருந்துகளை ஒன்ருய்க் கூட்டிக் கொடுப்பது எந்த முறையில் உகந்தது என்ரே, அது

இயற்கைக்கு ஒத்திருக்கிறதா என்பதோ நினைத்துப் பார்க்கக் கூட எனக்கு சரி என்று தோன்றவில்லை. இம்மாதிரியான வழக்கம் ஹோமியோபதியில் அனுமதிக்கத்தக்கதல்ல. இந்த ஒரே உண்மையான, இலகுவான, இயற்கை வைத்திய முறையில் இது அனுமதிக்கப்படமாட்டாது.

## ஸ்லோகம் 274

ஒரே ஔஷதம் தனியாகவும் வேறு மருந்துகளுடன் கலக்கப்படாமலும் கொடுக்கப்படுவதில் எதிர்பார்க்கும் பலன் கிடைத்து விடுகிறது என்பதை ஒரு உண்மையான ஹோமியோபதி வைத்தியன் தெரிந்து கொண்டிருப்பதால், அவன் "பல மருந்துகளைக் கூட்டிக் கொடுப்பது தவறு" என்னும் உண்மையைக் காப்பாற்ற உறுதி கொள்ளவேண்டும். தவிர ஔஷத நிர்ணயம் என்னும் புருவிங்கில் ஒவ்வொரு தனி மருந்துச் சரக்காவே நிரூபணம் செய்யப்பட்டிருப்பதால், இரண்டோ அதற்கு மேற்பட்ட கூட்டு ஔஷதம் எப்படி மனித சரீரத்தில் வேலை செய்யும் என்பதை அவன் கண்டுகொள்ள முடியும்? தவிர் நமது ஔஷதங்கள் குறிகளுக்குத் தகுந்தபடி தனியாகக் கொடுக்கப்பட்டால் அவைகள் வியாதியிலுள்ளது போலவே குறிகளுள்ள வேறு ஒரு புது செயற்கை வியாதியை உண்டுபண்ணி முதல் வியாதியை சொஸ்தம் செய்கின்றது. ஆனால் இம்மாதிரி பல கூட்டு ஔஷதங்களை உட்செலுத்தினால் வேறு பல குளறுபடிகள் ஏற்படலாம்.

## ஸ்லோகம் 275

ஒரு குறிப்பிட்ட வியாதிக்குச் சரியான ஹோமியோபதி ஔஷதத்தைத் தேர்ந்தெடுத்து விடுவது மாத்திரம் போதாது. அத்துடன் எந்த அளவு, எவ்வளவு சிறிய அளவில் அந்த ஔஷதத்தைக் கொடுக்க வேண்டுமென்பது மற்றுமொரு விஷயம். மிகவும் அதிகமான அளவில் கொடுத்தால், அது சரியான ஔஷதமாக இருந்து நல்ல பலனை ஏற்படுத்தினால்கூட அது ஏற்படுத்தும் நிலைமையில் அனாவசியமாக அதிக கடுமையாகி, சரீரத்தில் பலவீனமுற்ற பாகங்களை மேலும் அதிக பலவீனமாக்கலாம்.

## ஸ்லோகம் 276

இந்தக் காரணத்தினுல், ஒரு ஔஷதம் ஹோமியோபதி முறைப்படி சரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தாலும், அதிக அளவில் கொடுத்தால் அதன் ஹோமியோபதித் தன்மையாலும். உயர்ந்த வீரியத்தாலும் அது கெடுதலே ஏற்படுத்தலாம். வீரியப் படுத்தப்படாத சாதாரண ஔஷதம் அதே அளவில் கொடுக்கப் பட்டு அது செய்யக்கூடிய கெடுதலேவிட வீரியப்படுத்தப்பட்ட அதே ஔஷதம் அதிக கெடுதலே ஏற்படுத்தலாம்.

சரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஹோமியோபதி ஔஷதம், அதிக அளவில் கொடுக்கப்பட்டாலும், அல்லது அடிக்கடி கொடுக்கப்பட்டா லும், அதிகமான கஷ்டத்தைக் கொடுக்கும். இவை சில சமயங்களில் வியாதியஸ்தரின் உயிருக்கே அபாயத்தை உண்டாக்குவதுடன், அனேக சந்தர்ப்பங்களில் வியாதியை சொஸ்தமாக்க முடியாமலே கூட செய்து விடுகின்றன. அவை முதல் வியாதியை அறவே ஒழித்துவிடும். அப்படி ஒழிப்பதில், சரீரத்தின் சக்தியையும் அடியோடு ஒழித்து, இந்த மாதிரியான ஔஷதம் வேலே செய்ததால் அவனே முதல் வியாதி சொஸ் தம் ஆனுலுங்கூட அதிகமான செயற்கை வியாதியை உண்டுபண்ணி அது சொஸ்தம் ஆகக் கூடாததாக ஆகிவிடுகிறது.

## ஸலோகம் 277

இக் காரணம் பற்றியே, ஔஷதம் மிகவும் சிறிய அளவில் இருப்பதுதான் விரும்பத்தக்கது, அது போதுமானது. தவிர சரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஹோமியோபதி ஔஷதமாயின் அது மிகமிகச் சிறிய அளவில்தான் கொடுக்கப்படவேண்டும்.

## ஸ்லோகம் 278

நிச்சயமாகவும், மிருதுவாகவும் பயனளிக்கும் வகையில் இருக்கக்கூடிய மிகச் சிறிய அளவு எது என்னும் பிரச்னே இங்கே எழுகிறது. ஹோமியோபதி முறைப்படி ஒரு கேசுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொரு ஔஷதமும், சரியாக வியாதியை சொஸ்தம் செய்ய எவ்வளவு சிறிய அளவில் இருக்க

வேண்டும் என்பதே கேள்வி. இந்தப் பிரச்சினையை தீர்க்க, சர்ச்சைகளும், அபிப்பிராயங்களும் பிரயோஜனப்படமாட்டா. ஒவ்வொரு கேசிலும் இதை முன்கூட்டியே, அறிந்து கொள்வதும் முடியாத காரியமாகும். சரியான பரீட்சை, ஒவ்வொரு வியாதியஸ்தரின் சகிப்புத்தன்மையை ஆராய்தல், சரியான அனுபவம், இவையே, ஒவ்வொரு தனிக் கேசிலும் நிச்சயம் செய்யும். வியாதியுற்ற சரீர பாகங்களை மாத்திரம் தாக்கும் அல்லோபதி ஔஷதங்களை அதிகமாகக் கொடுத்து வியாதியை சொஸ்தம் செய்துவிடலாம் என்று நினைப்பது அறிவீனம். இவை ஹோமியோபதி முறைபோல வியாதியைத் தொடுவதில்லை. ஆனால் சரியான அனுபவம் ஹோமியோபதி முறைப்படி வியாதியை சொஸ்தம் செய்ய மிகச் சிறிய அளவே ஔஷதம் தேவைப்படுகிறது என்பதை நிரூபிக்கிறது.

## ஸ்லோகம் 279

இம்மாதிரியான அனுபவத்தினால் நாம் தெரிந்துகொள்ளும் பொதுவான உண்மை ஒரு வியாதி நீடித்ததாக இருப்பினும், சில உறுப்புகள் அதிகமாகக் கெட்டுவிட்டிராத வகையில், சிகிச்சை யளிக்கும்போது, வேறு ஔஷதச் சரக்குகளை வியாதியஸ்தரிடமிருந்து விலக்கி விட்டால், நன்றாக வீரியப்படுத்தப்பட்ட ஹோமியோபதி ஔஷதத்தில் மிகமிகச் சிறிய அளவே போதுமானதாக இருக்கும். இதுவே அந்த வியாதியை சொஸ்தம் செய்ய ஆரம்பித்துவிடும்.

## ஸ்லோகம் 280

எந்த ஔஷதம், புதிதாக வேறு உபத்திரவமான குறிகளை உண்டாக்காமல் உபயோகமாக இருக்கிறதோ அதைத் தொடர்ந்து உபயோகிக்கலாம்; அதாவது வியாதி சமனம் ஏற்பட்டுக்கொண்டே இருக்குமளவும், சிறுகச் சிறுக உயர்ந்த வீரியங்களில் உபயோகிக்க வேண்டும். இம்மாதிரியான பொதுவான அபிவிர்த்தியுடன் ஏற்கனவே பல காலங்களுக்கு முன்பு ஏற்பட்டிருந்த வியாதியில் ஒன்றோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டதோ மறுபடியும் தோன்றுவதாக (ஆனால் அவ்வளவு

கடுமையாக இல்லாமல்)த் தெரியவருமானுல், குறிப்பிட்ட வியாதி சொஸ்தமாக ஆரம்பிக்கிறது என்பதற்கு அறிகுறி யாகும். இதுவே ஜீவசக்தி உணர்ச்சி ஊட்டப்பட்டு விட்டது என்றும், இனி அதற்கு வேறு யாதொரு உதவி இல்லாமலேயே வியாதியை சொஸ்தமாக்கிக் கொள்ளும் என்றும் அறிய வேண்டும். தவிர இப்பொழுது சாதாரணமாக ஏற்பட்ட வியாதி சொஸ்தமாகி விட்டது என்றும், பாக்கி இருப்பது ஔஷதத்தினுல் ஏற்பட்ட வியாதியின் ஒரு பாகமே என்றும் இதற்குத்தான் ஹோமியோபதி உபாதி அதிகம் என்று பெயர்.
(ஸ்லோகம் 247, 248 பார்க்கவும்)

## ஸ்லோகம் 281

இதை நாம் நிச்சயம் செய்துகொள்ள, வியாதியஸ்தருக்கு எட்டு, பத்து அல்லது பதினைந்து தினங்களுக்கு யாதொரு ஔஷதமும் கொடுக்காமலிருக்க வேண்டும். வேண்டுமாயின் யாதொரு ஔஷதமுமில்லாத சில சர்க்கரை உருண்டை களேயோ, பால் சர்க்கரை மாவையோ கொடுக்கலாம். கடைசீ யாக இருக்கக்கூடிய சில குறிகள் ஔஷதத்தினுல் ஏற்பட்டு ஆனுல் வியாதியின் குறியை ஒத்திருந்தாலும் அவை சில தினங் களிலோ சில மணி நேரங்களிலோ மறைந்து போகும். இம் மாதிரி ஔஷதம் கொடுக்காத நாட்களிலேயே, வியாதியின் சின்னங்கள் யாதொன்றும் தோன்ருமலிருக்குமாயின், வியாதி ஒருக்கால் சொஸ்தம் ஆகிவிட்டது என்று நினைக்கலாம். ஆனுல் இக்காலங்களின் பிற்பகுதியில் முதல் வியாதியின் சில சின்னங் கள் தோன்றுமாயின், பழைய வியாதி பூரணமாக சொஸ்தம் ஆகவில்லை என்றும், இன்னமும் சிறிது பாக்கி இருக்கிறது என்றும் அறிந்து, ஏற்கனவே தெரிவித்தபடி மேலும் உயர்ந்த வீரியத்தில் அதே ஔஷதத்தைக் கொடுக்கவேண்டும். இவ் வாருகவே மேலும் மேலும் உயர்ந்த வீரியங்களிலேயே ஔஷதம் கொடுக்கப்படுதல் வேண்டும்.

## ஸ்லோகம் 282

நீடித்த வியாதிகளில் முதல்வேளை ஔஷதமே ஒரு ஹோமி யோபதி உபாதி அதிகத்தை ஏற்படுத்துமாயின், அது கொடுக்

கப்பட்ட ஔஷதத்தின் அளவு அதிகமானது என்பதை நிச்சயப் படுத்துவதாகும், ஹோமியோபதி உபாதி அதிகம் என்பது ஏற்கனவே உள்ள வியாதிக் குறிகள் அதிகமாவதாகும்.

## ஸ்லோகம் 283

இயற்கையை அனுசரித்து நடப்பவனுன, ஒரு உண்மையான வைத்தியன், ஹோமியோபதி ஔஷதத்தை சரியானபடி தேர்ந்தெடுத்து, அதைச் சரியான அளவில், (வீரியத்தில்) எல்லா விதத்திலும் ஒற்றுமை உள்ளதுதானு வென்று பார்த்தே மிகச் சிறிய அளவிலேயே உபயோகப்படுத்துவான். அப்படி இல்லாமல், வேறு பலவீனத்தினுல், சரியாக இல்லாத வேறு ஔஷதத்தைக் கொடுத்து விடுவானுயின், அதனுல் ஏற்படும் கோளாறு அதிகமாயிராது — ஏனெனில், அவ்வாறு சரியாக இல்லாத ஔஷதத்தினுல் ஏற்படும் கோளாறு மிகவும் குறைந்த அளவிலேயே இருக்குமாதலின், அவனுடைய ஜீவசத்தி, அக் கோளாரைச் சரி செய்துவிடும்.

## ஸ்லோகம் 284

நாக்கு, வாய், அன்னகோசம் இவைகளில் மருந்து பட்டாலே அது உடலில் ஊறி வேலை செய்ய ஆரம்பித்துவிடும். ஆகவே நாக்கில் மருந்தை போட்டு உண்பது சரியான மார்க்கமே. அத்துடன் நாசியின் உட்புறம், சுவாச உறுப்பு களுங்கூட மருந்தின் சக்தியை கிரகித்துக்கொண்டு வேலை செய்யும். அதனுல் மருந்தை முகர்ந்து பார்த்தாலே போது மானது. தவிர சரீரத்தின் மேல் தோலின் எல்லா பாகமுமே மருந்தை ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கின்றது. ஆனுல் உள்ளுக்கு மருந்து கொடுப்பதுடன் மேல் பூச்சையும் ஒரே சமயத்தில் செய்யலாம்.

## ஸ்லோகம் 285

இம்முறையினுல் மிகவும் நாட்பட்ட வியாதிகளில் உள்ளுக்கு ஔஷதம் கொடுப்பதுடன் கூட வெளிப்பூச்சுகளின் உதவியினுல் வியாதியை விரைவினில் சொஸ்தம் செய்யலாம். உள்ளுக்கு

செலுத்தும் அதே ஔஷதங்களை முதுகு, கைகள், பாதங்கள் இவைகளில் தேய்ப்பதின் மூலம் வியாதிகள் சீக்கிரமாக சொஸ்த மாவது காணப்பட்டிருக்கின்றது. ஆனால் அப்படி ஔஷதங்கள் தேய்க்கப்படும் இடங்கள் வலியுள்ள பாகங்களாகவோ, வியாதி யுற்ற பாகங்களாகவோ அல்லது சரும உபாதிகள் உள்ள பாகங்களாகவோ இருக்கக்கூடாது.

## ஸ்லோகம் 286

காந்த சக்தி, மின்சார சக்தி, முதலியவை கூட நம் சரீத் தில் வேலை செய்ய வல்லவை என்பதுடன் கூட அவை ஹோமி யோபதி சாஸ்திரத்திற்கு இணங்கவும் வேலை செய்யக்கூடிய வையே, இவைகளை வேறு ரூபங்களில் ஆக்கிக்கொண்டாலும் சரி அல்லது, வெளி உபயோகமாகச் செய்தாலுஞ்சரி பலன் ஒன்றுதான். உணர்ச்சி பாதிக்கப்பட்ட உபாதிகள், அசாதா ரணமான உணர்ச்சிகள், தன்னிச்சையின்றி ஏற்படும் தசை யசைவுகள் முதலியவைகளையும் மற்றும் பல உபாதிகளையும் அவை நிவர்த்திக்கும். ஆனால் இவைகளை சரியானபடி உபயோகிக்கும் வழி இது வரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. தற்சமயம் சில யந்திரங்களைக்கொண்டு அவைகளை உபயோகிப் பது தற்காலசாந்தியாகப் பலன் தந்தாலும், அவைகளின் உபயோகத்தினுல் வியாதியஸ்தர்களுக்குக் கெடுதலே உண்டாகும்.

## ஸ்லோகம் 287

காந்த சக்தியை வியாதியை நிவர்ப்பிப்பதற்கு உபயோகிக்க வேண்டுமாயின் அதை மெட்டீரியா மெடிகா ப்யூரா என்னும்

---

[குறிப்பு:—சிசுக்களுக்கு ஔஷதம் கொடுப்பது, அவைகளின் தாயாருக்கோ பால் கொடுக்கும் தாதிமார்களுக்கோ, கொடுப்பதின் மூலம் சுலபமாகும். அவர்களுக்குக் கொடுக்கப்படும் வீரியப்படுத்தப்பட்ட ஔஷதம், அவர் களால் உற்பத்தி செய்து சிசுவுக்கு ஊட்டப்படும் தாய்ப் பாலின் மூலமாக சிசுவை அடைகிறது.]

நூலில் வடக்கு தெற்கு முனைகளுக்குக் கூறியது போல உபயோகித்தல் வேண்டும். இவ்விரண்டு முனைகளும் அதிக சக்தி வாய்ந்தவைகளாக இருந்தாலுங்கூட அவை ஒன்றுக் கொன்று நேர் எதிரிடையானவை. குறிகளுக்குத் தகுந்தபடி எந்த முனை தேவையோ அதை உபயோகித்துக்கொள்ள வேண்டும். ஔஷத சக்தியின் தேவைக்குத் தகுந்தபடி அதைத் தொடும் கால அளவை நிர்ணயித்துக்கொள்ளவேண்டும். அதிகமாக உபயோகிக்கப்பட்டு விட்டால் இதற்கு முறிவாக சரீரத்தில் ஒரு பாலீஷ் செய்யப்பட்ட துத்துநாகத் தகட்டை வைப்பது போதுமானதாக இருக்கும்.

## ஸ்லோகம் 288

இந்த இடத்தில் மெஸ்மர் என்பவரால் கண்டுபிடிக்கப் பட்ட மெஸ்மெரிஸம் என்று சொல்லப்படும் ஜீவ வசீகர சக்தியைப் பற்றியும் குறிப்பிட விரும்புகிறேன். இதுவும் பிணி நீக்கும் சக்தி சிலவற்றை உடைத்ததாக இருக்கிறதென்றாலும், மற்ற எல்லாப் பிணி நீக்கும் சாஸ்திரங்களையும் விட முற்றிலும் வேறுபட்டதாக இருக்கின்றது, இது உண்மையில் உபயோக மானது. கடவுளால் மானிடர்க்கு அளிக்கப்பட்டிருக்கும் மிகவும் உயர்வான விஷயம் ஆகும். இதனால் ஒரு வியாதியுற்றவரின் சரீரத்தை ஒரு நல்ல மனமுடையவர் தொட்டோ, தொடாமலோ ஜீவசக்தியை செலுத்த முடியும். இதனால் ஜீவசக்தி பலமிழந் திருக்கும் வியாதியஸ்தரின் சரீரத்தில் நல்ல பலமுள்ள ஜீவ சக்தியுடையவர், சிறிது ஜீவசக்தியை உட்செலுத்தி வியாதி சொஸ்தமாவதற்கு உதவலாம். தவிர வியாதியுற்றவரின் ஜீவ சக்தி சரீரத்தின் ஒரு இடத்தில் அதிகத் தேக்கமாகவும் வேறு இடத்தில் குறைவாகவும் இருப்பின், மெஸ்மெரிஸத்தினால் செய்யப்படும் சில அங்க அசைவுகளினால்—சரீரத்தின் ஜீவ சக்திகள் சரீரம் முழுவதும் ஒரே சீராக அமையும்படி செய்ய உதவும்.

இவ்வாறு ஜீவசக்திக்கு உதவ முன் வருபவர்கள், தாங்கள் நல்ல மனது உடையவர்களாகவும், தன்னலமற்றவர்களாகவும், பிறர் நன்மையில் கருத்து உடையவர்களாகவும், சரீர மன சுத்தமுடையவர்களாகவும் இருத்தல் அவசியம்.

## ஸ்லோகம் 289

இதைத் தவிர மெஸ்மெரிஸத்தை வேறு விதமாக உபயோகிப்பதின் மூலம், மயக்கத்தில் இருப்பவரை எழுப்பவும், இறந்து போனவரைப் போல் இருப்பவரை உயிர்ப்பிக்கவும் உதவும். மெஸ்மெரிஸம் செய்பவர் தன் உள்ளங்கைகளினுல் வியாதியுற்றவரின் சரீரத்தைத் தொடாமல், ஆனுல் ஷி சரீரத்திலிருந்து சுமார் ஒரு அங்குல தூரத்தில் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை ஒரே சீராக தடவுவது போல (ஆனுல் சரீரத்தைத் தொடாமல்) இழுப்பதின் மூலம் சிகிச்சை அளிக்கலாம். இதை எவ்வளவுக்கெவ்வளவு வேகமாகச் செய்கிருரோ அவ்வளவுக்கு அதிகமான சக்தி விடப்படும். உதாரணமாக, மன அதிர்ச்சியினுல் திடீரென்று மாதவிடாய் அமுக்கப்பட்டு, அந்த ஸ்திரீ இறந்தது போல் மயக்கமுற்றுக் கிடக்கையில், சரீரத்தின் இரத்தம் முழுவதும் மார்பில் அடைபட்டு இருக்கும்போது இந்த சிகிச்சை இரத்த ஓட்டத்தைச் சரிசெய்து உடனே பலன் அளிக்கும். இதே போல அவ்வளவு வேகமில்லாத மிருதுவான சிகிச்சை, அமைதியற்ற தன்மை, தூக்கமில்லாமை முதலியவற்றை நிவர்த்தி செய்யும்.

## ஸ்லோகம் 290

நல்ல மனமுடையவர்கள் சரீரத்தைத் தேய்ப்பதின் மூலம், நீண்டகால வியாதியினுல் பலமிழந்தவர்களுக்கும், சரீரம் இளைத்தவர்கள், சீரணக் கோளாறு உள்ளவர்கள் முதலியவர்களுக்கு சௌகர்யம் செய்ய முடியும். இதில் உள்ள விஷயம் உண்மையிலேயே மெஸ்மெரிஸ தத்துவத்தை அடிப்படையில் கொண்டதே; ஆகவே மிகவும் அதிகமாக இதை உபயோகிப்பது, அதிலும் அதிக உணர்ச்சி உடைய நபர்களுக்கு உபயோகிப்பது கூடாது.

## ஸ்லோகம் 291

சுத்தமான தண்ணீரில் ஸ்னனம் செய்வது தற்கால சாந்தியாக, அடிக்கடி தோன்றி மறையும் வியாதிகளிலும், கிட்டிய நீடித்த வியாதிகளிலும், பிரயோஜனப்படுகிறது. வெது வெதுப்பான நீரில் ஸ்னனம் செய்வது நரம்புகளுக்கு உணர்ச்சியூட்டும். இது தற்கால சாந்தியாக இருந்தாலும் இதுவும் உபயோகமுள்ளதே. இவைகளுடன் ஹோமியோபதி சிகிச்சையும் அளித்தால், கடுமையான கேசுகளிலும், நிரந்தர பலனுக்கும் ஏதுவாகும்.

(முற்றும்)





எங்களால் பிரசுரிக்கப்பட்டு விற்பனைக்குத் தயாராக இருக்கும் ஹோமியோபதி வைத்திய நூல்கள்

[தமிழில்]

**ஹோமியோபதி மெட்டீரியா மெடிகா:**

| | |
|---|---|
| இரண்டு பாகங்கள் கொண்டது மொத்தம் சுமார் 1000 பக்கங்கள், டாக்டர் V.R. மூர்த்தி அவர்களால் எழுதப்பட்டது | ரூ. 20—0—0 |

**ஹோமியோபதி சிகிச்சை களஞ்சியம்:**

| | |
|---|---|
| (1-ம் பாகம்) | ரூ 10—0—0 |

**பன்னிரு தாதுக்கள் என்ற பயோகெமிஸ்டிரி வைத்திய முறை:**

| | |
|---|---|
| இம்முறையின் வரலாறு, ஒளஷத குணம் வியாதிகளுக்கு சிகிச்சை முதலியவை அடங்கியது | ரூ. 2—0—0 |

**ஆரோக்கிய மார்க்கம்:**

| | |
|---|---|
| ஆரோக்கிய மார்க்கமும், சுகவாழ்வுக்கு அனுசரிக்க வேண்டியவைகளும், ஹோமியோ பதியின் தத்துவசாரமும் | ரூ. 0-12—0 |
| தாய் திராவகங்களின் மெட்டீரியா மெடிகா | 0—8—0 |
| தலைவலிக்கு சிகிச்சை | 0—6—0 |
| முறை சுரம் | 0—6—0 |
| டைபாய்டு சுரம் | 0—6—0 |
| பெரிய அம்மை | 0—6—0 |
| ஹோமியோபதி இஞ்சக்ஷன் சிகிச்சை | 0—4—0 |
| காலரா | 0—4—0 |
| பிளேக் | 0—2—0 |
| நாஷ்லீடர்ஸ் | அச்சில் |
| ஹானிமெனின் ஆர்கனுன் | 3—0—0 |

புத்தகங்கள் எங்கள் ஆபீசிலும், எல்லா சுதேசமித்திரன் புக்ஸ்டால்களிலும் கிடைக்கும்.

**இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்,**

கும்பகோணம் .... மதருஸ்

